# ஜெயகாந்தன் முதல் சிவசங்கரி வரை



கற்க வெளியீடு

பூவை. எஸ். ஆறுமுகம்

தமிழ் இலக்கியத் திறனாய்வு வரிசை : 2

# 'ஜெயகாந்தன்' முதல் 'சிவசங்கரி' வரை :

ஆசிரியர் :

பூவை எஸ். ஆறுமுகம்

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
154, டி. டி. கே. சாலை, சென்னை-600 018.



# நூல் விவர அட்டவணை :

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | 'ஜெயகாந்தன்' முதல் 'சிவசங்கரி' வரை : 'Jayakanthan' Muthal 'Sivasankari' Varai : |
| பொருள் | : | திறனாய்வு |
| ஆசிரியர் பெயர் | : | பூவை எஸ். ஆறுமுகம் |
| உரிமை | : | ஆ. அகிலாண்டம் |
| | : | பூவை எஸ். ஆறுமுகம் |
| வெளியீடு | : | சைவ சித்தாந்தக் கழகம், சென்னை-18. |
| பதிப்பாண்டு | : | அக்டோபர், 1997. |
| நூலகக் குறியீட்டு எண் | : | 031, 3 : g N9 N97 |
| வெளியீட்டெண் | : | 1973 |
| மொழி | : | தமிழ் |
| நூலின் அளவு | : | கிரௌன் |
| தாள் | : | 11. 6 Kg |
| கட்டமைப்பு | : | அட்டைக்கட்டு |
| அச்சு எழுத்து | : | 10 புள்ளிகள் |
| மொத்த பக்கங்கள் | : | 4+208 |
| விலை | : | ரூ. 45-00 |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீ துர்க்கை பிரிண்டிங் பிரஸ், சென்னை-17. |

# பதிப்புரை :

இலக்கியம், சமயம் போன்ற நூல்களின் ஆய்வினை, முன்னரே கழகம் வெளியிட்டுள்ளது. தற்போது, நாவல் களின் ஆய்வினை வெளியிடும் வகையில், 'ஜெயகாந்தன்' முதல் 'சிவசங்கரி' வரை : வெளி வருகின்றது.

இந்நூலாசிரியர் பூவை எஸ். ஆறுமுகம் அவர்கள், திருச்சி அர்ச் சூசையப்பர் கல்லூரியில் பி.ஏ. படித்து முடித்ததும், 'பொன்னி'யில் இலக்கியப் பணியினை ஆரம்பித்தார். பின்னர் 'உமா'வின் பொறுப் பாசிரியராகப் பொறுப்பேற்று, இதன் வழி, இலக்கிய ஆய்வுகள் பல செய்தார். இவ்வாய்வில் வெற்றியும் பெற்றுத் தனி முத்திரையும் பதித்துள்ளார். இதன் நற்புலன்தான், இந்த இலக்கியத் திறனாய்வு வரிசை. இவ் வரிசையில், முதலில் 'கல்கி முதல் அகிலன் வரை' எனும் நூல் வெளிவந்தது. அதனை யடுத்து 'ஜெயகாந்தன்' முதல் 'சிவசங்கரி' வரை: எனும் இந்நூல் வெளிவருகின்றது.

இவ்வாய்வில், பத்துப் பேருடைய நாவல்களின் ஆய்வு அடங்கியுள்ளது. ஒவ்வோர் ஆய்வும் படித்துப் பாதுகாக்க வேண்டிய முறையில் அமைந்துள்ளது.

இவ்வாசிரியர், தமிழக அரசின் முதற் பரிசினை மூன்று முறை பெற்றுள்ளார். அந்த வகையில் இவ்வாய்வு நூலும் பலரின் பாராட்டுதலையும் பெறும் என நம்புகிறோம்.

இப்போது, நம் 'பூவை' பேசுகின்றார் : 'உங்கள் அன்புப் பூவையின் 72வது பிறந்த நாள் விரைவிலேயே விழக்கோலம் பூணவிருக்கின்ற நல்ல நேரத்திலே, இந்நூல் வெளியிடுவதில் நாங்கள் மெத்தவும் மகிழ்கிறோம் !...

கழகம் வெளியிடுகின்ற நூலினை வாசக அன்பர்கள் வரவேற்பதுபோல், இந்நூலினையும் வரவேற்பார்கள் என்பது உறுதியே.

**—சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்**



# உள்ளுறை

# தோரண வாசல் :

## படைப்பின் விளையாடலில் மானுடம் :

படைப்புச் சக்தியின் புதிர் விளையாட்டில், சோதனைப் பண்பின் விதியாக அமைந்த வாழ்க்கை என்னும் கூத்து அரங்கத்திலே, அரிதான—மிகவும் அரிய தான மானுடப்பிறவி என்பது கிடைத்தற்கரியதும் பெறற்கரியதுமான ஓர் அருமையான நல்வாய்ப்பாகவே அமைகிறது ; அமைக்கப்படுகிறது !

வாழ்க்கை என்னும் படியான ஆடுகளம், மனிதனுக்குக் கிடைத்துவிட்டால், பின், அவன் தனக்கு வாய்ப்பாகக் கிட்டிய நாடக மேடையிலே ஆடாமல், கூத்து ஆடாமல், கூத்தாடாமல் என்ன செய்வான், பாவம் ? இவ்வாறு மனிதன் ஆடும் போது சிருஷ்டியின் சூத்திரக் கயிறு அவனைச் சுற்றி விதியாகப் பின்னி, வினையாகப் பிணைந்து அவனை ஆட்டுவிக்கும் ரகசியத்தை அவன் அறிவது கிடையாது ; அவனால் அறிந்திடவும் முடிவதில்லை !—ஏன், தெரிகிறதா?— அதுதான் படைப்பின் ரகசியம் !—அதுவேதான், படைப்பின் புதிருங்கூட !

வாழ்க்கை என்றால் சோதனை ! சோதனை என்றால் வாழ்க்கை !— வாழ்க்கையின் சோதனையிலே, அல்லது, சோதனையின் வாழ்க்கையிலேதான், மனிதன் விளையாடுகிறான் ; விளையாட்டுக் காட்டுகிறான் !

மனிதனின் இவ்விளையாட்டிலேதான், அவனுக்கென அமைந்த—அமைக்கப்பட்ட, அல்லது, விதித்த—விதிக்கப் பட்ட இவ்வாழ்க்கை—இம் மண் வாழ்க்கை தவமாகவும் யோகமாகவும், கனவாகவும், நனவாகவும், போராகவும் போராட்டமாகவும், தாபமாகவும் தாகமாகவும், சோக மாகவும் ஆனந்தமாகவும், ஏக்கமாகவும் ஏமாற்றமாகவும் உருக்கொண்டு உருக்காட்ட, அதே வாழ்க்கை, அவனுக்கு —அம்மனிதனுக்குச் 'சோதனை அனுபவம் என்கிறதாய் முலைப்பாலையும் காலம் கடந்த காலத்திலும், நேரம் கெட்ட நேரத்திலும், வேளை தவறிய வேளையிலும் புகட்ட நேர்கிறது ! விளைபலன் : அவன் யதார்த்தமான வாழ்க்கையை யதார்த்தமாகப் படிக்கவும், படித்துக் கொள்ளவும், படித்துக் கொடுக்கவும் நேருகிறது !— மனிதனுக்குப் 'பிள்ளையார் சுழி' போட்ட அதே மண், அவனுக்கு 'முற்றும்' போடவும் தவறுவதில்லை ; தவறி விடுவதும் இல்லைதான் !

இதுதான் மனிதனின் கதை !

மனிதனின் கதை. இவ்வளவுதான் !

ஆனால், ஒன்று :

இது ஒரு மனிதனின், அதாவது, ஒரேயொரு தனி மனிதனின்—தனிப்பட்ட மனிதனின் கதை மட்டும் அல்லவே ? உலகம் தழுவிய மனிதனின் கதையும், இதுவே அல்லவா ?—ஆமாம் ; உலக மனிதனின் கதையும் இது வாகத்தானே இருக்கவும் வேண்டும் ? —இருக்கவும் முடியும் ?

**உலகமும் உலக மனிதனும் :**

**உலகம் தோன்றியது ; மனிதன் தோன்றினான் !...**

மனிதன் தோன்றினான் ; உலகம் தோன்றியது !...

உலகில், மொழி தோன்றிய பின்னர் தோன்றிய நாகரிகம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர, அந்த நாகரிகத்துடன் மொழியும் இணைந்தும் பிணைந்தும் நாளும் பொழுதும் வளரலாயிற்று ; மொழியின்—மொழி நடையின்—மொழி நடைப் பாணியின் வளர்ச்சியிலும், வாழ்விலும், முன்னேற்றத்திலும் மேன்மையிலும் 'இலக்கியம்' பிறந்தது.

இலக்கியம் ஒரு கலை !

ஆய கலைகள் அறுபத்து நான்கு என்போம் !—இலக்கியக் கலை—இலக்கியத்தின் கலை, வரலாறு கொண்டது ; வரலாறு கண்டது ; மரபு சார்ந்தது ; மரபைச் சேர்த்தது! —இந்த உண்மை நிலை, அனைத்து உலகத்துக்கும் பொருந்துகிற போது—பொருத்தமாகிற போது, உலகத்தின் பாற்பட்ட பாரதத்துக்கும், பாரதத்தின் அங்கமான தமிழ்நாட்டுக்கும் பொருந்தும் ; பொருத்தமாவதும் இயற்கை ; இயல்பு ; நியதியும் கூட !

தொல்காப்பியச் சிறப்புப் பெற்ற 'தமிழ்கூறு நல்லுல'கத்தில், கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே, வாளொடு முன்தோன்றி மூத்த குடியின் மூத்த மொழி தமிழ் மொழி !

இவ்வாறு, தொன்மையும் சீர்மையும் கொண்ட பண்டைத் தமிழின் இலக்கியத்திலே, வாழ்வும் வளமும் கண்ட படைப்பு இலக்கியத்தைப் பண்பு பேணி, மரபு காத்து, வாழ்த்தி வாழவைத்த இலக்கியச் செம்மல்களையும், மரபு சார்ந்த பண்பாட்டு நெறிமுறையில் பண்டைத் தமிழின் புதுமைப் படைப்பு இலக்கியத்தைப் பாதுகாத்துப் பேணி வரும் தார்மிகமான பொறுப்புக்கு உரிமையும் உறவும் கொண்ட இலக்கியச் செல்வர்களையும் 'பால்வாய்ப் பசுந்தமிழ்' என்றென்றும் நன்றியறிவுடன் போற்றிப் புகழ்ந்து கொண்டுதான் இருக்கும்.

சங்கம் வளர்த்த தமிழ் இலக்கியத்தின் புதினப் படைப்புத் துறையில் மாண்புமிக்கதொரு மறுமலர்ச்சியையும், மகத்தானதொரு திரும்பு முனையையும் ஏற்படுத்திய பெருமை, சரித்திரப் பேராசிரியர் அமரர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கே உரியதாகும். சரித்திரத்தை வாழவைத்த கல்கி, சரித்திரத்திலே வாழ்ந்து கொண்டிருக்கிறார்!—காலத்தின் வரலாற்றில் அடங்கியது சமுதாயம்; ஆகவேதான், சமுதாயத்தின் சீர்திருத்தம் மிகுந்த புதுமை வாழ்வில் கல்கியின் பணி சிறக்கவும் திறக்கவும் முடிந்தது!—அதனாலேதான், சரித்திரத்தைப் பேச வைத்த சிவகாமியும், சமூகத்தைச் சிந்திக்க வைத்த தாரிணியும் மக்கள் இலக்கியத்திலே பேராசிரியர் கல்கியைப் போலவே இன்றும் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். வரலாறும் சமூகமும் இரண்டறக் கலந்த இப்படிப்பட்டதொரு பண்பாட்டுப் பெருமையில், சிறுகதை முன்னோடி வ. வே. சு. ஐயரும், நாவலின் வழிகாட்டி வேதநாயகம் பிள்ளையும் பெருமிதம் கொள்வார்கள் அல்லவா?

**புதிய அலை — பழைய புரட்சி!**

படைப்பு இலக்கியத் துறையிலுங்கூட, அண்மைக் காலத்திலே, ஒரு நெருக்கடி நிலை—ஒரு சோதனை நிலை ஏற்பட்டு விட்டது!—அதுதான், புதிய அலை என்கிற நாசகாரச் சோதனையால் வந்த வினை; அது சாமன்யமான வினையாக வந்ததா, என்ன?—ஊஹூம்?—பயங்கரமான தீவினையாகவே விளைந்தது. பாரதச் சமுதாயத்தில், தமிழ்ச் சாதியின் ஒளிமிக்க எதிர்காலமாகத் திகழக் கூடிய வாய்ப்பும் வசதியும் பெற்ற இளந் தலைமுறையினரின் நெறியும் முறையும் சார்ந்த—ஒழுங்கும் கட்டுப்பாடும் தழுவிய—ஒழுக்கமும் பண்பும் மேவிய நல்ல, ஆரோக்கியமான இளம் உள்ளங்களையெல்லாம் திசை திருப்பித் தடம்புரளச் செய்து பாழ்படுத்திவிடத் தக்க ஊழ்வினையாகவே இந்தப் புதிய அலைச் சோதிப்பு வாய்க்க நேர்ந்தது!

சமூகத்தின் ஆன்மாவெனப் பெருமையுடனும் பெருமிதத்துடனும் பேசப்பட்டு வருகிற தமிழ் எழுத்துலகிலே, குறுக்கு வழிப் புத்தி படைத்த பத்திரிகை ஆசிரியர்கள் சிலரின் அசட்டுத் தைரியத்தில், புல்லுருவித் தமிழ் எழுத்தாளர்களும் எழுத்தாளிகளும் அசட்டுத் தைரியம் அடைந்து, அவர்களது சுயநலக்கேட்டின் எதிர் விளைவாகவும், கெட்ட விளைவாகவும் உருவான அல்லது, உருவாக்கப்பட்ட மரபு தாண்டிய—பண்பாடு மீறிய—முரண்பட்ட எழுத்துக்களைக் கதையெனவும் தொடர் கதையென்றும், நவீனமென்பதாகவும் பெயர் சூட்டிச் சிவப்புச் சிவப்பாகவும் பச்சை பச்சையாகவும் எழுதித் தள்ளி, புதிய அலைப்புரட்சி என்னும் போலித்தனமான புகழ் மயக்கத்திலேயே தங்களுடைய ஈனத்தனமான வயிற்றுப் பிழைப்பை வெகு நாகரிகமாகவே நடத்தவும் துணிந்தனர்.

சமுதாய விரோதிகளான, சமூகத்தின் எதிர்ச்சக்திகளான இந்த நாலு எழுத்தாளர்கள் வெளிப்படுத்திய அநாகரிகச் சமூக நச்சுப் பூச்சிநோய், ஏலக்காயின் நறுமண இன்சுவைப் படைப்பின் இலக்கியத்தைப் பற்றியும் தொற்றியும் சீர்கெட வைத்ததோடு நிற்காமல், நல்ல, பொன் மனம் படைத்த இளந்தலை முறையினரையும் சீரழியச் செய்து விட்டது!

**இலக்கியத்தின் புலன் விசாரணை!**

**ம**னித குலம் மேன்மையும் மேம்பாடும் அடையத்தக்க புதுக்கருத்துக் கோட்பாட்டின் வழி முறைகளிலே புதியதொரு தமிழ்ச் சமுதாயத்தை உருவாக்கிப் பேணிக் காத்து வாழ்த்தும் சீரிய நோக்கம் கொண்டு, தமிழ்ப் படைப்பிலக்கியம் மக்கள் இலக்கியமாக மலர்ச்சியடைந்து மறுமலர்ச்சியடைந்து, நவ நாகரிகப் பண்பாடு வாய்ந்த நெறிமுறையிலே அறிவின் முனைப்போடும் உணர்வின் விழிப்போடும் வாழ்வும் வளமும் பெற்று நாளும் பொழுதும் வளர் பிறையாக வளர்ச்சியடைந்து

கொண்டிருந்த ஆரோக்கியமான சூழலைச் சோதிக்கவும் கெடுக்கவும் கூடிய நஞ்சாகவும் நச்சுக் காற்றாகவும் ஏன், தொற்று நோயாகவும் கூட இந்தப் புதிய அலை உருக் காட்டுப் படலம் நடத்தத் தொடங்கி விட்டது !

இவ்வாறாகப் படைப்பு இலக்கியத்திற்கு ஒரு நெருக் கடி நிலைமையை ஏற்படுத்தத் துணிந்த எழுத்தாளர்களும் எழுத்தாளிகளும் அடங்கிய அந்த நாசகாரக் கும்பலின் 'நாலு பேர் வழிகளை'த் தட்டிக் கேட்க நேற்றுவரை யிலும் கூட, சமூகப் பிரக்ஞையும் சமூக வளர்ச்சியில் நாட்டமும் கொண்ட யாருமே முன் வரவில்லை; முன்னே வரத் துணியவும் இல்லை ! ஏன், இலக்கியத்தை அந்தக் காலத்திலே அவ்வப்போது நிறுவை செய்தும், அளவை செய்தும் விமரிசனம் செய்து வந்த க. நா. சு. வையும் காணவில்லையே ?

திருப்பாற்கடலிலே ஆலம்— நஞ்சு கலந்து விட்டது!...

அந்த நஞ்சைக் கண்டத்தில் தாங்கி, திருப்பாற்கடலை மீண்டும் புனிதம் உடையதாகவும், பொற்பு மிக்கதாகவும் ஆக்கும் கடமைப் பொறுப்பை எனக்கு நானே ஏற்றுக் கொள்ளவும் வேண்டியவன் ஆனேன் ! நஞ்சைக் களைந்து போக்க வேண்டுமேயானால், அமிர்தத்தின் பெருமையை உணர வேண்டும் ; உணர்த்தவும் வேண்டும் ! அப்போது தானே, அமுதத்தின் திருச்சந்நிதானத்திலே, நஞ்சு தலை குனிய வாய்ப்புக் கிட்ட முடியும் ?

அந்தச் சமுதாயத் துரோகிகள் நால்வரையும் சமூகத் தின் குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தி, சாங்கோபாங்க மான இலக்கிய விசாரணையை நடத்திக் காட்டவே, 'சுதந்திரம்' என்னும் வார இதழில் 'பூவையின் பக்கங் கள்' என்னும் சூடும் சுவையும் நிறைந்த பகுதி ஒன்றை உருவாக்கி, 'இன்றையத் தமிழிலே படைப்பு இலக்கியம் எங்கே போய்க் கொண்டிருக்கிறது ?' என்பது பற்றித் தீரத் தெளிய ஆராயத் தொடங்கினேன்,

தூய்மைக்கேடு, இன்றைய நிலையில் உலகத்தையே அச்சுறுத்தும் பயங்கரமானதொரு வாழ்க்கைப் பிரச்னையாகவே ஆகிவிட்டது! தூய்மைக்கேடு, வாழ்க்கைக்கு மட்டும் சவாலாக அமையவில்லை; வாழ்க்கையைப் பிரதிபலிக்கவல்ல இலக்கியத்திற்கும் சவாலாக அமைந்துவிட்டது!

இப்படிப்பட்டதொரு சோதனைக் கட்டத்திலேதான், இலக்கியத்தை, நாவல் இலக்கியத்தைப் புதிய அலை என்னும் பெயரால் சோதிக்கத் துணிந்த அந்தச் சுஜாதா, இந்துமதி, புஷ்பா தங்கத்துரை, சிவசங்கரி ஆகிய நாலு பேர்களையும் அக்குவேறு, ஆணிவேறாகச் சோதிக்கவும் தலைப்பட்டேன்! என்னுடைய இப்பரிசோதனையில், நீதி விசாரணையில் கையும் களவுமாகப் பிடிபட்ட 'காயத்ரி' 'மணல் வீடுகள்', 'ஒரு சிங்கம் முயலாகிறது!', 'ஒரு ஊதாப்பூ கண் சிமிட்டுகிறது' போன்ற நாவல்கள் தமிழ்ச் சமுதாயத்துக்கு இழைத்த பண்பாடு தவறிய, மனிதாபிமானம் இழந்த, தருமம் சிதைந்த அநீதியையும் அநியாயத்தையும் பாவத்தையும் பாரம்பரிய பெருமை பூண்ட நமது அருமைத் தமிழ்ச் சமூகத்தின் முன்னிலையிலேயே அம்பலப்படுத்தவும் செய்தேன். எச்சில் புத்தியும் ஈனத் தனமும் படைத்த மஞ்சள் இலக்கியத்தின் முடிசூடா மன்னர்களையும் முடி சூடிய மன்னிகளையும் எழுத்துச் சமூகத்தின் புல்லுருவிகளென இனம் காட்டி, அவர்களுடைய உண்மையான சுயரூபத்தை இந்தத் தமிழ்ச்சாதி உண்மையாக அறிந்துணரவும், உணர்ந்தறியவும் தங்கமானதொரு சந்தர்ப்பம் உண்டாகவும் செய்தேன்.

ஆபாசமற்ற, பரிசுத்தமான, நல்ல இலக்கியம்தான் மக்கள் சமுதாயத்தை வாழவைக்க முடியுமென்ற இலக்கியப் பூர்வமான நன்னம்பிக்கையிலும், மக்கள் இலக்கியத்திற்குப் புதுவாழ்வு பிறக்க வேண்டுமென்ற மனப் பூர்வமான அக்கறையிலும், நான் ஆரம்பித்துத் தொடர்ந்து முடித்த மேற்கண்ட இலக்கியத் திறனாய்வுத் தொடர்,

நான் சாடிய சமுதாயப் பொது விரோதிகளான அந்த நாலு பேர்களிடையே இலக்கியப் பொறுப்பும் சமூகக் கடமையும் கொண்ட விழிப்புணர்வை ஏற்படுத்தினாலும் சரி, ஏற்படுத்தாமல் போனாமலும் சரி!— அதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை; அக்கறையும் கிடையாது! ஆனால், என்னுடைய எழுத்துக்கள் இலக்கியத் தருமத்தை மதிக்கும் ரசிகர்களுக்கு மத்தியிலும், சத்தியப் பண்பாட்டின் கண் திறக்கப் பெற்ற இளந்தலைமுறை சார்ந்த பெரும்பாலான பத்திரிகை வாசகர்களுக்கு நடுவிலும் கடமையும் கட்டுப்பாடும் கண்ணியமும் நிறைந்த ஆரோக்கியமான, நல்லதொரு விழிப்புணர்வை ஏற்படுத்தி விட்டது என்கிற அந்த மகத்தான நல்விளைவிலேதான் நான் அக்கறைமிக்க ஆறுதல் அடைகிறேன். அந்த அளவில், என் பணி பயன்மிக்கதாகவும் அமைந்து விட்டதுதானே?...

கலப்படம் செய்தல் சட்ட விரோதச் செயல்.

ஜனநாயக தர்மம் இலக்கியத்திலும் பேணிப் பாதுகாக்கப்படும்! ஆத்மார்த்தமானதும் பாரம்பரிய பெருமையுடையதுமான உண்மையின் உன்னதங்கள் நிரம்பின தமிழ்ப்படைப்பிலக்கியம்தான் நம்முடைய தமிழ்ச் சாதிக்கு வழிகாட்டி, அதை வாழவைக்க முடியும் பின், தமிழ்ச் சமுதாயத்தை வாழவைக்கும் நல்ல தமிழ் இலக்கியப் படையல்களை நம் தமிழ்ச் சமூகம் வரவேற்று வாழவைக்கக் கேட்கவும் வேண்டுமா ?

**திறனாய்வு முறையில் ஒரு விழிப்பு :**

தொன்மை மிக்க தமிழ் மொழியைத் தொன்மை மிகுந்த காலத்திலேயே தொல்பெருங் கவிவாணர்கள் ஏற்றி போற்றிப் புகழ்ந்து பாடினர். இந்த இருபதாம் நூற்றாண்டின் ஈடிணையற்ற தேசிய ஒருமைப்பாட்டுக் கவியாகத் தமிழ்மண்ணில் அவதரித்தமகாகவிக்குத்தான் தமிழின்பால்

எத்துணை பாசம்! —எவ்வளவு நேசம்!— 'எங்கள் தமிழ் மொழி!' என்று நெஞ்சம் நெகிழ்ந்தும் மகிழ்ந்தும் மார் தட்டிக் கூவி, 'எங்கள் தமிழ் மொழி! எங்கள் தமிழ் மொழி! — என்றென்றும் வாழியவே!' என்று நன்றியறிவும் நன்னம்பிக்கையும் முரசு கொட்ட வாழ்த்துப் பாடவில்லையா அமரகவி பாரதி?

இவ்வாறாகவே, அன்றுதொட்டு இன்றுவரை, தன்னேரில்லா உயர்தனிச் செம்மொழியாக உலகரங்கிலே கொடி கட்டிப் பறந்து கொண்டிருக்கிற தமிழ் மொழியின் பட்டொளி வீசும் இலக்கியத்திலே,புதினத்துறை வாழ்வும் வளமும் பெறத் தொடங்கி, பொதுமக்கள் இலக்கியமாகப் புதிய மலர்ச்சி அடைந்து, வளர்ச்சி அடைந்து கொண்டிருந்த அந்த நாளில், அதாவது, அறுபது காலக் கட்டத்தில், நாவல் இலக்கியத்தில் தேக்கம் ஏற்பட்டு விட்டதாகத் திடுதிப்பென்று ஞானோதயம் பெற்றவரைப் போல 'குறி' சொல்லத் தொடங்கி விட்டார் திருவாளர் க. நா. சு.

அசலான இலக்கிய விமரிசகர் தானேதான் என்பதாக அந்நாளில் தம்பட்டம் அடித்துத் திரிந்த க. நா. சு.வை— க. நா. சு.வின் வாதத்தை— புதினத் துறையில் தேக்கம் ஏற்பட்டுவிட்டதாகப் புரளி கிளப்பிவிட்ட க.நா.சு.வின் இந்தக் கூற்றைப் பொய்யென்று மெய்ப்பிக்க வேண்டிய கடமைப் பொறுப்பை உணர்ந்த நான், அந்த க. நா. சு. வையே ஒரு பிரச்னை ஆக்கி, 'க.நா.சு. பிரச்னை' என்ற புதிய பகுதி ஒன்றையும் நான் ஆசிரியப் பொறுப்பேற்றிருந்த "உமா" ஏட்டில் ஆரம்பித்து, அவ்வரிசையில், தமிழ்ப் புதின இலக்கியத்துக்குப் புரட்சிமிக்க வாழ்வையும் புதுமை மிகுந்த வளப்பத்தையும் நல்கிய— நல்கி வந்த நாவலாசிரியர்கள் பற்றிய திறனாய்வையும் ஆரம்பித்தேன். இந்த இலக்கியத் திறனாய்வுக் கட்டுரைத் தொடரின் முதற்பகுதிதான் பின்னர், 1964ஆம் ஆண்டில், 'கல்கி முதல் அகிலன் வரை' என்னும் பெயரில் நூல் வடிவம் பெற்றது.

முதல் நூலாக வெளிப்படுத்தப்பட்ட 'திறனாய்வுத் தொடரில் அமரர் கல்கி ('அலை ஓசை'), நா. பார்த்த சாரதி ('குறிஞ்சிமலர்', ராஜம் கிருஷ்ணன்('மலையருவி'), க. நா. சுப்பிரமணியன் ('நளினி'), ஆர். ஷண்முக சுந்தரம் ('அறுவடை'), கோவி. மணிசேகரன் ('செம் பியன் செல்வி'). அமரர் விந்தன் ('பாலும் பார்வையும்'), மு. கருணாநிதி ('வெள்ளிக்கிழமை'), மற்றும் அகிலன் ('பாவை விளக்கு') ஆசிய நாவலாசிரியர்கள் இடம் கண்டனர்; இடம் பெற்றனர்.

நாவல் இலக்கியத்தில் 'தேக்கம்' ஏற்பட்டுவிட்டதாக அன்றைக்குக் க.நா.சு. சொன்னது, இட்டுக்கட்டிச் சொன்ன பொய் என்பது, என்னுடைய திறனாய்வுத் தொடர் 'உமா'வில் வெளியான அந்தக் காலத்திலேயே நிரூபணம் ஆகிவிட்டது! மேலும், இலக்கியத் திறனாய்வு நூலாக உருப்பெற்ற 'கல்கி முதல் அகிலன் வரை' என்னும் என் நூல், உயிரும் உயிர்ப்பும் கொண்ட நாவல் இலக் கியத்தின் மெய்யான வளர்ச்சிக்கு ஜீவாதாரமானதொரு மெய்ச் சாட்சியமாகவும் அமைந்து விட்டது அல்லவா ?

தமிழ்ப் பெருங்குடி மக்களை நல்வழிப்படுத்தி, அவர்களைப் பேணிக்காக்கும் சமுதாயக் கடன் கொண்ட மக்கள் இலக்கியத்திற்குப் புத்துயிரும் புது ரத்தமும் புது வாழ்வும் புத்தொளியும் வழங்கும் வகையிலே, இப்போது ஜனநாயக தருமத்தின் அரசியல் சட்டமும் விழிப்புடன் செயலாற்றத் தொடங்கியிருக்கிறது.

இந்த நல்ல நேரத்தில், நமது பவித்திரமான பாசத் துக்கும் தேசத்துக்கும் பாத்திரமான நம்முடைய அன்பான தமிழ்ச்சமுதாயத்தை வாழவைத்து,வாழ்த்துக் கூறும் சீரிய நோக்கத்துடன் தமது எழுத்துக்களைப் புதுமையின் எழில் குலுங்கவும் புரட்சியின் கனல் தெறிக்கவும் ஆரோக்கியப் பண்பின் நெறிமுறையில் இயங்கியும் இயக்கப்பட்டும்

இலக்கியம் படைத்த— படைக்கின்ற மாண்பு மிக்க சகோதர எழுத்தாளர்களுக்கும், பண்பு மிகுந்த எழுத்துச் சகோதரிகளுக்கும் என் நன்றியையும் வாழ்த்தையும் தெரிவித்துக் கொள்ளவேண்டும்.

இந்நிலையிலே, இப்போது என்னுடைய தமிழ்நாவல் இலக்கியத் திறனாய்வுப் பணியின் மூன்றாவது கட்டம் உருப்பெறுகிறது ! திரு ஜெயகாந்தன் ஆரம்பித்து வைக்க, திருமதி சிவசங்கரி முடித்து வைப்பார் !...

தமிழ்ப் படைப்பிலக்கியத்தை நாகரிகமான நேர்மையுடனே பேணிக்காக்கின்ற இலக்கிய ஆர்வலர்கட்கு என் அன்பின் நன்றி உரியது.

சென்னை-600 045
1-12-96

**பூவை. எஸ். ஆறுமுகம்**

# 1. சில நேரங்களில் சில மனிதர்கள் !

## — ஜெயகாந்தன்

**கங்கா ! ஒரு சோதனை !**

உண்மைதான் !— கங்கா தனிமனிதப் பிரதிநிதி தான் !— அதனாலேதான், அவளுக்கென்று தனியொரு விதியாகத் தனிப்பட்டதொரு வாழ்க்கை, தனியாகவும் தனிப்படவும் அமைந்தது; அல்லது, அமைக்கப்பட்டது. அந்த வாழ்க்கை சாமானியமாகவோ, அல்லது, சாதாரண மாகவோ அமைந்ததா ? ஊஹூம் ; இல்லை ; இல்லவே இல்லை ! அது ஒரு சோதிப்பாகவே அமைந்தது.

கங்காவைப் பொறுத்த மட்டில், அவளை மட்டின்றிச் சோதிப்பதற்கென்று. கண்ணுக்குத் தெரியாத ஏதோ வொரு தெய்வம் எங்கேயோ இருந்ததென்னவோ உண்மை தான் !— ஆனாலும், கண்ணுக்குத் தெரிந்த பிரபு என்னும் உயர் மட்டத்துப் பிள்ளையாண்டான் ஒருவன் அவளைச் சோதனை செய்வதற்கென்று இங்கே, இந்தப் பட்டணக் கரையில் அன்றைக்கு, அதாவது ஒரு மகாமகத்தின் கால இடை வெளிக்கு முன்னதாகவே இருந்திருக்கிறான் என்பதுதான் உண்மையிலும் உண்மை !

காலங்கள் மாறுகின்றன ; மாறின ; மாறும்.

கங்கா இப்பொழுது மாறிவிட்டாள்; ஆளே அடியோடு மாறி விட்டாள் ! உண்மைதான்!— கங்கா தனி மனிதப் பிரதிநிதிதான் ! அதனால்தான், அவளால் இப்போது அடியோடு மாற முடிந்திருக்கிறது !— மாற்றம் என்றால், அற்பசொற்பமான மாற்றமா ? "... ஒரு கையிலே பாட்டில் ; ஒரு கையிலே கிளாஸ்... ஸாரி (புடவை) இல்லாம, வெறும் 'பெட்டிகோட்' டோட நான் நிக்கற இந்தக் கோலத்தைக் கண்ணாடியிலே பார்க்கறேன். இது வரைக்கும் இருந்த கங்காவுக்கு நான் ''குட் பை' சொல்லி ரொம்ப நாழி ஆயிடுத்து!... மருந்து குடிக்கிற மாதிரி ஒரே மூச்சிலே... ஐயோ ! தொண்டையெல்லாம் வயிறெல் லாம், குடலெல்லாம், நெஞ்சமெல்லாம் எரியறதே ?"— கங்காவின் வாக்குமூலம் இது !...

எரியட்டும், எரியட்டும் !...

கங்கா பொய் சொல்ல மாட்டாள் !—ஏன், தெரி கிறதா ?— அவள் தனி மனிதப் பிரதிநிதி ! வயிறு எரிந்ததோ, என்னவோ ?— நெஞ்சம் எரிந்திருக்கும் ; கட்டாயம் எரிந்திருக்கத்தான் வேண்டும்.

வாழ்க்கை ஒரு விபத்து !

கற்பும் ஒரு விபத்துத்தானோ ?...

அந்த விபத்தே வாழ்க்கையாக ஆகிவிடுகிற—ஆகி விட்ட துர்ப்பாக்கியத்தைச் சந்திக்கும் பாவத்தைச் சுமக்க நேர்ந்த கங்கா, அவ்விபத்து நடந்து பன்னிரண்டு ஆண்டுகள் கழித்தும்கூட, உயிரையும் சுமந்து கொண் டிருக்கிறாளென்றால், அவள் தனிமனிதப் பிரதிநிதியாகத் தானே இருக்க வேண்டும் ? மது மாத்திரம் இந்த மங்கையை என்ன செய்துவிட முடியும் ?

பிரபுவிடம் கழுத்தை நீட்டி, அந்தக் கழுத்தில் மூன்று முடிச்சுக்களை ஏந்திக்கொண்ட ஏந்திழை பத்மா ; அதாவது மஞ்சு என்கிற செல்வக் குமரியின்— கங்காவின் வயதை ஒத்த வாலைக் குமரியின் அம்மா, அவள் சொல்வாள் : "இன்னிக்கு மத்தியானம் தியேட்டரிலே கங்காவைப் பார்த்தேன். என்னாங்க, ஆளே மாறிடிச்சு 'அந்தப் பொண்ணு ? என்னை அதுக்கு அடையாளம் தெரியலே போல இருக்குது. கூட, எவளோ ஒரு சட்டக்காரிச்சி. இப்ப நீங்க கங்காவைப் பார்க்கிறதில்லையா ? எனக்கு என்னவோ பாவமா இருந்திச்சுங்க. 'சரி, அது நம்மைக் கண்டுக்கலே': நாம்ப அதை என்னாத்துக்குக் கண்டுக் கணும்?'னு வந்திட்டேன். எனக்குத்தோணுது..." என்று அவள், அதாகப்பட்டது பத்மா. அதாகப்பட்டது, திருமதி பிரபு மேற்கொண்டு என்னவோ சொல்ல ஆரம்பிக்கும்போது, பிரபு அவளை அதாவது, அவன் திருப்பூட்டின பத்தினியைக் கோபமாக முறைத்துப் பார்க்கிறான்.

"எவ எப்படிப் போனா, எனக்கென்னா ? டோன்ட் ஸ்பாயில் மை ஈவினிங்."

பிரபு கத்துகிறான் ; சாமானியமாகக் கத்தவில்லை ; கோபமாகக் கத்துகிறான்; கோபாவேசமாகவும் கத்துகிறான்.

சும்மா சொல்லக் கூடாது.

பிரபு என்றால் 'பிரபு' தான்.

பின், இந்தப் பிரபு அந்தக் கங்காவாக ஆகமுடியுமா' என்ன ?

பிரபுவுக்கு அந்தி மாலை நேரங்கள் என்றால், உயிரும் பிராணனும் ! அதனால்தான் போலும், மாலைப் பொழுதுகளை 'ஸ்பாயில்' செய்ய அந்நியரை அவன் அனுமதிப்பது கிடையாது !—ஆனால், இவன் மட்டும் ஒரு மாலைப் பொழுதை 'ஸ்பாயில்' செய்ததோடு நிற்காமல்,

அந்நியக் கன்னி ஒருத்தியையும் 'ஸ்பாயில்' செய்து, 'கெடுத்து' விடலாமோ ?

சும்மா சொல்லக்கூடாது: பிரபு என்றால், பிரபுதான்.

பிரபு யார் ?

அசல் ஆண்பிள்ளை. சாண் பிள்ளையானாலும், ஆண்பிள்ளை ரகம்.

உயர் மட்டம்.

உயரம்...

ஒரு வேளை, கங்காவுக்குத் தெரிந்திருக்கக் கூடும்.

பிரபுவை இந்தக் கங்கா எப்படி 'இனம்' கண்டாள்?—காலங்கடந்து, பன்னிரண்டு ஆண்டுகளையும் கடந்து, ஆனால், உயிரை மட்டும் கடக்க மாட்டாமல், இல்லை, இல்லை, கடக்க ஒப்பாமல், இந்தப் பிரபுவை அந்தக் கங்கா அடையாளம் கண்டுகொள்ள முடிந்திருக்கிறதென்றால், அது ஓர் அதிசயம் தான் !— அவளே சொல்கிறாள்: "அவன் (பிரபு) கண் பாம்பு மாதிரியோ, மயில் மாதிரியோ, பக்க வாட்டிலே இருந்து பாக்கறச்சே அன்னிக்கு, அந்த இருட்டிலே மங்கின வெளிச்சத்திலே தெரிஞ்சுதே, அது அப்படியே இப்ப என் மனசிலே தெரியறது !..." — பிரபுவின் கம்பெனி சம்பந்தப்பட்ட ஆண்டு மலர் ஒன்றில் அவனுடைய பெயர், படம் எல்லாம் வெளிப்படுத்தப்பட்டிருந்ததைக் கங்கா காண நேர்ந்த வரையில், அவள் கெட்டிக்காரி. '...இந்தப் பேரைப் படிச்சோ, இந்தப் படத்தைப் பார்த்தோ நான் இவனைக் கண்டு பிடிச்சுடலே ; இது, அவன்தான்னு தெரிஞ்ச பிறகு, அந்தக் கண்ணுலே அந்தச் சர்ப்பம் தெரியறதே !...' கங்கைப் பிரவாகமாகக் கங்காவின் நெஞ்சம் பொங்குகிறது !...

ஒரு நாள், சாயங்கால மழையில், கப்பல் போன்ற தொரு காரில் கங்கா அனுபவித்த, அனுபவிக்க வாய்த்த அந்தக் கற்பின் விபத்திற்குப் பிறகு, அதாவது, சரியாக, பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு, அதே கங்கா அதே பிரபுவை இனம் கண்டு, அவனோடு தொலைபேசி யிலும் தொடர்பு கொள்கிறாள்.

பிரபு கெட்டிக்காரன் அல்லவா ? "...என்ன விஷ யமா என்னைப்பார்க்கணும்?" என்று கேட்கிறான் அவன்.

அவள் பதட்டத்தையும் நடுக்கத்தையும் கட்டுப் படுத்திக் கொண்டவளாக, நிதானமாகவும் சாதாரண மாகவும் மிகுந்த சௌஜன்யமான சொந்தத்தோடும், ஏன், பந்தத்தோடும் கூடப் பேசுகிறாள்: "என்ன விஷயம்னு டெலிபோன்லே சொல்லிடற மாதிரி, மேட்டர் இஸ் நாட் ஸோ ஸிம்ப்பிள். சாதாரணமான விஷயம் இல்லே. நான் உங்களை மீட் பண்றதே ஒரு முக்கியமான விஷயம். என்னைப் பார்த்தீங்கன்னா, அப்ப உங்களுக்குப் புரியும். உங்க பேர் கூட எனக்கு நன்னாத் தெரியும். நாம ரெண்டு பேரும் பன்னெண்டு வருஷத்துக்கு முந்தி சந்திச்சு இருக்கோம் ; ஒரு நாள் மழை பெய்யறச்சே, சாயங்காலம் எங்க காலேஜ் வாசல்லே, பஸ் ஸ்டாண்டிலே... ஞாபகம் இருக்கா ? ஹலோ... ஹலோ... டு யூ ஹியர் மீ ?''

தொடர்பு தொடர்கிறது : "நீங்க என்னை உங்க கார்லே ஏத்திண்டு போனேள் ; ஞாபகமிருக்கா ? ஐலண்ட் கிரவுண்டுக்குப் போனோம். உங்களுக்கு ஞாபகம் இருக்கா ? இப்ப உங்களைப் பார்த்தா எனக்கு அடையாளம் தெரியுமாங்கறது கூட எனக்குச் சந்தேகம் தான். அந்தக் கார் தான் எனக்கு அடையாளம் ! ஆனா, அதுக்கப்பறம் அந்தக் காரை நான் பார்க்கவே இல்லை. எதுக்குப் பார்க்கணும் ? அவசியம் இல்லே, ஆனா, இப்ப அவசியமா உங்களை நான் மீட் பண்ணி ஆகணும் ?''

''உன் பேர் கங்காவா ?"

அவனுக்கும் ஞாபகச் சக்தி இருக்கிறது !

அவன் பெருமூச்சு விட்டது, பாம்பு சீறின பாவனையில் அவள் காதை ஆமாம், காதைத்தான் பொசுக்கியது.

வந்தபின் காக்கும் கெட்டித்தனத்தோடு, "உங்களுக்கு அதெல்லாம் ஞாபகம் இருக்கா? இப்போ நான் யாருன்னு தெரியறதா ?" என்பதாகப் பேச்சை நீட்டினாள் கங்கா.

"கங்கா !"

பிரபு இப்போது தன் பங்கிலும், தன் பங்குக்காகவும் பேசத் தலைப்படுகிறான் : "...எனக்கு ரொம்ப ஆச்சரியமா இருக்குது ; அன்னிக்கு அப்புறம் உன்னைப்பத்தி நான் நினைச்சேன்னான்னு எனக்கு நினைப்பு இல்லை ; நினைச்சு இருக்கிறேன். ஆனாக்க, பன்னெண்டு வருஷத்துக்கு அப்பாலே உன்கிட்டேயிருந்து இப்படி ஒரு ஃபோன் கால் வரும்னு நான் நினைக்கவே இல்லை. நிசமாகவே இது நீதானா ? ஓ ! எவ்வளவு சின்னப் பெண்ணா இருந்தே? உன்னைப் பத்தித் தெரிஞ்சுக்கணும்னு எனக்கு ஆசையா இருக்குது !..."

கங்காவுக்கு இப்போது, இப்போது தான் தொண்டைக் குழியில் என்னவோ துடிக்கிறது ; நெஞ்செல்லாம் வலிக்கிறது! '...நான் எதுக்கு இப்போ அழப்போறேனோ, தெரியலை ; 'பாவி'ங்கற ஒரு வார்த்தை பாதியிலே தொண்டையிலே அடைச்சிண்டு நிக்கறது. அவனை வையறதோ, சபிக்கிறதோ நியாயமில்லேன்னு என் மனசுக்குப் புரியறது !...'

பாவி !

அவள் அவனை உடனடியாகவே சந்தித்தாகவேண்டும்

எந்த இடத்திலே சந்திக்கலாம் ?

அவளுடைய அலுவலகத்திற்கு வந்து, அவன் அவளைச் சந்திப்பதை அவள் விரும்பவில்லை. 'ஆத்து'க்கு (ஆறு அல்ல! வீடு) வரச்சொல்லவும் இஷ்டமில்லை. '...அவனைத் தேடிக் கண்டு பிடிக்கிறோம்னே வச்சுக்கோ; இந்த நியாயத்தைச் செய்யறதுக்கு உன்னைக் கெடுத்த அவனாலே மட்டுமே உனக்குப் புனர் வாழ்வு கொடுக்க முடியும் என்கிற இந்த நியாயத்தை செய்யறதுக்கு அவனுக்கு என்ன நியாயம் இருக்கு?... அவன் உன்னை நம்பமாட்டான்; காரை நிறுத்திக் கையைப் பிடிச்சு இழுத்தவாளோடெல்லாம் போறவளாத்தானே அவன் உன்னை நினைப்பான்?' வெங்கு மாமாவின் கீதோபதேசத்தில் கங்காவின் அசட்டுத் தூக்கம் கலைந்திருக்கலாம்.

இதற்குமுன் அவனும் அவளும் சந்தித்தார்களே, அதே இடத்தில், கல்லூரிக்கு முன், பஸ் நிறுத்தத்தில், அல்லது ஐந்தரை மணிக்குத் தீவுத் திடலில் அவ்விருவரும் சந்திப்பதாக ஏற்பாடு ஆகியது.

கங்கா இப்போது தனக்குத் தானாகவும், தன்னில் தானாகவும் பேசிக் கொள்ளுகிறாள்; பெருமையோடு பேசிக் கொள்ளுகிறாள்; பெருமிதத்தோடும் பேசிக் கொண்டிருப்பாள் போலிருக்கிறது! அவள் என்ன பேசிக் கொள்கிறாள், தெரியுமோ?— 'இப்போ நான் ரொம்ப ஜாக்கிரதையா இருக்கேன்; நான் அப்போ மாதிரி அசடு இல்லே; நான் இப்போ ரொம்ப ரொம்பச் சமத்து!...'

அடி, பாவி...!

**கங்கா எனும் மனித நாடகம்!**

கங்கா!...

நல்ல மனித நாடகம்!

ஆனால்...?

மனிதத் தன்மை மிக்க நாடகம்தானா ?

ஊஹூம் !

இந்த நாடகத்திலே :

மனிதத்தன்மை 'காவு' கொடுக்கப்பட்டிருக்கிறது !

குற்றவாளிகள் : கங்கா + பிரபு !...

சமுதாயக் குற்றவாளிகள், சமுதாயத்தின் குற்றவாளிகள் இவர்கள் !

கங்கா தனது கற்பைப் பறிகொடுத்திருக்கிறாள் !

பிரபு இந்தக் கங்காவின் கற்பைப் பறித்துக் கொண்டிருக்கிறான் !

சமுதாயத்தில் அங்கம் வகிக்கும் மனிதர்கள் தங்களுடைய ஒழுக்கத்தையும் ஒழுங்கையும் பேணிப் பாதுகாக்கும்போதுதான், சமுதாயத்தின் மனிதர்கள் மேன்மை பெறவும், அதன் விளைவாகவும் விளைபலனாகவும் சமுதாயம் மேம்பாடு அடையவும் வாய்ப்பு, வசதி ஏற்படும்.

சமுதாய நியதி இது.

சமுதாய விதியும் இதுதான்.

இந்த நியதியும் இந்த விதியும் மாறினால், அல்லது, மாற்றப்பட்டால்,சமுதாயத்தின் மனச்சாட்சித் தோற்றம் பாழ்படுவதுடன் அல்லது பாழ்படுத்தப்படுவதுடன், சமுதாயம் சார்ந்த மனிதர்களின் குணநலப் பொலிவுகளும் பாழ்படுகின்றன ; அல்லது பாழ்படுத்தப்படுகின்றன !

ஆகவேதான், இங்கே, இப்போது கங்காவும் பிரபுவும் குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தப்பட்டிருக்கிறார்கள் !

நெருக்கடியான இந்நேரத்தில், யாரோ குரல் கொடுக்கிறார்கள் ; பின்னணிக்குரல் :

ஓ!— ஜெயகாந்தன் !

'காலங்கள் மாறும் போது, மனிதர்களும் மாறித்தான் ஆகவேண்டும். மாறிய மனிதர்களைக் காலத்தின் மாற்றமே காண வைக்கிறது. பல மாற்றங்கள், சமுதாய வாழ்வில் புதுமையானவையாக இருந்தாலும், தனி மனிதர்கள் வாழ்வில் காலங்கடந்த மாற்றங்களாகவே, நிராசைகளின் நிலைத்த சித்திரங்களாகவே உயிரிழந்து வந்து நிற்கின்றன ! அப்படிப்பட்ட ஒரு தனி மனிதப் பிரதிநிதிதான் கங்கா !— அவளது இறந்த கால - நிகழ்கால - எதிர்காலங்களின் மாற்றங்கள் முன்னும் பின்னும் குழம்பி, காலப் பிரக்ஞையை மறுத்த நிகழ்ச்சிகளின், எண்ணங்களின், ஏக்கங்களின் முறையாகத் தொகுக்கப்படாத வார்ப்பே கங்கா !— காலத்தின் அலைகளால் எற்றுண்ட, மோதி மூழ்கிய, போக்கில் மிதந்த, எதிர்த்து ஓய்ந்த ஓர் ஆத்மாவின் கதை இது !..."

கங்கா குற்றவாளி !

அவள் செய்த குற்றங்கள் :

1 காலப் பிரக்ஞையை மறுத்தாள் ;

2 சமூகப் பிரக்ஞையை மறந்தாள் ;

3 கற்பு நிலையைத் துறந்தாள்.

4 உயிரை மறுக்கவில்லை, மறக்கவில்லை, துறக்கவில்லை!

காலங்கள் மாறலாம் ! ஆனால், முரண்படலாமா ?

காலங்கள் முரண்பட நேர்ந்தால், தருமம் அழிந்து விடாதா, என்ன ?

கங்கா மாறினாள் ; அது, அவள் சொந்த விஷயம். ஆனால், அவள் முரண்பட்டபோது, உயிரிழந்த சித்திரம் ஆகிவிட்டாள் ! அதுவே அவளுக்கு விதியாகவும் ஆயிற்று! கங்காவின் சமர்த்து யாருக்கு வரும் ?—அவளுக்கு விதியும் இல்லை ; தெய்வமும் கிடையாது !—ஒரு வேளை, அவளுக்கு அவளே விதியாக ஆகியிருக்கலாம். ஆனால், அவள் ஒரு நாளும் விதியின் நாயகியாக ஆக முடியாது !—அவள் ஒரு கதா நாயகி !... ஆமாம்; 'சில நேரங்களில் சில மனிதர்கள்' என்னும்படியான உணர்ச்சிக் கோவையின் ஆசை நாயகிதான் மிஸ் கங்கா !

உண்மையே தான்—கங்கா ஒரு நல்ல மனித நாடகம் தான் !

ஆனால்...

கங்கா என்கின்ற இந்த மனித நாடகத்துக்கு, சராசரியான மனிதப்பெண்ணாகவும், முதன்மை பெற்ற நாடகக்காரியாகவும், விசித்திரமான கதைத் தலைவியாகவும், பிரபு என்னும் ஓர் அயோக்கியனின் காமவெறிக்குப் பலியான அபராதிக் கன்னியாகவும் அமைந்த—அமைக்கப்பட்ட ஜெயகாந்தனின் கங்காவிற்கு இந்தத் தமிழ்ச் சாதியிலே— இந்தத் தமிழ்ச் சமூகத்திலே— இந்தத் தமிழ்ச் சமூக இலக்கியத்திலே உரிய இடம் என்ன, பங்கு என்ன, அந்தஸ்து என்ன ?

நமது அருமைத் தமிழ்ச் சமூகத்தின் குற்றவாளிக் கூண்டிலே நின்று கொண்டிருக்கின்ற கங்காவின் ஜெயகாந்தனுக்கு இந்தத் தமிழ்ச் சாதியிலே—இந்தத் தமிழ்ச் சமுதாயத்திலே—இந்தத் தமிழ்ச் சமுதாய இலக்கியத்திலே வழங்கப்பட்ட — வழங்கப்படுகிற — வழங்கப்படும் மரியாதையின் பாகம் எத்தனை ? அந்தஸ்து என்ன ? இடம் எவ்வளவு ?

சூத்தமான இலக்கியப் பிரச்சினையைத் தட்டி எழுப்பித் தூண்டி விடக் கூடிய கேள்விகள் அல்லவா இவை ?

சிந்தனைகளை விருந்துக்கு அழைக்கும் கேள்விகளுக்கான பதில்கள் நல்லதோர் இலக்கிய விருந்தை வழங்கவே செய்யும் !...

**தமிழ் இலக்கியத்தில், படைப்புத் துறை :**

இன்றையத் தமிழிலே, படைப்பு இலக்கியம் (Creative Literature) எங்கே போய்க் கொண்டிருக்கிறது ?

இது பற்றிச் 'சுதந்திரம்' என்னும் வார ஏட்டில், 1981 காலக் கட்டத்தில் தொடர்ந்து எழுதினேன். கட்டுரைத் தொடரை நான் ஆரம்பம் செய்து வைத்த, விதம் இப்படியாகவே அமைந்தது :

"மனிதச் சமுதாயத்தைப் பண்போடும் அன்போடும், பரிவோடும் பாசத்தோடும், அபிமானத்தோடும் ஆதரவோடும் நல்வழிப்படுத்தவல்ல, அந்தரங்கப் புனிதம் படைத்த ஒரு படைப்பாளன் தான் சமுதாயத்தின் உண்மையான ஆன்மாவாகத் திகழ முடியும் !—சமுதாயத்திற்கு விடி மோட்சம் ஏற்படுகிற முறையிலும், சமுதாயத்திற்கு விடிபொழுதை ஏற்படுத்துகிற நெறியிலும், சமுதாயத்திலே புரையோடிக் கிடக்கின்ற பிரச்சினைகளுக்கு மனிதாபிமானத்துடனும் தன்மானத்துடனும் தீர்வு கண்டு வெற்றி பெற முயலும் அந்தத் தார்மிகப் பொறுப்புணர்ச்சியின் மூலம் தான் உண்மையான எழுத்தாளன் இந்தச் சமுதாயத்தின் மத்தியிலே பவித்திரமான பெயரோடும், சாசுவதமான புகழோடும் நிலை பெற்று விளங்க முடியும் !—அப்போது தான், இரண்டாவது பிரம்மா என்கிற அசல் அந்தஸ்துக்கும் மரியாதைக்கும் மதிப்புக்கும் அந்த எழுத்தாளன் நாணயமாகப் பாத்திரமாகவும், நாணயமான பாத்திரம் ஆகவும் முடியும் !..."

இவ்விதியின் அடிப்படையிலும் ஆதாரத்திலும், மேலே எழுப்பப்பட்ட விடை தேடும் வினாக்கள் இரண்டையும் திரும்பவும் திரும்பிப் பார்க்கலாமா ?

*1.* ஜெயகாந்தனின் கங்காவுக்கு இந்தத் தமிழ்ச் சாதியிலே—தமிழ்ச் சமுதாயத்திலே, தமிழ்ச் சமுதாய இலக்கியத்திலே உரிய இடம் என்ன ? அந்தஸ்து என்ன ? பங்கு என்ன ?...

2. கங்காவின் ஜெயகாந்தனுக்கு இந்தத் தமிழ்ச் சாதியிலே—தமிழ்ச் சமுதாயத்திலே—தமிழ்ச் சமுதாய இலக்கியத்திலே வழங்கப்பட்ட — வழங்கப்படுகிற— வழங்கப்படும் மரியாதையின் பாகம் எத்தனை ? அந்தஸ்தின் எடை என்ன ? இடத்தின் அளவு எவ்வளவ ?...

இந்நிலையில் :

கங்காவைத் திரும்பிப் பார்க்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுவது இயல்புதான்.

கங்கா !...

கங்காவை நான் வெகுநாட்களாகவே அறிவேன் ! அதாவது, அன்பர் ஜெயகாந்தனை அறிந்து, வெகு நாட்கள் கழித்துத்தான் என்னால்கங்காவைச் சந்திக்கவும் அறியவும் உணரவும் முடிந்தது.

கங்கா உங்களுக்கும் புதியவள் அல்லள்.

கங்கா !

கங்கா, யார் தெரியுமோன்னோ ?...

ஆசார அனுஷ்டானம் நியம நிஷ்டை அது இது என்றெல்லாம் அந்நாளில் ரொம்பவும் உயர்வாகப் பேசப் பட்ட பிராமணக் குடும்பத்தில் அவதரித்தவள் கங்கா; கன்னி இளமான் ; தவிர, அவள் கல்லூரி மாணவியுங் கூட !—அவள் கதை பழசு; ரொம்ப ரொம்பச் சின்னது, ஆனாலும், இன்னொரு தரம் புதுசாகச் சொல்லிப் பார்க்கலாம் !

'அம்மன் சிலை மாதிரி சின்ன உருவம் கொண்ட 'பெரிய' பெண் கங்கா. கல்லூரி மாணவி ஆயிற்றே ? ஆகவே, கல்லூரிக்கு எதிர்ப் புறத்தில் கொட்டும் மழையில், இருள் கொட்டும் நேரத்தில், பஸ் நிறுத்தத்தில் நின்று கொண்டிருக் கிறாள். அப்போது, கப்பல் மாதிரியான காரொன்று அவளது வழியின்குறுக்கே நிற்கிறது. காரை ஓட்டிவந்த இளைஞன் ஒருவன் வசீகரம் மிகுந்த புன்னகையோடு, "ப்ளீஸ் கெட் இன்," என்று ஏறச் சொல்லி, அவள் போக வேண்டிய இடத்தில் இறக்கி விடுவதாகச் சொல்கிறான். அவள் நன்றி கூறி, மழை விட்டதும் பஸ்ஸில் போய்க் கொள்வதாகக் கூறுகிறாள், அவனோ, கொட்டும் மழையில் தயங்கி நிற்கும் அவளைக் கையைப் பற்றி இழுக்காத குறையாக வண்டியில் ஏறும்படி அவசரப்படுத்துகிறான். இப்போது. அவனது அழைப்பை அவளால் மறுக்க முடிய வில்லை. வண்டியில் ஏறுகிறாள். தரித்திரம் பிடித்த தாவணியின் தலைப்பைப் பிழியும்போது. அவன் நீட்டிய துருக்கித் தேங்காய்ப் பூத்துவாலை யின் வாசனையில் முகத்தைச் சுகமாகப் புதைத்துக் கொள்கிறாள்.

'நகரத்தின் சந்தடி அடங்கிப் போன ஏதோ ஒரு பெரிய சாலையில் கார் போய்க் கொண்டிருக் கிறது.

'வானம் கிழிந்து அறுபடுகிறது ; மின்னல்கள் சிதறித் தெறிக்கின்றன ; எங்கோ இடி வெடிக் கிறது ; அந்த இடி அவள் தலையில் விழுகிறது !

'யாரென்றே தெரியாத ஒருவனுக்கு அவ் வளவு சுலபமாக அவளால் இணங்க முடிந்ததன் பலாபலன்கள் வீட்டின் தலை வாசலில் காத்துத் தவம் கிடக்கின்றன. அண்ணா அவளைக்

கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளுகிறான்; அவளைச் சமுத்திரத்தில் கொண்டு போய்த் தள்ளிவிடத் துடிக்கிறாள் அம்மா: வக்கீல் மாமா குறுக்கிடவே, அவள் தஞ்சை, திருச்சி, சிதம்பரம் என்று ஊர் சுற்றி, கெட்டும் பட்டணம் சேர் என்கிற அனுபவ மொழியை மெய்ப்பிக்கவும் இணங்கியவளாக, மறுபடி பட்டணம் வந்து சேர்கிறாள்.

''வேலை கிடைக்கிறது; வள்ளிசாகப் பன்னிரண்டு ஆண்டுகள் கழித்து, வெங்கு மாமா போட்ட ஒரு சவாலை ஏற்று, அவனை—தன்னைக் கெடுத்த அவனை—அந்தப் பெரிய இடத்துப் பிரபுவை மீண்டும் கங்கா தேடிக் கண்டு பிடித்து விடுகிறாள்.

''பத்மாவின் புருஷன் அவன் என்பதும் மஞ்சுவின் அப்பன் அவன் என்கிறதும் தெரிய வருகின்றன.

'என்றாலும், இந்தப் பன்னிரண்டு ஆண்டுகளாக' எந்தப் பிரபுவையே சதாசர்வ காலமும் நினைத்துக் கொண்டிருந்தாளோ, அதே பிரபுவை அவள்—கங்கா உள்ளத்தாலும், உயிராலும், ஆத்மாவினாலும் உண்மையாகவும் நேர்மையாகவும் நேசிக்கிறாள். "இவரை (பிரபு) விட எனக்குப் பிடிச்ச இன்னொரு புருஷன் இருக்கவே முடியாது!—எஸ். ஐ லவ் ஹிம்!...''

'ஆனால், பிரபுவோ கங்காவுக்கு ஒரு கலியாணத்தைப் பண்ணிப் பார்த்துவிட வேண்டுமென்று தவிக்கிறான்: துடிக்கிறான்.

"கங்காவிடம், நீ எவனுக்கோ வைப்பாட்டின்னு பேர் எடுத்துண்டு திரியறே; அதை மாத்தித் தொலைக்கணுமேன்னு தான் இவ்வளவு

தூரம் பிரயாசைப் படறோம்' என்று சொல்லி அவளைப் பெற்றவளும் அவளோடு உடன் பிறந்தவனும் அதற்காகப் பட்டபாடுகள் வியர்த்தமாகின்றன.

'விளைவு ; பூஜ்யம் !

'கங்காவினால் பிரபுவை மறக்க முடியவில்லை.

ஆனால், பிரபுவோ அன்றைக்குக் கங்காவை மறந்துவிட்ட மாதிரி, இன்றைக்கும் மறந்து விடுகிறான்: "குட் பை !"

'முடிவில்:

'கங்காவுக்கு 'விஸ்கி' தான் துணை நிற்கிறது.

'ஆமாம்.

'அவள் இப்போது அடியோடு மாறி விட்டாள்...!"

கதை இவ்வளவுதான் !

கங்காவைப் போலவே, அவள் கதையும் சிறிது!—கற்பு நிலை பிறழ்ந்ததால் வந்த வினை இது ; விதி இது ; விளையாட்டு இது.

கங்காவைப் பொறுத்த அளவில், ஆண்டவன் தனது சிருஷ்டி விளையாட்டில் வெற்றி பெற்று விட்டான் என்பதுதான் சத்தியம். சத்தியத்திற்கு வக்கிரம் தெரியாது !

ஆர்.கே.வி. என்னும் எழுத்தாளராகக் கூடு விட்டுக் கூடு பாய்ந்து, ஜே.கே. இப்படியாகத் தானே கங்காவை வருணிப்பார்: "அவளைப் பார்க்கிற யாருக்கும் எளிமையாக அரும்பி உலகின் விலை உயர்ந்த எத்தனையோ பொருள் (ட்)களுக்கு இல்லாத எழிலோடு திகழும் புதிதாய் மலர்ந்துள்ள ஒரு புஷ்பத்தின் நினைவே வரும்.

அதுவும் இப்போது மழையில் நனைந்து ஈரத்தில் நின்று, தந்தக் கடைசல் போன்ற கால்களும் பாதங்களும் சிலிர்த்து நீலம் பாரித்துப் போய்,பழந்துணித் தாவணியும் ரவிக்கையும் உடம்போடு ஒட்டிக்கொண்டு, சின்ன உருவமாய்க் குளிரில் குறுகி, ஓர் அம்மன் சிலை மாதிரி அவள் நிற்கையில் அப்படியே கையில் தூக்கிக் கொண்டு போய்விடலாம் போலக் கூடத் தோன்றும்..."

அம்மன் சிலை பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னரும் கூட திருடு போய்க் கொண்டுதான் இருந்தது!

ஆகவே, பிரபுவைச் சொல்லிக் குற்றம் இல்லை. ஆனாலும், திருட்டு, திருட்டுத் தானே? - கற்புத் திருட்டு ஆயிற்றே? - அதனாலேதான், அவனை இரண்டாவது குற்றவாளியாகச் சமுதாயத்தின் குற்றக் கூண்டில் விசாரணைக்கென நிறுத்த வைத்திருக்கிறேன்! - குற்றம் செய்த நெஞ்சுடன், "...அந்த ஈவினிங்கோட நான் உன்னை மறந்துடறது நல்லதுன்னு மறந்துட்டேன். நான் உனக்கு ஒரு உண்மையைச் சொல்லட்டுமா? என் லைஃப்லே, நானாகக் கெடுத்த ஒரே பெண் நீ தான்!" என்பதாகக் குற்றத்தை உணர்ந்து பேசினவன். இதற்குச் சற்று முந்தி, இதே கங்காவிடம் என்ன பேசினான்? - "அவங்க அவங்க கஷ்டங்கள் அவங்க அவங்களோட; யாரோட கஷ்டத்தையும் யாரும் வாங்கிக்க முடியாது!" என்றான். இதற்குப் பின்னே, இதே பிரபு, இதே கங்காவிடம், "...எதுவோ விளையாட்டுத்தனமான ஒரு விபத்து மாதிரி நடந்துட்டதை மறந்துட்டு இருக்கணும் நீ! அதுக்காக, வாழ்க்கையையே வீணாக்கிக்கறதா? என் ஷுட் டேக் திங்க்ஸ் ஈஸி இன் லைஃப்" என்று தப்பும் குற்ற உணர்வோடு பேசவும், பிறகு, "உனக்குக் கல்யாணம் செய்து வெச்சுப் பார்க்கணும் எனக்கு ரியலி...!" என்பதாகச் சமத்கராமாகவும் சாதுர்யமாகவும் ஏன், அனைத்தையும்விட, சத்தியமாகவும் பேசத் தயாராகிறான்!

பல மனிதர்கள் பல நேரங்களில் எவ்வாறு இயங்குவார்கள், அல்லது, இயக்குவார்கள் என்பதற்கு நேருக்கு நேரான உயிர்ச் சாட்சியாகத் தன்னுடைய யதார்த்தமான வாழ்விலும், வாழ்வின் நடைமுறையிலும் விளங்கிய - விளங்குகிற பிரபுவுக்கு ஜெயகாந்தன் 'சில நேரங்களில், சில மனிதர்கள்' என்பதாகப் பேசப்படுகிற தனது நவீனத்தில் வழங்கிய நவீன அந்தஸ்து என்னவென்னும் வினாவுக்குக் கிடைக்கக் கூடிய விடையிலேதான், ஜெயகாந்தனுக்கு இந்தத் தமிழ்ச் சமுதாயத்தில் - தமிழ்ச் சமுதாயத்தின் இலக்கியத்தில் வழங்கப்பட்டுள்ள அந்தஸ்தின் நிலை நிர்ணயப்படுத்தப்பட வேண்டும்!... இல்லையா ?

கங்காவுக்குத்தான் பிரபு கதாநாயகன் ! - 'சில நேரங்களில் சில மனிதர்கள்' என்னும் கதைக்கு - தொடர் கதைக்கு - நாவலுக்கு அல்ல; அல்லவே அல்ல !

பிரபு, அவன் ஒப்புக் கொண்டது மாதிரி 'யோக்கியன்' அல்லதான்; என்றாலுங்கூட, பிரபு என்னும் மனித ஆண் பிள்ளை பேடித்தனமாகவும் பெண் பிள்ளைத்தனமாகவும் கங்கா எனப்படும் அந்த மனிதப் பெண் பிள்ளைக்கு - ஆண் பிள்ளைத்தனம் கொண்ட கன்னிக்கு - கன்னிகழிந்தவளுக்கு - கன்னி கழித்தவளுக்குச் சில நேரத்தில் - ஊஹூம், சில நேரங்களிலே துணை நின்றவன்; துணையாக நின்றவன்; துணைக்கு நின்றவன் ! - அவன் பெற்றுள்ள. போலியான இத்தகுதி மட்டிலுமே, அவன் பெறத்தக்க அசலான - அயனான கதை நாயகன் பதவிக்கு அவனைத் தகுதியுடையவனாக ஆக்கி விடுமா ?... ஆக்கிவிடலாமா ?... ஆக்கி விட முடியுமா ?... முடியாது! கூடாது' - அவன் அற்ப சொற்பமான பேர் வழியல்லவே ? மேலும், அவன் அழிந்த ஆத்மாவும்கூட! - 'புவர் ஸோல்!' பாவம், பாவம், பாவம்!

பிரபுவை மனத்திலும் மனத்தாலும் நினைக்கிறேன்; நினைத்துப் பார்க்கிறேன்.

நடந்தது இதுதான் :

சற்று முன்பு நடந்ததை நினைவூட்டாமல், ஒரு மகாமகக் காலத்திற்கு முன், இதே போன்றதொரு மாலை வேளையில் நடந்த அந்தப் பொல்லாத அந்தி நேரத்துச் சம்பவத்தை நினைவூட்டும்போது, "...உங்களுக்கு ஞாபகம் இருக்காது; நம்ப பேசிண்ட ஒவ்வொரு வார்த்தையும், நம்ப இருந்த ஒவ்வொரு பொஸிஷனும், ஏன், ஒவ்வொரு அசைவும் எனக்கு (நேக்கு) ஞாபகம் இருக்கு... நீங்க என் தோளைப் பிடிச்சு உலுக்கினேள்; அப்போ, நான் சொன்னேன்: 'எனக்குப் பயமா இருக்கு; இதெல்லாம் புதுசா இருக்கு'ன்னு. அப்போ, நீங்க கேட்டேள், கன்னத்திலே அறையற மாதிரி; 'எதுக்கு இந்த சர்ட்டிபிகேட்டெல்லாம்'னு ...ஞாபகம் இருக்கா ?" என்று ஞாபகப்படுத்துகிறாள் கங்கா.

அவள் கொடுத்த ஞாபகச் சீட்டு அவனது அமைதியைக் கெடுத்து அதற்குச் சீட்டுக் கொடுத்திருக்கலாம். அவன் நெற்றியை ஏனோ, எப்படியோ சொறிந்து கொள்கிறான்.

"ஐ ஆம் ஸாரி... தொந்தரவா இருக்கா ? பன்னெண்டு வருஷத்துக்கு முன்னாலே ஒரு அருமையான சாயங்காலப் பொழுது பாழாப் போனது மாதிரி இன்னிக்கும் ஒரு ஈவினிங் வேஸ்டாப் போறதேன்னு வருத்தமா இருக்கா? மிஸ்டர் பிரபு, வேஸ்டாப் போறது ஒரு ஈவினிங் மட்டும் இல்லேன்னு சொல்றதுக்காகத்தான் உங்களைக் கூப்பிட்டேன்.''

அன்றைக்கென்று படு அசடாக இருந்த அதே கங்கா இன்றைக்கென்று படுசமர்த்தாக ஆகிச் சூடாகச் சொன்ன சுடு சொற்கள் அவனுக்குச் சூடு போட்டிருக்கலாம். அவன், தப்பு, தப்பு, மிஸ்டர் பிரபு நெஞ்சிலே கை வைத்தவனாகவும், நெஞ்சத்திற்கு வஞ்சனை செய்யாதவனாகவும், அதைவிடவும், நெஞ்சையே பிளந்து காட்டுபவனாகவும் பேசத் தலைப்படுகிறாள்:

"நோ... நோ... அப்படியெல்லாம் இல்லை. உன்னோட டெலிஃபோன்லே பேசினத்துக்கும் இப்போ உன்னைச் சந்திச்சதுக்கும நான் சந்தோஷப்படுறே... நான் சந்திச்சு என்னோட காரிலே வந்த எத்தனையோ போலே நீ ஒருத்தி இல்லேன்னு எனக்கு அப்பவே தெரியும். தெட் இஸ் வய் ஐ ஃபெல்ட் கில்டி. நான் உன்னை நினைக்கக் கூடாதுன்னே நினைக்காமல் இருந்தேன்; அந்தஃ வினிங்கோடே நான் உன்னை மறந்துடறது நல்லதுன்னு மறந்துட்டேன். நான் உனக்கு ஒரு உண்மையைச் சொல்லட்டுமா ?... என் லைஃப்லே, நான் கெடுத்த ஒரே பெண் நீ தான்! மத்தவங்க எல்லாம் ஏற்கெனவே கெட்டுப் போனவங்க!''

கங்கா கைக்கு மெய்யாக வாக்கு மூலம் சமர்ப்பிக்கிறாள்; 'சிகரெட்டைப் பலமா உறிஞ்சிப் புகைவிடறார்; புகை காரமோ என்னமோ, கண்ணெல்லாம் கலங்கறது; தொண்டையைச் செருமிக்கிறார். என்னைப் பார்க்க முடியாம வெளியே பார்க்கறார். நானும் இந்தப் பக்கம் திரும்பிக்கிறேன்!...'

கங்காவின் விமரிசனச் சாட்சியத்துக்கு அவசியம் இல்லாமலும், நெஞ்சாரப் பொய் சொல்லாமலும், தனது இதயத்தின் பாவமன்னிப்புக் குரல் வாயிலாகவே பிரபுவை, மிஸ்டர் பிரபுவாக உயர்த்தும் கட்டம் இது ஒன்றுதான்!

''என் வாழ்க்கையிலே நான் கெடுத்த ஒரே பெண் நீ தான்!'' என்று கங்காவை நோக்கி விம்முகிறானே 'கெட்டுப்போன குழந்தை, (Spoiled Child) பிரபு. அங்கே தான், உயர்ந்த பிள்ளையாண்டான், நிஜமாகவே உயர்ந்து நிற்கிறான்!

இந்த ஒரு புண்ணியத்தை - ஒரேயொரு புண்ணியத்தைக் கட்டிக் கொண்டதன் விளைவாக, பிரபுவின் மூலம் தான் ஜெயகாந்தன் என்னும் 'சில நேரங்களில் சில மனிதர்கள்' படைப்பாளியும் உயர்கிறார்; உயர்த்தப் படுகிறார் என்பதும் சரியே!

ஒரு புதினத்தில் சித்திரிக்கப்படுகிற ஒரேயொரு நிகழ்ச்சி கூட, ஒரேயொரு நெகிழ்ச்சி கூட சம்பந்தப்பட்ட பாத்திரத்தின் தனித்தன்மையைச் சரிந்து விடாமல், தனியாகச் சம்பந்தப்படுத்திக் காட்டப் பெரிதும் உதவும் என்பது என் கருத்து, கணிப்பு. வாழ்க்கை தானே நாவல் ? இவ்வகையில் பிரபுவின் கெட்டழிந்த வாழ்க்கை, கங்காவை வாழ்க்கையிலே கெட்டழியச் செய்து விட்டதன் காரணம் கொண்டும் இங்கே, தொடரும் கதையாக நீடிக்கிறது ; நீட்டிக்கிறது.

ஆனால்—

"என் லைஃப்லே நான் கெடுத்த ஒரே பெண் நீ தான் கங்கா !'' சுயதரிசனத்தால் பிரபுவின் உந்திக் கமலத்தினின்றும் வெளியேறி அவனைத் தனிப்படுத்திப் பிரித்துக் காண்பிக்க உதவிய குற்ற உணர்வின் இதே வாய்மொழி தான், வாய்மை மொழியாகி அவனைச் சமூகத்தின் சந்நிதானத்திலே குற்றவாளியாகவும் ஆக்கி விட்டது அல்லவா ?

நாம் பிரபுவுக்காக அனுதாபப்பட வேண்டியவர்களாகவும் ஆகி விடுகிறோம்.

ஆனால், சமுதாயமோ இதே பிரபுவின் பேரில் ஆத்திரப்படுகிறது !— குற்றம் புரிந்தவனைத் தண்டிக்கவும் செய்து விடுகிறது !— பிரபுவின் வாழ்க்கை கெட்டுக் குட்டிச் சுவராக ஆகிவிடுகிறதே, போதாதா ?

மற்றபடி, கங்காவிடம் ஒரு மனநிலையில் அவளும் மஞ்சு மாதிரியே தனக்கு ஒரு மகள் மாதிரிதான் என்றெல்லாம் உதவாக்கரையான பிரபு வாதப் பிரதிவாதத்தில் என்னென்னவோ பேசுகிறானே, அவையெல்லாம் மது மயக்கத்தால் வெளிப்பட்ட மயக்க மொழிகளாகவே ஒலிக்கும் ; எதிரொலிக்கும் ! எல்லாம், போலியான ஒரு மனிதனின் போலித்தனமான பிதற்றல்கள், உளறல்கள் தாம் !...

**கங்கா !— பாவம், பாவப்பட்ட பிறவி !**

*கங்கா !*

*பரிதாபமே !...*

*பாவம் !...*

*பாவப்பட்ட ஜன்மம் !*

அதனால்தானோ என்னவோ, 'சில நேரங்களில் சில மனிதர்கள்' அவளை— கங்காவை அருமை பெருமை வாய்ந்த நமது தமிழ்ச் சமுதாயத்தின் முன்னே முதல் குற்றவாளியாக, ஏன், முதல் தரக் குற்றவாளியாகவும் நிறுத்தி வைத்து விட்டது போலும் !

தாய்ப் பாரதத்தின் தமிழச்சாதியிலே, பண்பாடும் பண்பாட்டுப் பெருமையும் லயம் சேர்க்கும் பாரம்பரியப் பெருமிதமும் பூண்ட வீரத் தமிழச்சியின் வழி வந்த கங்கா, வழி தவறி, கற்பு நிலை தவறி, கெட்டு அலைகிறாள் ; சீரழிகிறாள் ; தமிழ்ச் சமுதாயத்தின் சீருக்கும் சிறப்புக்கும் உதாரணமாகி, உதாரணம் தரவும் கடமைப்பட்டவள், தான் களங்கப்பட்டு அதாவது, தன்னைக் களங்கப் படுத்திக் கொண்டு, அத்தோடு நிற்காமல், தான் சார்ந்த இந்தச் சமுதாயம் களங்கப்படவும் களங்கமடையவும் ஏது வாகிறாள் ; பின் அவளாகவே, குற்றக் கூண்டிலும் ஏறி விடுகிறாள் !

திறந்த புத்தகம் இதோ, காற்றில் பறக்கிறது :

இந்தக் கங்கா, அந்தப் பிரபுவை இரண்டாவது தடவையாகச் சந்திக்கப் போகின்றாள் : 'பன்னெண்டு வருஷத்துக்கு முந்தி 'அவனை' முதல் தடவை சந்திச்சப் பறம் அந்தச்சந்திப்பின் பலனை இந்த நிமிஷம் வரைக்கும் நான் அனுபவிச்சுண்டு இருக்கேன் : அவனை மட்டும் அப்போ நான் சந்திக்காமல் இருந்திருந்தால் ?... அந்தக் கார்லே நான் ஏறாமல் இருந்திருந்தால் ?... அவன் இழுத்த இழுப்புக்கெல்லாம் பணியாமல் இருந்திருந்தால் ?... அசடாட்டமா அழுதுண்டே வந்து அம்மாகிட்டே

எல்லாத்தையும் உளறாமல் இருந்திருந்தால்?..." நன வோடையில் நெஞ்சின் அலைகள் ஆர்ப்பரிக்கின்றன.

இப்போது இந்தக் கங்கா ரொம்பவும் கெட்டி ஆகி விட்டிருக்கவேண்டும்; அதனால்தானோ என்னவோ, அவள் தன்னை அசடு என்று ஒப்புக் கொள்வதில்லை. இப்போதெல்லாம் ஜாக்கிரதையாக, வெகு ஜாக்கிரதை யாகவே இருக்கிறாள்!—போதாக்குறைக்கு, அனுபவிக்க வேண்டாததையெல்லாம் பருவம் தவறி, நிலை தவறி, காலம் தவறி, இடம் தவறி, நேரம் தவறி அனுபவித்த—அனுபவிக்க நேர்ந்ததற்குப் பன்னிரண்டு ஆண்டுகள் கழித்துச் 'சத்திய சோதனைத் தெய்வம்' காந்தி அடிகளின் பொன்மொழிகள் காலங்கடந்த காலத்தில், நேரம் கெட்ட நேரத்தில் அவள் கண்களில் பட்டுத் தொலைத் தனவே! அவளை இனிமேல் யாருமே புதிதாகக் கெடுத்து விட முடியாது! அவள் ரொம்ப உஷார்!—'யாரையும் சுலபமா நம்பிடாதே!' என அவளுக்கு அவளது மனமே காப்புக் கட்டிய பின், இனி அவளுக்குக் கவலை ஏதாம்?

சரி;

மகாத்மா அப்படி என்னதான் சொல்லி வைத்தாராம்?

"...நான் பெண்களுக்குச் சொல்வது இதுதான்: உன்னை ஒருவன் பலாத்காரமாகக் கற்பழிக்க முயலும் போது, உனக்கு நான் அஹிம்சையை உபதேசிக்க மாட் டேன். நீ எந்த ஆயுதத்தையும் உபயோகிக்கலாம். நீ நிராயுதபாணியாக இருந்தால், இயற்கை உனக்குத் தந்த பல்லும் நகமும் எங்கே போயிற்று?—இந்த நிலைமையில், நீ செய்கிற கொலையோ, அது முடியாதபோது, நீ செய்துகொள்கிற தற்கொலையோ பாவமாகாது!..."

என்னுடைய கற்பனை தர்க்கம் செய்யவோ, இன்றேல் குதர்க்கம் பேசவோ, உச்சநிலைக்கு எதிர்நிலையில் **(anti-climax)** ஓடுகிறது; ஓட்டம் பிடிக்கிறது. அன் றைக்கு, அதாவது, பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னர், அந்தச் சம்பவம் அன்று மாலையில் நிகழ்வதற்கு முன்னர்

அவள் பார்வையில் அஹிம்ஸா மூர்த்தியின் மேற்கண்ட மூதுரை தென்பட்டிருந்தால், அப்போது, அதாவது பிரபு 'கெட் இன்' என்று கொட்டும் மழையில் கொட்டாத தேளாகவோ, பிள்ளைப் பூச்சியாகவோ, என்னவோ ஒன்றாக, அவளைக் கையைப் பிடித்து இழுக்காத குறையாக அவசரப் படுத்தியதால், அவள் அந்தப் பெரிய வண்டியில் ஈரத் தாவணி சல்லாபமாகக் கண் சிமிட்டிய நிலையில் அந்தப் பெரிய வண்டியில் ஏறிக்கொள்ள அப்புறம்...அவன் அவளை இன்பம் துய்க்க முயற்சி செய்த காலையில் (நேரம்=மாலை+இருள்), அவள்—அதாகப்பட்டது. இந்தக் கங்கா, அவனை—அதாகப்பட்டது, இந்தப் பிரபுவைக் கடித்துக் குதறிக் காறி உமிழ்ந்து, தனது பொன்னான கற்பைக் காத்துக் கொண்டிருப்பாளா, என்ன?

யோசிக்கும் வேளையில்:

விடை: ஊஹூம்!...

குற்றவாளியான கங்கா, அவ்வாறு குற்றவாளி ஆனதற்கு அவளே முழுப்பொறுப்பையும் ஏற்கவேண்டியவள்! அவளது தவற்றுக்கு அவள் மனம்தான் சாட்சி! —ஆமாம், மனத்திற்கு மனம்தான் சாட்சி! மற்றப்படி தமிழ்த் திரையில் பேசப்படுகிறதே அதேமாதிரி சமுதாயம் அது இது எதுவுமே அவளது கற்பு பறிபோனதற்குப் பொறுப்பேற்க முடியாது!—பார்க்கப் போனால் பிரபு மீது பழிபோடுவதுகூட சட்டத்தின் விதிக்குப் பொருந்தக் கூடும்; ஆனால் விதியின் சட்டத்திற்கு பொருத்தமாக இருக்க இயலாது. இவ்வாறு சூழ்நிலையையும் காரண காரியங்களையும் நுணுகி ஆராய்ந்தால் அந்தக் கற்பழிப்புப் படலம் நடந்தேறியதற்கு முதற்காரணமாகக் கங்காவேதான் அமைந்திருக்கிறாள்; இரண்டாவது காரணமாகவேதான் இரண்டாம் குற்றவாளி பிரபு அமைந்தான்!

பிரபு என்னவோ கூறவேண்டுமாம்: கேட்கலாம்.

"...உனக்குத் தெரியுமோ? நான் ஒண்ணும் பெரீசா யோக்கியன், இல்லே; கண்ட கண்ட பொம்பளைங்களோட எல்லாம் போறவன்தான். ஆனா, ஒண்ணு; ஒருத்தியோட இஷ்டம் இல்லாம நான் இதுவரைக்கும் யாரையும் தொட்டது கூட இல்லே; அப்படி ஒரு தப்பு உன் விஷயத்திலேதான் செஞ்சுட்டேன்; அதுவும் நீ சம்மதிக்கிறேன்னு தப்பா நம்பினதினாலேதான், என்னாலே உன்கிட்டே அப்படி நடக்க முடிஞ்சுது, நீ யோசிச்சுப்பாரு அன்னைக்குக்கூட, நான் உன்னை 'கம்பெல்' (பலாத்காரம்) பண்ணினேனா?"

ஆக ஓர் உண்மை, ஓர் அந்தரங்கம் புலனாகிறது. உண்மைதான். கொட்டிய மழையில் 'கெட் இன்' என்று துரிதப்படுத்திய பிரபுவை எடுத்த எடுப்பில், பார்த்த மாத்திரத்திலேயே 'அம்மன் சிலை' தன்னை அவன்பால் இழந்து விட்டிருக்கவேண்டும்; இப்படிப்பட்ட இழப்பிலேதான், அவளுடைய கற்பை அவன் பறித்திருக்கிறான்; அவளும் தன் கற்பை அவனிடம் பறிகொடுதிருக்கிறாள், இங்கேதான், கங்கா அடிபட்டுப் போய்விடுகிறாள்!—நடப்பும் அதுதானே? அவளது இந்தப் பேரிழப்புக்கு நீங்களோ, நானோ இல்லை, மிஸ்டர் பிரபுவோ, அல்லது, நமது அன்புச் சமுதாயமோ 'பதில்' சொல்லத் தேவை இல்லை!—அவளும், அதாவது கங்காவும்; கங்காவின் ஜெயகாந்தனும்தான் பதில் சொல்ல வேண்டும், அவர்கள் பதில் சொன்னார்களா?...

பதில்: 'இல்லை!'

ஆனால்—

குற்றத் தொடர்பான சட்ட வல்லுனரான வெங்குமாமா ஆமாம், கங்காவின் பிரச்சினைக்குரிய அன்புமாமா ஒரு சமயம் கங்காவிடம் கொஞ்சம் பச்சையாகவும் கொஞ்சம் சிகப்பாகவும் அவள் மனத்தை எக்ஸ்ரே படம்,' எடுத்து, அவள் வசமே அதைச் சமர்ப்பிக்கவும் செய்தார்;... 'இந்த

புஸ்தகத்தை (ஆசிரியர் : காந்தி மகாத்மா) நீ காலங் கடந்து படிச்சிருக்கே இப்பவாவது படிச்சயே, ஒரு விதத் திலே சரிதான் !—உன்னைப் பலாத்காரம் செய்ய வரவா கிட்டே. அது பொருந்தும். ஆனால், அவன் (பிரபு] உன்னைப் பலாத்காரமா செஞ்சான் ? உன்னை மாதிரிப் பெண்களை எவனும் பலாத்காரம் செய்ய வேண்டாம் !" பால் உணர்வில் கவர்ச்சியும் இனக்கவர்ச்சியில் சபலமும் ஒட்டுதலும் கைவரப்பெற்ற 'கிரிமினல் லாயர்' ஆன இந்தக் கிழப் பிராமணர் பெரிய உடலியல் மனநிபுணர் மாதிரி, எத்தனை பெரிய உண்மையை எத்தனை லகுவாக கோடி காண்பித்துவிட்டார் ?

கங்காவின் கீழ்த்தரமான இம்மன இயல்பை வெறும் அசட்டுத்தனமென்று ஜே. கே. மாதிரி நாமும் நம்பிவிட முடியவில்லை. இத்தகைய மனநிலையிலேதான், கங்கா வின் மனப்பலவீனமே பிள்ளையார் சுழிபோடத் தலைப் பட்டது என்பதையும் நாவலாசிரியர் மறந்துவிட வில்லை !

நிருபணமாக, மிஸ் கங்காவே மறுபடி பேச வாயெடுக் கிறாள் ; "அவர் (மாமா வெங்கு என்கிற வெங்கட் ராமய்யர்வாள்) சொன்னது உண்மைதான் ; ஆனா, அவர் சொன்னதை அவரே நம்பலே. அதனாலேதான் இந்த நிமிஷம் வரைக்கும் அவர் என்னைப் பலாத்காரம் செய்யாமல் இருக்கார். அப்படி அவர் செஞ்சா, மகாத்மா காந்தி சொன்னமாதிரி, நான் கொலையும் செய்ய மாட்டேன் ; தற்கொலையும் செஞ்சுக்கமாட்டேன். ஏதோ ஒரு நேரத்திலே, ஏதோ ஒரு பயத்திலே, ஏதோ ஒரு யோசனையிலே. அந்த வார்த்தைகளுக்கு அடியிலே பொய் யாய் நான் கிழிச்ச சிகப்புக்கோடுகள்தான் இவ்வளவு காலமாக என்னைக் காப்பாத்திண்டு இருக்கு !''

இங்கேயும் மதயானைக்குச் சறுக்கி விட்டது. எதற்கும் துணிந்த கட்டைக்குப் பட்ட காலிலே பட்டாலும், படாத காலிலே பட்டாலும் குடியா முழுகிவிடப்

போகிறது ? என்கிற வயிற்றெரிச்சலில்தானோ என்னவோ, கங்காவின் அடிப்படையான பலவீனத்தையே அடித்தள ஆதாரமாக்கி அவளையே தீராத விளையாட்டுப் பெண்ணாகவும் தீராத பிரச்னையாகவும் ஆக்கி, தன் மனம் போன போக்கில் சந்திக்கு இழுத்திருக்கிறார், சந்திசிரிக்கவும் வைத்திருக்கிறார் பிரச்னை எழுத்தாளர். கங்காவைப் பொறுத்தவரை. 'முதற்காளாஞ்சி' மரியாதைக்கு உரியவர் கங்காவின் ஜே. கே. தானே ?—பின், அவர், அவளை என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்கிறீர்களா ?

நான் 'ஊம்' கொட்டமாட்டேன்.

**ஜே. கே+கங்கா !**

மண்ணுலக வாழ்க்கையில் மானுடப் பெண்ணாக திரு அவதாரம் எடுத்துச் சராசரியான மனித ஜன்மத்தின் சராசரியான பலம் மற்றும் பலவீனங்களோடு சமுதாய வீதிகளிலே உலாவந்த கங்காவின் அவலத்துக்கும் அலங்கோலத்துக்கும் காரணமாக, அவளது முரண்பாட்டுப் புத்தியை ஆதியோடந்தமாகவும், சாங்கோபாங்கமாகவும் சித்திரித்துக் காட்ட முன் வந்த கதை ஓர் வாழ்க்கை என்னும் மரத்தின் முரண்பாடு என்கிற நுனிக் கொம்பில் நின்று கொண்டு கங்கா புடைசூழத்தான், தமிழ்ப் பண்பாடு மற்றும் தமிழ் மரபு என்னும் படியான அடிக் கொம்பை வெட்டத் துணிந்திருக்கிறார் என்பதையும் 'சி. நே. சி. ம.' நவீனம், நவீனப் பாணியில் அக்குவேறு ஆணிவேறாக அலசி ஆராய்ச்சி நடத்தியிருக்கிறதென்பதையும் மறுப்பதறகில்லை தான் !—ஆகவே தான், ஜே. கே, கங்காவின் சார்பில் 'வக்காலத்து' வாங்கவும் தயாராகிறார் ; தயாராக வேண்டியவர் ஆகிறார். இருப்பதை அப்படியே காட்டுவதில் அசகாயசூரரென்று பேரெடுத்துள்ளதாக விமர்சிக்கப்படும் கங்காவின் ஆசிரியர், குறுப்பிட்ட ஒரு சூழ்நிலையில் மிகுந்த தனித்துவத்துடன்

உருவான ஒரு பாத்திரம் இங்கே இப்படித் தான் நடந்து கொள்ளுமென்றும் கங்காவின் உருக்காட்டுப் படலத்தை சமர்த்தாகவும் சமத்காரமாகவும் நியாயப்படுத்தும் நேரத்தில் மேலும் இவ்வாறாக விளம்புவார் : ''...சமூக விதிகளை மறுப்பதும் மாற்றுவதும் அதன் அநியாயமான தீர்ப்புக்களைக் காலத்தின் முன்னே மறுபரிசீலனைக்கு வைப்பதும் இலக்கியத்தின் பணி ஆகிறது. எனவே தான், இலக்கியத்தில் ஜனநாயக தர்மம் அனுமதிக்கப்படுவதில்லை. முரண்படுவதற்குச் சம்மதம் அளிக்கிற பண்பு தான் இலக்கியப் பணியாகும். எந்தச் சமூகம் இலக்கியத்திலும் இந்தப் பண்பை அனுமதிக்காதோ, அது அழிந்து படும்! அது அறிவுலகப் பிரஜைகளின் நரகமாயிருக்கும்! ... இந்தச் சமூக அநீதிகளுக்கும், நிகழ்கால வெறுப்பு விருப்புகளுக்கும், பெரும்பான்மையினருக்கும் வளைந்து கொடுத்துச் செயல்படும்படி இலக்கிய ஆசிரியனை நிர்ப்பந்திப்பது காலத்துக்கும் சரித்திரத்துக்கும் இழைக்கிற அநீதியாகும்! அப்படி நிகழ்வதைக் கருத்துலகச் சர்வாதிகாரம் என்றும், சிந்தனைச் சுதந்திரத்தைப் பறிமுதல் செய்வது என்றும் அறிவுலகம் கூக்குரலிடுகிறது!...''

நடைமுறை வாழ்க்கையிலே, மனிதத் தன்மை மற்றும் மனிதாபிமானம் போன்ற மனப்பாக்கியங்களின் ஆதாரத்தோடு, உணர்ச்சி பூர்வமாகவும் அறிவு பூர்வமாகவும் இலக்கிய ஆசிரியரான ஜெயகாந்தனைச் சுண்டிப்பார்த்து கங்காவைக் கலைக்கு உதவாமல், சுவைக்கும் உதவாமல், வேசித்தனமாகவும் அசிங்கமாகவும் முரண்படச்செய்து, அந்தப் பாவத்தையும் பழியையும் அவள் சார்ந்த இந்தச் சமூகத்தின் தலையில் போட்டு விட்டு, 'ஹாயாக' வசனம் பேசித் தப்பித்து விட்ட அவரது நாணயமான எழுத்துப் பணி செல்லுமா, செல்லுபடியாகுமா என்று சோதிப்பு நடத்தும் பொழுது, அவர் 'கெட்இன்' பிரச்னை வாயிலாகக் கங்காவைப்படுபாதாளச் சாக்கடையில் தள்ளி விட்ட அவரது எழுத்துச் சேவை— எழுத்துச் சேவகம் என்கிற நாணயம் கள்ளப்பணம் போலே— கள்ளச்

சந்தைப் பணம் போலே நாணயமில்லாமல் மந்தமாக ஒலிக்கவே செய்கிறது!— இப்படிச் சமூக வாழ்வில் அவலங்களை உற்பத்தி செய்யக் கூடிய முரண்களை எந்த அறிஞனும் அனுமதிக்கமாட்டான்!— நாவலாசிரியர் சரிந்து, கங்காவின் மேலேயே உருண்டு விழவும் நேர்கிறது!

மேலும், இத்தகைய சூழலின் சுழல் காரணமாகத் தானே லாயர் மாமாகூட கங்காவைப் பார்த்து, "நீ யாருக்காவது வைப்பாட்டியா இருக்கலாம்; ஆனா, எவனுக்கும் பெண்டாட்டியா இருக்க முடியாது. அப்படியே நீ ஒதுங்கிண்டுட்டா, நீ கெட்டாலும், நம்ப தர்மங்களையும் சாஸ்திரங்களையும் கொடுக்காத புண்ணியம் உனக்கு வரும்." என்று மிகவும் பச்சையாகவே அவள் பேரில் குற்றப் பத்திரிகை வாசிக்கவும் துணிந்தார்.

மற்றுமோர் உண்மை நிலையையும் ஜெயகாந்தன்பால் நாம் தரிசிக்க முடிகிறது!— அக்கினிப் பிரவேசத்தில் வெறும் ஜலத்தைக்கொண்டு கற்பு களங்கப்பட்ட தீட்டைத் துடைக்கத் துணிந்ததால் ஏற்பட்ட அபவாத வினையின் உறுத்தல் அவரது இலக்கிய மனோதருமத்தைப் பெரிதும் பாதித்து விட்டிருக்க கூடும். அதற்குப் பரிகாரம்தேடி, இந்தச் சமூகத்தின் மன்னிப்பைப் பெற முயற்சி செய்தவர் கங்காவை 'கன்னா பின்னா' வென்று நடத்தியதன் எதிர் விளைவாக, தமது முயற்சியில் மண்ணைக் கவ்வவும் நேர்ந்துவிட்டது!—சாத்தான் வேதம் ஓதிய கதைதான் போலும்!

முரண்பாடுகள் வாழ்க்கையிலும், வாழ்க்கையைப்பிரதி பலித்துப் படம்பிடித்துக் காட்டும் இலக்கியத்திலும் ஜன நாயகப் பண்புடன் அனுமதிக்கப்படத்தான் வேண்டும். ஆனால், முரண்பாடுகள் மாத்திரமே வாழ்க்கையென நியாயப்படுத்துவதை என்னால் ஒருபோதும் அனுமதிக்க முடிவதில்லை!...

மாமா இருக்கிறாரே, வெங்கு மாமா, அவர் பழுத்த பழம்; பழத்தைத் தின்று விட்டுக் கொட்டையை

வீசியவர் !— "கங்காவுக்கு ஒரு ஸ்திரமான புத்தி கெடை யாது. அவளைச் சொல்லிக் குத்தமில்லே. இந்தக்காலம் அப்படி இருக்கு. எப்பேர்பட்டவா மனசையும் சபலத் துக்கு உள்ளாக்கற காலம் இது. பாரேன் (கனகம்); இதை ('ஓடின காரில், ஓடாமல் நடைபெற்ற கற்புக் கொள்ளைச் சருக்கம்' காண்க !) ஒரு நியாயம்னு எவனோ (சாட்சாத் ஆர். கே.வி !) கதை எழுதி இருக்கான். அதைப் பத்திரி கையிலே போட்டிருக்கான். அதையும் லட்சம் பேர் படிக்கறாளே ? சின்னக் குழந்தையானா, 'அதைப் படிக் காதே, இதைப்படிக்காதே !'ன்னு சொல்லலாம். அவாவா சபலத்துக்கு ஏற்றமாதிரிதான் ரசனை வரும். இவ்வளவு எதுக்கு ? இத்தனையும் தெரிஞ்ச உன்னையே இந்தக் கதை குழப்பி இருக்கே ?" மாமாவின் வாய்க்கு உப்புத் தான் போடவேணும். நன்றியறிவுக்கு உப்பு ஒரு முன் மாதிரி இல்லையா ? ஆனால், ஒன்று; மாமா சாடியது சாட்சாத் ஆர்.கே.வி. அவர்களைத்தான் !...

**ஜெயகாந்தன் என்றால் ?...**

ஆமாம் !— ஜெயகாந்தன் என்றால், ஜெயகாந்தன் தான் !...

தமிழ் இலக்கிய உலகத்தில் ஒரு தனி எழுத்தாளப் பிரதிநிதியாகத் திகழ்ந்த— திகழ்கிற— திகழக் கூடிய ஜெயகாந்தன் குறித்து ஒரு சமயம் நான் இவ்வாறு குறித் திருந்தேன் :

"மக்கள் இலக்கியத்தின் மரபு காத்து, மாண்பு காத்து, பண்பு காத்து, மரியாதையையும் காத்துத் தமிழ் இலக்கியத்துக்கு நேர்மையான சத்தியமான— தருமமான பணிபுரிந்து, தமிழ் இலக்கியத்துக்குப் புகழ் தேடித் தந்து, அதன் பயனாகவும் பலனாகவும் தங்களுக்கும் வரலாற்றுப் பெருமை பூண்ட தமிழ்ச் சமுதாயத்திற்கும் புகழைத் தேடித் தந்த பழந் தலைமுறையினரில் அறிஞர் வ.வே.சு. ஐயர், வேத நாயகம் பிள்ளைபோன்ற சிலரும்

இன்றையத் தலைமுறையினரில் பேராசிரியர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி போன்ற சிலரும் அன்றும் சரி, இன்றும் சரி தமிழ் எழுத்துலகிலே குன்றிலிட்ட தீபங்களென ஒளிகாட்டியும், வழிகாட்டியும் வந்தனர் ; வருகின்றனர்.

''படைப்பிலக்கியத் துறையில் மறுமலர்ச்சியை ஏற்படுத்தியது 'மணிக்கொடி'. அக்காலத்தில், உண்மையான புரட்சிச் சிந்தனைகளை உண்மையாகவும் புதுமையாகவும் எழுதினார் 'புதுமைப் பித்தன்''. அவர் மாப்பஸான் முதலான பிற நாட்டு ஆசிரியர்களால் பாதிக்கப்பட்டவர் என்பது சிருஷ்டி ரகசியம் என்பதைக் காட்டிலும், சிதம்பர ரகசியம் என்பது பொருந்தும். அவரை நினைவூட்டும் வண்ணம், பின்னர்: 'விந்தன்' சுடர் விடலானார்.

''தான் குரு இல்லாத சிஷ்யர் என்பதாக அடிக்கடி பெருமையடித்துக் கொண்ட ஜெயகாந்தன். அவரை அறிந்தோ. அறியாமலோ, மேலே கண்ட 'விந்தன்' எனும் புரட்சி எழுத்தாளரால் பாதிக்கப்பட்டவர் என்பதுதான் யதார்த்தமான நடப்பு. ஆகவே தான், விந்தன் அந்நாளில் புதுமைப்படுத்தி எழுதிய 'பாலும் பாவையும்' திறனாய்வையும் இங்கே வேறு பக்கங்களில் மறுபிரசுரம் செய்திருக்கிறேன். எனது இனிய நண்பராக அவரை அறிமுகப்படுத்தியது, 'விந்தன்' தொடங்கி முடித்த 'மனிதன்.' 'சரஸ்வதி'யில் தொடர்ந்து எழுதியவர், அப்புறம் நான் பொறுப்பேற்று இலக்கியச்சோதனைகளை நடத்த ஏதுவாக அமைந்த 'உமா'விலும் எழுதலானார். பிறகு, 'சாவி"யின் அன்பினால் அவர் எழுதிய 'ஓவர் டைம்' என்கிற கதை 'ஆனந்த விகட'னில் வெளியானதும், இலக்கியப் பசி கொண்டவர்கள் அவரைக் கவனிக்கத் தலைப்பட்டனர். 'ஒரு பிடி சோறு' என்னும் அவரது முதலாவது சிறு கதைக் கொத்தும் ரசிகர்களின் கவனத்தை ஈர்க்கத் தவறவில்லைதான்.

"இச்சந்தர்ப்பத்தில் ஓர் உண்மையையும் வெளிப்படுத்த வேண்டும். அதுவே நியாயம் ; தருமமும் கூட.

ஜெயகாந்தனுடைய நல்லதிர்ஷ்டம், அவருக்குச் சந்தர்ப்பச் சூழ்நிலைகள் அனுசரணையாக வாய்த்தன நினைத்ததை எழுதக் கூடிய வாய்ப்பு வசதிகளும் கிடைக்கலாயின. இலக்கியத்தில் ஜனநாயக தர்மம் அனுமதிக்கப்படுவதில்லை என்கிற குறையும் அவர் வரை தீர்ந்தது; தீர்க்கப்பட்டது. பின், அவர் நாலு பேருக்கு மத்தியில் பேசப்பட்டார். விமரிசிக்கப்பட்டார். சமூகம் என்பது நாலுபேர் மட்டுமல்ல என்னும்படியான தத்துவத்தைப் புலனாய்வின் வழியில், ஓர் இலக்கியவாதியாக நின்று உணரவும் செய்தார். விமரிசனம் செய்யத் தொடங்கிய நாள் முதலாக ஒரு தலைப்பட்சமான பட்டியல் விமரிசகர் என்று பேரெடுத்த க. நா. சு. அவரையும் கடைசியில் சேர்த்து வைத்தார்! எனவே தான், க. நா. சு., வின் 'நளினி' பற்றிய இலக்கிய ஆய்வையும் இங்கே திரும்பவும் நினைவு கூர்ந்துள்ளேன்! அப்பால், அவர் தேடிக் கொண்ட புகழ் அவரைத் தேடி வந்த புகழ் அநியாமானதென்று சிலர் புலம்பினர், தவறாகவே புலம்பினர்.

"அன்பர் த. ஜெயகாந்தனின் சமகால எழுத்தாளர் வரிசையில் வாசவன், கோவி. மணிசேகரன், நா. பார்த்த சாரதி, விக்கிரமன், பி. வி. ஆர். ஜெகசிற்பியன், ராஜம் கிருஷ்ணன், அநுத்தமா, 'பூவை' போன்ற இன்னும் சிலரும் எழுத்துத் துறையில் துல்லியமாகவே பளிச்சிட்டனர்!— ஆனால், இவர்களுக்கெல்லாம் மறுக்கப்பட்டு வந்த எழுத்துச் சுதந்தரமும் ஜெயகாந்தனுக்கு எப்படியோ வழங்கப்பட்டது. இப்படிப்பட்ட அதிர்ஷ்டசாலியான ஜெயகாந்தனைத் தமிழ்ப் பண்பைப் பேணிப் பாதுகாக்கக் கடமைப்பட்ட குடும்பங்கள் பல நிராகரிக்க நேர்ந்த காலம் ஒன்று இருக்கத்தான் இருந்தது!

"ஆனால், இந்த ஜெயகாந்தன் எழுதத் துணியாத ஆபாசங்களையெல்லாம், அவரால் பாதிப்படைந்த படிதாண்டும் பத்தினி எழுத்தாளர் — எழுத்தாளிகள் 'நாலு பேர்' இலக்கியம் என்னும் பெயரில் ஆபாசங்களை

எழுதிக் குவிக்கலாயினர் ! இப்போதெல்லாம் இந்த நாலு பேரைப் பற்றி மட்டுமே தான் பேசப்படுகிறது ! இலக்கிய வாழ்க்கையிலும் இப்படிப்பட்ட விபத்துக்கள் தவிர்க்கப் படுவதில்லைதான் ! ஆனாலும், இந்த நாலுபேரையும் உண்மையான இலக்கிய ஆர்வலர்கள் இப்போது உண்மையாகவே இனம் காணத் தொடங்கி விட்டனர். இவ்வகையில், தமிழ் மக்களைப் பாதை மாற்றித் திசை திரும்பி விட முயன்ற, முயலும் மேற்கண்ட போலி எழுத்தாளர்களையும் எழுத்தாளிகளையும் 'சுதந்திரம்' வாயிலாக 'இனம் காட்டி' அவர்களது சுய ரூபங்களையும் காட்டிய ஓர் ஆறுதலும் எனக்குக் கிடைத்தது ; கிடைக் கிறது ! ... சரி !

**திரும்பிப் பார்க்கிறேன் :...**

கங்காவை மறுபடி திரும்பிப் பார்க்கிறேன் !

அவள் 'சில நேரங்களில் சில மனிதர்கள்' ஜெய காந்தனின் அன்புக் கங்கா !— அருமைக் கங்கா !

ஏன், அவள், அவளுடைய பிரபு வருணித்த மாதிரி, தேவதை கங்காவும் கூடத்தானே ?

என்னென்னவோ நடந்து விட்டது.

எப்படி எப்படியெல்லாமோ நடந்து விட்டது.

இறுதியான கட்டம் :

கங்கா உணர்ச்சி வயப்பட்ட நிலையில், அறிவு பூர்வ மான நினைவில், அந்தரங்கம் புனிதமானது, என்னும் தத்துவத்தை நெஞ்சில் இருத்தி, தனக்குத் தானாகவும், தன்னில் தானாகவும் மனத்தை முகமூடி கிழித்தும் மனத் திற்கு மனமே சாட்சியாகவும் பேசிக் கொண்டிருக்கிறாள்: ...'என் மனசுக்கு நன்னா தெரியறது. நான் எந்த மனுஷனை மனப்பூர்வமா சம்மதிச்சு ஏத்துண்டாலும், அந்த உறவுக்கு எவ்வளவு மங்களகரமான பேரைச் சூட்டினாலும, அதுக்கப்புறம் எந்தக் கேவலமான

விபச்சாரத்துச்கும் நான் தயாராயிடுவேன். ஏன் அப்படி நான் நினைக்கிறேன்? ஏன்னா, என்னைப் பொறுத்த வரைக்கும் இது அதனுடைய ஆரம்பம்னு உள்ளூர(ற)த் தோன்றது; பயமா இருக்கு! இல்லேன்னா, என் மனசுக்கு எல்லா விதத்திலும் பிடிச்சு இருக்கிற இவர் கிட்டேயே (பிரபு-மிஸ்டர் பிரபு) நான் இப்படி விலகி இருக்க மாட்டேன். இவரை விட எனக்கு பிடிச்ச இன்னொரு புருஷாள் இருக்கவே முடியாது. நான் தைரியமா, என் மனசுக்குள்ளே முதல் தடவையா, இறுதியா நினைக்கறேன்: **'எஸ்! ஐ லவ் ஹிம்!...'** ஆனால், இந்த லவ் எல்லா லவ் மாதிரியும் எதிலேயோ போய் முடியாது!? இது முடியற,, தீர்ந்து போற, திகட்டிப் போற 'காதல்' இல்லை!... இவரைப் பிரியவோ, இவரை இழக்கவோ நான் எந்தச் சூழ்நிலையிலும் சம்மதிக்க மாட்டேன். இவர் கேட்டார்னா, இவருக்காக நான் எதையும் தருவேன்— இந்த உடம்பு உட்பட! ஆனால், இவரே விரும்பினால் கூட அதுக்கு இவர் என்னென்னவோ காரணம் சொல் கிறார்; இவரை விட்டுப் பிரிஞ்சு இருக்க நான் ஒருக்காலும் சம்மதிக்க மாட்டேன்!... இவருக்கும் கூட இது புரியலையேன்னு நினைச்சு நான் சிரிக்கறேன்...!' அவளது மனச்சாட்சி சிரித்ததா, இல்லை, அவளேதான் சிரித்தாளா?

தன்னை மறந்து, தான் சம்பந்தம் கொண்ட இந்தத் தமிழச் சாதிச் சமுதாயத்தையும் மறந்து, சமுதாய விதியையும் மறந்து, சமுதாயத்தின் வீதியிலே, ஓடின காரிலே ஓடாமல் கொள்ளாமல் 'வழுக்கி' விழுந்த கங்கா உயிர் மூச்சை உயிர்ப்பு வழுவாமல் இழுத்துப் பிடித்துக் கொண்டு, மெள்ள மெள்ள, மெல்ல மெல்ல எழ முயன்று எழுந்து நின்று, குனிந்திருந்த தலையைக் கம்பீரமாக நிமிர்த்த எத்தனம் செய்து நிமிர்த்திக்கொண்டு, சூது கவ்வி விடுதலை பெற்ற தார்மீக உணர்வோடு, தன்னைத் தானே திரும்பிப் பார்த்துக்கொண்டு, தனக்குத் தானே தன் மனத்தையும் மனநேசத்தையும் அங்கீகரிக்கப்படாத

ஓர் உண்மைச் சத்தியம் அங்கீகரிக்கப்பட வேண்டுமென்ற பலவீனமானதொரு வேடிக்கையான — விசித்திரமான — தனியான பலத்தோடு தன்னுள்ளே சிரித்துக் கொள்கிறாளே கங்கா, இந்தக் கட்டத்தில்தான் கங்கா, கலப்படமில்லாத அசல் வீரத் தமிழச்சியாகவே பளிச்சிடுகிறாள் !

கங்கா என்னதான் ஆயிரம் தப்புகளைச் செய்திருந்தாலும், எல்லாத் தவறுகளுக்கும் தனது மனத்தைத் திறந்து காட்டிப் பிராயச்சித்தம் தேடிக் கொண்டு விட்டாளே என்று இரக்கப்பட்டு, ஆத்திரம் தீர்ந்து, அவள் மீது இந்தச் சமூகத்தின் சார்பிலேயே அனுதாபம் கொண்டு, நல்ல தீர்ப்பு வழங்கவும் என்னுடைய இலக்கிய மனம் தயாராகிறது !

இந்தத் தீர்ப்பிலே தான், கங்காவைப் போன்றே, கங்காவின் பரிபூரண உரிமையாளரான திரு.ஜெயகாந்தன் அவர்களும் சமுதாயத்தின் குற்றவாளிக் கூண்டுகளினின்றும் ‘விடுதலை’ பெறக் கூடிய நல்வாய்ப்பும் உருவாகிறது ; உருவாக்கப்படுகிறது !

கன்னி இருட்டிலே, கொட்டும் மழையிலே ஒரு பெரிய காரை நிறுத்தி, கன்னிப் பூஞ்சிட்டான கங்காவை— பிரபுவைக் கொண்டு அதில் ஏற வைத்து, அங்கே அவளது கன்னித் தன்மைக்குப் பங்கம் ஏற்படவும் தூண்டி, அவளை ஆட்டிப் படைத்து அலைக்கழித்து, கலை இலக்கியத் துறையில் செயற்கைத் தனிப்பாங்கு முறையைத் தொற்றியும் பற்றியும் நின்ற கங்காவின் படைப்பாளி போதை தெளிந்து, போதம் பெற்றவராகி, ஒரு சமரச இணக்கத்துக்கு **(Compromise)** உடன்பட முன் வருவதற்கு மேலே விவரிக்கப்பட்ட ‘எஸ் ! ஐ லவ் யூ !” என்னும் நெகிழ்ச்சி மிக்க அந்தச் சுயதரிசன நிகழ்ச்சி மட்டுமேதான் உதவுகிறது என்பதையும் நான் மறந்துவிட மாட்டேன்.

இதற்கு முந்தியும் பிந்தியும், கங்காவின் பிரபுவும், பிரபுவின் கங்காவும் ஜே. கே.யின் ஆணைக்கு இணங்கி என்னென்னவோ பேசிக் கொள்ளுகின்றனர் !

அவை அவர்களது சொந்த விவகாரங்கள் !— எக்கேடு கெட்டும் தொலையட்டும் !

**உணர்ச்சி கூத்து**

உணர்ச்சிகள் இதோ, திரும்பவும் கூத்து நடத்துகின்றன :

பன்னிரண்டு ஆண்டுகளைக் கழித்தபின், கங்காவும் பிரபுவும் மீண்டும் சந்தித்து, தங்களிடையே அந்யோந்யமான சிநேகத்தையும் நேசத்தையும் அன்பையும் பரஸ்பரம் தொடர்ந்து பரிமாறிக் கொள்ளுகிறார்கள்.

பிரபு வெகுளித்தனமான பெண்பித்தன். கங்காவிடம் தன்னைக் காட்டிக் கொள்கிறான் ; தன்னைக் காட்டிக் கொடுத்து விடுகிறான் : "...நான் ரொம்பச் சின்ன வயசிலயே கெட்டுப் போயிட்டவன் ; ஆனாலும், நான் யாரையும் கெடுத்தவன் இல்லை... பத்மா எனக்குப் பெண்டாட்டிதான் ; அதுக்காக, நான் அவளைப் பலவந்தம் பண்ண முடியுமா ?"

பிரபு பேசுவதைக் கேட்கக் கேட்க, கங்காவிற்கு வருத்தமாக இருக்கிறதாம். அழகான நினைவுகள் அந்தரங்கத்தோடு அழகாகச் சதுரங்கம் ஆடுகின்றன : '...நான் விரும்பினாக்கூட, இன்னொரு தடவை கெட்டுப் போறதுக்கு எனக்குத் தலைவிதி இல்லே போல இருக்கு ! இவரைக் காதலிக்க முடியாத நானும், தன்னை விரும்பாதவளைப் பலவந்தப்படுத்தத் தெரியாத இவரும் இவ்வளவு நெருக்கமா இருக்கிறது எவ்வளவு செளகரியமான சங்கடம் !' இவ்வாறு நினைத்துக் கொள்ளும் கங்கா, அடுத்த சடுதியில் பிரபுவிடம் "என்னால் யாரையுமே லவ் பண்ண முடியாது !" என்று தெரியப்படுத்திய இதே கங்கா, தானே, கடைசியில் "எஸ் ! ஐ லவ் ஹிம் !" என்று

பிரபுவை நினைந்து, நினைந்து, உயிரும் உயிர்ப்பும் தத்தளித்துத் தட்டுத் தடுமாறித் தவித்துத் துடிக்கிறாள் ? நல்ல பெண் அம்மா நீ !— முன்னுக்குப்பின் இப்படியா முரண்படுவாய் ?— ஜே. கே !— மூச் !

இதோ, தொடர்கிறான் பிரபு :... "அன்னிக்குக் காரிலே நடந்தது உன்னுடைய சம்மதத்தோட தான். அடுத்த நிமிஷமே, அது உனக்குப் பிடிக்கலேன்னு எனக்குத் தெரியும். ஆனா, அதுக்கு முன்னே, அதுக்கு முதல் நிமிஷம் நீ அதுக்குச் சம்மதிச்சேங்கறது (பிராமண நெடி— சகவாச தோஷம்) பொய் ஆகக் கூடாது ! நீ சம்மதிச்சுட்டதுக்கு உன்னுடைய அறியாமை காரணமா இருந்திருக்கலாம். நான் அப்பவே புரிஞ்சுக்கிட்டேன். ஆனா, அதுக்காக அதை ஒரு 'ரேப்'னு (Rape) நினைக்காதே. அப்படி நீ நினைச்சதனாலேதான், அதை உங்க அம்மா கிட்டே போய்ச் சொன்னே. எல்லாக் கஷ்டத் துக்கும் அது தான் காரணம்... நான் மட்டும் வேற மாதிரி அயோக்கியனா இருந்தா, இதிலே இந்த உன் பலவீனத் திலே அட்வாண்டேஜ் எடுத்துக்கிட்டு உன்கிட்டே (சென்னப்பட்டண பாஷை கைவரக்காணோமே!) நான் இப்பவும் 'மிஸ்பிஹேவ்' பண்ணமாட்டேனா ?"

குமரி, அல்லது குமாரி கங்காவுக்கு நான் மனமுவந்தும் மனம் நொந்தும் வாசித்து அளித்த குற்ற மடலுக்கு, அதாவது காரில், அவளை அவன் இன்பம் துய்ப்பதற்கு அவளும் உடந்தையானாள் என்னும் படியான என் குற்றச்சாட்டுக்கு மற்றொரு குற்றவாளியான பிரபுவே சாட்சிக்கு வரட்டுமென்று தான் இத்தனை நாழி நான் காத்திருந்தேன். 'அன்னிக்குக் காரிலே நடந்தது உன் னுடைய சம்மத்தோடதான் !'—**Well done, Mr prabhu !...**

பிரபு பேசி வாயை மூடவில்லை.

உடனேயே, கங்கா மீண்டும் கையும் களவுமாக அவ ளுடைய உள் மனத்திற்கு உள்ளேயே பிடிபட்டுவிடுகிறாள்: 'அட, அசடே! (பிரபுவைத்தான்) இதை நான் உன்கிட்டே

சொல்றதே, 'இந்த என் வீக்னஸ்லே நீ அட்வாண்டேஜ் எடுத்துக்கோ!'ங்கிறதுக்குத் தானே?...'

தாயே!—எனக்குத் தெரியும்!—பிரபுவை இந்த ஜன்மத்தில் உன்னால் மறக்கவே முடியாது! மறக்கவும் வேண்டாம், தாயே!... 'தொட்ட'குறை, 'விட்ட'குறை என்பது கூட ஒரு பிராப்தம் இல்லையா, என்ன?

**நிலை உச்சம், இதோ:**

**வா**ழ்க்கை முடியும் போது உச்சக்கட்டம் எதுவும் பொதுவாக நிகழ்வதில்லை.

ஆனால், கதை முடிகிறபோது, உச்சக்கட்டம் என்ற ஒன்று கட்டாயமாக உருவாக வேண்டும்; அல்லது, உருவாக்கப்பட வேண்டும்.

'சில நேரங்களில் சில மனிதர்கள்' உச்சக்கட்டம் இதோ, தயார்!

அதற்குள்—

என்னென்னவோ நடந்து விட்டது! ஆமாம்; கங்கா—பிரபு சம்பந்தப்பட்ட வரையிலும் என்னவெல்லாமோ எப்படியெல்லாமோ நடந்து விட்டது!

ஒரு மழையில், ஓர் இருட்டில், ஒரு காரில், ஒரு கங்காவின் ஒரு கற்பு பறி போயிற்று; பறிக்கப்பட்டது. தன்னை இழந்தவள், தன்னை உணர்கிறாள். இவ்விபத்து நடந்து, சரியாகவோ, தப்பாகவோ, பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்த பின்—பன்னிரண்டு ஆண்டுகளைக் கழித்தபின், என்னவோ ஓர் உந்துதலின் பேரில், பிரபுவை அதாவது, தன்னைச் சுவைத்தவனை, அதாவது, அவன் விரும்பியோ, விரும்பாமலோ அவளைப் 'பதம்' பார்த்த அந்தப் பிரபுவை எப்படியோ 'இனம்' கண்டு, தேடிக் கண்டு பிடித்து, தொலை பேசியிலும் அவனோடு தொடர்பு கொள்கிறாள்.

ஆனால், பிரபுவுக்கு 'இனம்' விளங்கவில்லை.

நயமாகவும் விநயமாகவும் விளக்குகிறாள் அவள்: "நேரிலே பார்த்தால் தெரியும்!"

அவர் : "ஓ !"

அந்த 'ஓ' ஒலியில் அவள் ஒரு மகாமகக் காலச் சரித்திரத்தை ஒளி வடிவில் காண்கிறாள்.

பிரபுவும் கங்காவும் மீண்டும் முன்போலவே ஓர் இனிமையான மாலைப் பொழுதில் சந்தித்துக் கொள்கிறார்கள். சந்திப்பு தொடர்கிறது. தொடர்பு சேர்க்கிறது. வாய்ச்சொற்கள் மணக்கவும் செய்கின்றன. நாற்றமடிக்கவும், நாற்றமெடுக்கவும் தவறிவிடவில்லைதான். ஆனால், ஒன்று : அன்று நடந்த அந்த கற்பு விபத்துக்கு இன்று சம்பந்தம் கொண்ட அவர்கள் இருவருமே தங்களுக்குள் நீதிவிசாரணை நடத்திக் கொள்கிறார்கள். சம்பந்தப்பட்ட இவ்விருவருமே, சம்பந்தப்பட்ட அந்தக் கற்பின் விபத்துக்குப் பொறுப்பேற்க வேண்டிய குற்றவாளிகள் என்னும் சமூக விதியை மறந்து இன்றைக்கு ஒரு பேச்சு, நாளைக்கு ஒரு பேச்சு என்று என்னென்னவோ பேசுகிறார்கள் ; எப்படி எப்படியோ கதைக்கிறார்கள். அவனுடைய கை அவளது தோளில் பட்டுவிட்டதற்காக 'சீ' என்று ஆத்திரப் பட்டவள், பின்னர், ஏன் அப்படி 'சீ' என்றோமென்று வருந்தும்போது, இவ்விருவரிடையே பரஸ்பரம் நிலவும் பிரியமும் பரிவும் அன்பும் நேசமும் இங்கு வலுவடையவும் செய்கின்றன. உடலைத் தீண்டியவன் உள்ளத்தையும் தீண்டி விட்டான் என்கிற 'ஞானோதயம்' அவளுள் ஏற்படுகிறது!— என்றாலும், பிரபுவிடம் தன்னை இழந்த கங்காவும் கங்காவிடமும் தன்னை இழந்த பிரபுவும் வெவ்வேறு சந்தர்ப்பங்களிலே, "நாம் ஒருவரையொருவர் காதலிக்க முடியாது!" என்று வசனம் பேசவும் மறக்கவில்லை. இதற்கிடையில், பத்மாவின் வாழ்க்கைப் பங்காளியாக பிரபுவின் துணை தனக்கு

அவசியமென்ற முடிவுக்கு வரவேண்டியவள் ஆகிறாள் கங்கா. பிரபுவின் ஆசை நாயகியாக அமையாவிட்டாலும், பிரபுவின் ஆசைநாயகி என்ற பெயரையாவது எடுக்கவேண்டுமென்ற வெறித்தனம் அவளுக்கு மேலிடுகிறது. ஆனால் அவனோ அவளுக்கு வேறிடத்தில் கலியாணம் செய்து வைக்க மனப்பூர்வமாக விரும்புகிறான். அவள் மறுக்கிறாள்.

இப்படியாகத்தானே குழப்பங்களின் 'க்யூ' நீள்கிறது ; சிறுக்கிறது.

**உச்சநிலையில், படுக்கையின் பாகப்பிரிவினை !**

இனிமேல், உச்சக்கட்டம்தான் மிச்சம் !

"எஸ். பிரபு ஹியர் !"

இப்போது பிரபுவிடம் தொலைபேசியில் ''ரியலி...வி லவ் ஈச் அதர் !" என்று புதியதான சேதி ஒன்றை அஞ்சல் செய்த கையோடும், அவள் தன் மனத்தோடு பேசுகிறாள் : 'இத்தனை வருஷமா இவருக்கும் எனக்கும் நடுவில் பொய்யாய் விழுந்த திரையெல்லாம் கிழிச்சுண்டு, வெறும் ஆம்பிளையும் பொம்பளையுமாச் சேர்ந்து கலந்துடணும்னு என் மனசு துடிக்கறதை இப்பத்தான், இந்த நிமிஷம்தான் நான் புரிஞ்சுக்கறேன். இஸ் திஸ் டூ லேட் ? அதுக்குக் காலம் கடந்து போயிடுத்தா ? இவர் என்னைப் பார்க்கவே மாட்டாராமே ? கல்யாணப் பத்திரிகையோட வந்து நின்னாத்தான் பார்ப்பாராமே ?... இது என்ன பைத்தியக்காரத்தனம்?'

தற்சமயம், தொலைபேசியில் பிரபுவிடம் மீண்டும் பேச ஆரம்பிக்கிறாள், பிரபுவின் கங்கா : "ஐ வில் மேரி யூ !... உங்களோட சொத்துக்காகவோ, அந்தஸ்துக்காகவோ இல்லை; அதெல்லாம் கிடையாதுன்னு எனக்குத்

தெரியும். உங்களை ஒரு வெறும் ஆணாகத்தான் எனக்கு அறிமுகம். உங்களோட எனக்கு அப்படிமட்டும்தான் பழக்கம். வெறும் ஒரு ஆணின் உறவுக்காக நான் உங்களைக் கல்யாணம் பண்ணிக்கறேன். இனிமேலும், இப்படியே பழகிண்டு நம்மை நாமே ஏமாத்திக்க வேண்டாம்! உங்ககிட்டே எனக்கு வெட்கம் இல்லே. என்னுடைய படுக்கை, நம்மால் பகிர்ந்து கொள்ளப்படுவதற்காகக் காத்திருக்கிறது. ஐ வில் ஷேர் மை பெட் வித் யூ"

"ஸ்டாப் திஸ் நான்சென்ஸ்!"

மறுபடி பிரவுடன் தொலைபேசியில் பேச்சைத் தொடர்வதும் கங்காவாகத்தானே இருக்க வேண்டும்?

"நீங்க இல்லாமல் என்னாலே இருக்கவே முடியாது."

"இருந்து பார், முடியும்."

"உங்களாலே முடியுமா?"

"முடியணும்னு நினைக்கிறேன்; முடியணும்."

"நான் என்னையே இழந்துட்டேனே! இது உங்களுக்குத் தெரியலையா?"

"இல்லை; நீ உன்னை இழக்கலே. ஒரு தடவை நான் அப்படி நினைச்சது எவ்வளவு பெரிய தப்புன்னு நான் புரிஞ்சுக்கிட்டேன். மறுபடியும் அப்படி நினைச்சு, இன்னொரு பெரிய தப்பைச் செய்ய நான் தயாரா இல்லை!...இப்படி நான் சொல்றதுக்காக என்னை மன்னிச்சிடு, கங்கா!... இந்தக் கல்யாணத்தையோ, அல்லது. வேறு எந்தக் கல்யாணத்தையோ ஒப்புத்துக்கிட்டு இன்னொருவரின் மனைவியாகத்தான் நீ என்னைப் பார்க்க முடியும்! நான் உன்னை இனிப் பார்க்காமல் இருந்தால்தான் அது

சாத்தியமாகும். இந்த அறிவையும் பலத்தையும் எனக்குத் தந்த உனக்கு நன்றி கூறி மறுபடியும் இதை நான் உறுதி செய்கிறேன். எனக்கு நீ சொன்ன யோசனைகளை யெல்லாம் நான் கேட்டிருக்கிறேன். என்னோட இந்த ஒரு வேண்டுகோளையாவது நீ கேட்கணும். இதைக் கேட்கக் கூடாதென்று நீ பிடிவாதம் பிடிச்சா நாம நிரந்தரமாகப் பிரிந்து போவதைத் தவிர வேறு வழி இல்லை! கடவுள் உன்னை ஆசீர்வதிக்கட்டும்! மே ஐ ஸே குட் பை!...''

கங்காவிற்குத் தலை பற்றிக் கொண்டு எரிகிற மாதிரி கோபம் சீறுகிறது. தொலைபேசியின் செய்தி வாங்கிக் கருவியை 'மடாரெ'ன்று வைக்கிறாள். அப்புறம் தனக்குத் தானே சொல்லிக் கொள்கிறாள் கங்கா: ''குட் பை!''—

**க**ங்கா ஒரு கம்பச் சித்திரம்!

இந்தத் தமிழச்சியைப் புதுமைப் பெண்ணென்று சொல்ல முடியாவிட்டாலும், புரட்சிப் பெண்ணென்று தாராளமாய்க் கூறலாம்; கூறவும் வேண்டும். அவளுடைய பெண்மை, அந்தக் காரில் ஏற்பட்ட கற்பின் விபத்திற்குப் பிறகு தான் விழித்துக் கொண்டது என்பதும் மறுக்க முடியாத உண்மையாக ஆகின்ற நிலையில், அவள் தனக்குத்தானே சுயப்பரிசோதனை நடத்திக் கொள்ளவும் அதன் பயனாகச் சுய தரிசனம் ஏற்படவும் வாய்ப்பு வசதி ஏற்பட்டதென்பதும் அங்கீகரிக்கப்பட்ட பாவமன்னிப்புக்கு வழிகோலி விடுகிறது. 'சிறு வயதில் செய்த பிழையைச் சிலுவையெனச் சுமக்கிறாள், பாவி!—

பாவம், பிரபுவின் அறிமுகமே, அதாவது பத்மாவின் கணவனான பிரபுவின் அறிமுகமே கங்காவிற்கு விதி ஆகிறது; வினையும் ஆகிறது. பிரபுவை மறந்தவள், ஒரு மகாமகத்திற்குப் பிறகு அவனை நினைக்கத் தொடங்கியதுமே, அவள் விளையாடத் தொடங்கிவிடுகிறாள்; களங்கம் கற்பித்து கொண்ட, களங்கம் கற்பிக்கப்பட்ட அவளுடைய

புனிதக் கற்பு, அந்தரங்கப் புனிதம் கொண்டு, அவளையே புனிதமடையவும் தூண்டுவதால்தான், அவளது மனக் கிழியில் பிரபு உயிரோவியமாகவும நிலைத்துவிட நேருகிறது! — விட்டகுறை — தொட்டகுறையின் பலன் இது தானோ?

கங்கா சராசரியான மானுடப் பிறவிதான். ஆதலால் தான் பலவீனங்களை எண்பத்தைந்து சதவீத அளவிலும், பலத்தைப் பாக்கியுள்ள பதினைந்து சதமான அளவிலும் அவளால் கைக்கொள்ளவும் முடிகிறது! ஆனாலும், அவளது பலம்தான் இறுதியிலே அவளுக்குக் காப்பு ஆகிறது!—இல்லையென்றால், தன் படுக்கையைப் பிரபு வோடு பகிர்ந்து கொள்ளத் துணிவாளா?—இந்த வீரத் தனமான துணிச்சலில்தான், பாரதப் பெண் கங்கா வீரத் தமிழச்சியாகத் தலை நிமிர்ந்து நிற்கிறாள்! மனம் ஒன்றிய, மனப் பூர்வமான, அந்த ஆத்மார்த்தமான நேசத்திலேதான்— பிரபு ஒருவனுக்கே காணிக்கை செலுத் தப்பட்ட— காவு கொடுக்கப்பட்ட அந்த ஆத்ம சமர்ப் பணத்திலேதான், அவள் ஒரு தனி மனிதப் பிரகிருதியாக அல்லாமல், ஒப்பற்றதொரு தனிமனிதப் பிரதிநிதியாகப் பொலியவும் பொலிவூட்டவும் வாய்க்கிறது! அருமைத் தமிழ்ச் சமுதாயத்தையும் களங்கப்படுத்தி அநீதி இழைத்த அவ்விருவரும் தங்கள் தவற்றை மறந்து, சமுதாயத்தின் பேரில் பழியைச் சுமத்தியதோடு, அவர்கள் தங்களையும் ஏமாற்றிக் கொண்டு முடிவில் இருவரும் திசைமாறிப் பிரியவும் நேர்கிறது!— இந்த சமூகக் குற்றவாளிகளுக்கு அந்தக் 'குட்பை' தான் இரு தரப்பிலும் தண்டனையை வழங்குகிறது—இங்கே தான், கங்காவின் ஜெயகாந்தன் பிரபுவின் ஜெயகாந்தனாகவும் பளிச்சிடுகிறார். **Superb Mr. Jayakanthan!'**...

எழுத்தை ஆள்பவன், இரண்டாவது பிரம்மா மாத்திரம் அல்லன். அவன் சமுதாயத்தின் ஆன்மாவும் கூட— ஆகவே, இலக்கியப்படைப்பாளன், தனது குறிக்

கோள், தனது ஆசாபாசங்களைக் கடந்த வகையில் இயங்கும் வண்ணம், தன்னையும் தன் இலட்சியத்தையும் கட்டிக் காத்திட வேண்டும் !

ஆனால்,

'சில நேரங்களில் சில மனிதர்கள்' ஜெயகாந்தனோ, இவ்விதிமுறையில் தோற்றுப் போய் விடுகிறார்.—ஆகவே தான், அவருடைய கங்காவும், கங்காவின் பிரபுவும்கூட அவர்களது வாழ்க்கை விளையாட்டுக்களில் தோற்று விடுகிறார்கள். இந்த லட்சணத்தில், சமூகத்தின் ஆன்மா வெனப் பொலிந்து பொறுப்பேற்கக் கடப்பாடு கொண்ட ஜெயகாந்தன், இந்தச் சமூகத்திற்கென்று தனிக்கடமை உணர்வுடன் என்ன செய்தியை, எப்படிச் சொல்லுவார் ? —பாவம் ! தவிரவும், இந்த ஜே. கே. இந்தத் தமிழ்ச் சமுதாயத்தின் போராட்ட வீரரா, என்ன ?...

○ தொடரும் வாழ்க்கையின் நிர்வாண உண்மை களாகவே தொடரும் கதை தொடர வேண்டும் !

பொய் இல்லை !

○○ அதோ, கங்கா விஸ்கியைச் சரண் அடைந்து கிடக்கிறாள். அவள் வரை, விஸ்கி வேறு, பிரபு வேறா ?

சரி, கங்கை எங்கே போகிறாள் ?—அது அவள் சொந்த விஷயம்.

○○○ இறுதியாக, ஒரு சேதி :

லட்சுமியையும் ஸ்ரீகாந்தையும் நான் என்றென்றும் மறவேன் !...

○○○○ 'சில நேரங்களில், சில மனிதர்கள்' ஜெய காந்தன் சாகித்ய அகாடமி பரிசினைப் பெற்றவர் ஆயிற்றே ?—இலக்கிய அபிமானம் கொண்டு வாழ்த்தத் தான் வேண்டும் !...

○ ○ ○

# 2. பாலும் பாவையும்

## விந்தன் :

பார்வை : **திரு விந்தன் அவர்கள் ;**

உங்களுடைய முதல் நவீனம் "பாலும் பாவையும்!"— அதைப் படித்து முடித்த சகோதரி சரளா உங்கள் முன்னே முகம் காட்டத் துணிவு கொள்ளாவிட்டாலும், அகம் காட்டி, அதில் 'புறத்தை'யும் காட்டி உங்களுக்குக் கடிதம் எழுதத் துணிந்திருக்கிறாள். அந்தச் சகோதரியின் துணிச்சலை எந்த அப்பாவியும் பாராட்டாமல் இருக்க மாட்டான். சரளாவின் திருமுகம் கிடைக்கப்பெற்ற நீங்கள் மகிழ்ச்சி தெரிவித்திருக்கிறீர்கள். மரபை ஒட்டிய பண்பாடு. நன்றியும் கூறியிருக்கிறீர்கள். உங்களுடைய நாவலை மனத்திண்மை மாறாமல், பெண் ஒருத்தி படிப்பதென்பதோ, படித்த பிறகு உங்களுக்கு தன் கருத்தை வெளியிடுவதென்பதோ, லேசுப்பட்ட காரியமா, என்ன? ஒரு முறை என்ன, ஓராயிரம் தடவை வேண்டுமானாலும் நீங்கள் நன்றி சொல்லலாமே ?

தமிழ்ச் சமுதாயத்திலே, மாதவம் போற்றிடும் பெண் குலத்தை மாசுபடுத்துவதற்காகத் தாங்கள் இப்

புதினத்தைத் தயாரித்திருக்கிறீர்கள் !'—சரளாவின் கட்சி இது. கட்சி என்று எழுதுவதைவிட, குற்றச்சாட்டு என்றே எழுதிவிடுவது தான் பொருத்தம்.

"இல்லை, இல்லை ; பெண் குலத்தைத் தூய்மைப் படுத்தவே நான் இக்கதையை எழுதியிருக்கிறேன் !'' பெண்ணுடன் போட்டி போட்டுக் கொண்டு நீங்கள் 'கச்சை' கட்டிப் பேசியிருக்கிறீர்கள். உங்கள் பேச்சிலே 'பயம்' தொனிக்கிறது நீங்கள் உணர்வீர்களோ, என்னவோ ? நான் உணருகிறேன். உங்களுடைய அந்தப் 'பயம்' வாழட்டும் ! ஏனெனில், அந்தப் பயம் தான் உங்களுக்கு அகல்யாவைப் பற்றி — அதாவது இருபதாம் நூற்றாண்டைச் சார்ந்த 'பதில் வெட்டு அகல்யா'வைப் பற்றி எழுத உங்களுக்குத் 'துணிச்சலை' வழங்கியிருக் கிறது. அந்தத் 'துணிச்சலை'யும் வாழ்த்தத்தான் வேண்டும்.

அகல்யா ! — சிரிப்புக்குரிய ஓர் அபலை. காதலை நம்பி, வாழ்க்கையைக் கை நழுவ விட்ட பைத்தியக்காரி !

கனகலிங்கம் ! — அனுதாபக்குரிய ஓர் அப்பாவி ! வாழ்க்கையை நம்பி உயிரைக் கை நழுவ விட்டவன்.

'உறங்குவது போலும் சாக்காடு' என்கிறார்கள் அனுபவசாலிகள். அந்தத் தூக்கத்தில் அகல்யாவையும் கனகலிங்கத்தையும் கட்டுண்டிருக்கச் செய்து விட்டீர்கள். நீங்கள் உங்களுக்கு எவ்வளவோ வேலை மிச்சம். 'நல்லவர்கள் வாழ்வதில்லை" என்ற அபாய அறிவிப்பு வரிகளுடன் நீங்களும் 'கோழித் தூக்கம்' போட ஆரம்பித்து விட்டீர்கள். உங்களது இந்தத் தூக்கம் தான் எனக்கு விழிப்புச் சக்தியைக் கொடுத்திருக்கிறது. வாழ்க ! உங்கள் உறக்கம் !

சந்தேகமே இல்லை. கனகலிங்கம் அப்பாவிதான். முப்பது நாட்களுக்கு கிட்டும் முப்பது ரூபாய்ச் சம்பளத்தி னால் ஆறுதல் கனியாவிட்டாலும், அந்தப் புத்தகக்

கடையில், தான் விரும்பியதை இனாமாகப் படிக்க முடிந்ததில் அவன் பெரிதும் தேறுதல் பெற்றான். காதலைக் கட்டுக் கதை என்றும், அதைக் கதைகளிலும் காவியங்களிலும் படித்து அனுபவிப்பதோடு நிறுத்திக் கொள்ள வேண்டுமென்றும் உணரக்கூடிய அளவுக்கு அவனுக்குப் பரிபக்குவம் அளித்திருக்கிறீர்கள். இந்த லட்சணத்தில் அவனுக்கு இதயம் வேறு இருந்து தொலைத்தது. உள்ளமோ வெள்ளை. அதனால்தான், வாழ்க்கைக்குக் காதலை உயிர் நாடியென மதித்த அகல்யா, காதலை இழந்ததுடன் நிற்காமல், கற்பையும் இழந்து, 'என்னைப் போன்றவர்களை உங்களைப் போன்ற இதயமுள்ளவர்கள்தான் ஆதரிக்க வேண்டும்' என்ற பீடிகை போடத் துணிகின்றாள் போலும்! நப்பாசையின் தோள்களை நைந்த ஆசை பற்றுவதற்கு முன்னமேயே அவர்களுக்குள் காதல் மறு பிறவி எடுத்து விடுகிறது. காதல் எனும் பசியை அடக்கித் தூங்க வைக்கக் காசு பணம் துவிக்க வேண்டுமென்று தவம் இருக்கிறான் கனகலிங்கம். ஒன்றியாகப் போனவன், கலை ஞானபுரத்திலிருந்து திரும்புகையில், ஒன்றில் ஒன்றாகித் திரும்புகிறான். ரெயிலடியில், அவனுடன் அகல்யாவைக் கண்ட அவளது முதலாளி அவனைத் தவறுபடக் கருதி விடுகிறார். வந்தது ஆபத்து. அவனே தன் தமையனாரின் மகளைக்கெடுத்தவன் என்று தீர்மானித்து, அவனை வேலையை விட்டு நீக்கிய தோடு திருப்தி கொள்ளாமல், அவனை ஆள்வைத்துக் கொன்று உலகத்தைவிட்டே நீக்கி விடுகிறார். அகல்யாவைக் கெடுத்தவனோ இந்திரன்! ஆனால், ஆள் மாறாட்டம் உம்மைப் பழவினையின் உருவத்தில் வந்து சிரிக்கிறது. பாலும் பாவையும் கெட்டுவிட்டால் பயனில்லை என்ற சமுதாயத் தத்துவம் சமையற்காரன் மூலம் அவள் காதுகளில் ஒலிக்கிறது. உடனே அவளது கண்கள் திறக்கின்றன. எளிய முறையிலே அவளை சாகடித்து விட்டீர்கள். எழுத்தாளர்களின் தலைவலியை மிக எளிதில் போக்க வல்லது ஆயிற்றே ஆழி?

''செத்துத்தான் சமூகத்தின் அனுதாபத்தைப் பெற வேண்டுமானால் அந்தப் பாழும் அனுதாபம் எனக்கு வேண்டவே வேண்டாம்!" என்று வீரம் பொழிந்த அகல்யாவை நீங்கள் ஏன் அவ்வளவு துரிதப்பட்டுக் கொன்று போட்டீர்கள்? உங்களுக்குக் கூட அவள்பால் இரக்கம் பிறக்கவில்லையா?" "நான் உன்னைக் காதலிக்காமல் கொல்லுவதைவிட காதலித்தே கொன்று விடலாமென்று நினைக்கிறேன்!" என்று உங்கள் கனகலிங்கத்தைப் பேச வைத்தீர்களே, அதன் நிமித்தம்தான் அவளுக்கு வாழ்விலிருந்து 'விடை' கொடுத்தீர்களா?

என் ஆழ்ந்த அனுதாபங்கள் அகல்யாவுக்கு உரியன வாகுக. ஏன் தெரியுமா? அவள் செத்துப் போனாளே என்பதற்காகவா?—அன்று. அவள் அருமை மிகுந்த இந்தத் தமிழ் மண்ணில் பிறந்தாளே என்பதற்காக!

"ஒரு காலத்தில் சொர்க்கத்திற்கு இருந்த மதிப்பு, காதலுக்கு இருக்கிறது. இரண்டும் கற்பனையே என்றாலும், காதலைக் கைவிட நம்மால் முடிவதில்லை!"

'அமிர்தம்' என்ற என்னுடைய சிறுகதைத் தொகுப்பிற்கு தாங்கள் அருளிய முன்னுரையின் இடையிலே தலைகாட்டும் வாசகம் இது.

காதலை எழிற் கனவுக்கு அடிக்கடி நான் ஒப்பிட்டுப் பார்ப்பது வழக்கம். நம் இருவருடைய காதல் விளக்கங்களும் ஏறக்குறைய ஒரே குரலில்தான் ஒலி காட்ட முடியும். சொர்க்கத்திற்கும் கனவுக்கும் நடுவில் அகப்பட்ட அகல்யா, இந்திரனிடம் அகப்பட்டு ஏமாந்து, அப்பால் கனகலிங்கத்தினிடம் அகப்பட்டு அனுதாபப் பொருளானாள்.

இந்த அனுதாபமே கதைக்கு கருப்பிண்டம் என்பது என் எண்ணம்.

இந்த அனுதாபம் தான் கதையின் பிரதான பாத்திரம். அனுதாபத்தின் இரு வேறு கிளைகள்தாம் அகல்யாவும் கனகலிங்கமும்.

அகல்யாவின் துயரக் கதையைக் கேட்டு வருந்தும் கனகலிங்கம் அவள் பேரில் அனுதாபம் கொண்டு, அதன் விளைபயனாக, நம்முடைய அனுதாபத்தையும் சுவீகரித்துக்கொள்ள முயன்றான். அவன் 'உத்தமன்!'

கற்பனை மெருகிழந்த தன் துயரப் பெருங்கதையைச் சொன்ன அகல்யாவுக்கு வாழ ஆசை துடிக்கிறது. எனவே கனகலிங்கத்தையே தன்னுடைய உயிர்ப்பிடிப்பாகப் பற்றக் கனவு காண்கிறாள். ஆகவே சொர்க்கமெனவும் மகிழ்கிறாள். சமுதாயத்தின் அனுதாபத்தை அடைய வேண்டுமென்பதற்காகச் சாக விரும்பாத அவள் தசரத குமாரனாலும் கைவிடப்பட்டு நடுத்தெருவிலே நிற்கும் நிலையில், 'அடகடவுளே! பாலும் பாவையும் ஒன்றென்று எண்ணியா நீ என்னைப் படைத்தாய்?' என்று நெட்டுயிர்க்கின்றாள், அடுத்த கணம், 'யார் இடம் அளிக்கா விட்டாலும், இந்த உலகத்தைவிட இரண்டு பங்கு பெரிதான கடல் கூடவா நமக்கு இடமளிக்காது?' என்ற 'ஞானம்' அவள் உள்ளத்தில் பளிச்சிடுகிறது. ஒரு முறை இந்திரனுடைய அன்புக்குப் பாத்திரமான அகல்யா இப்போது கடலின் அன்புக்கும் பாத்திரமாகி விடுகிறாள்.

கதை மிகச் சிறிது. ஆனால் உலகமோ மிகப்பெரிது. அதனால்தான் இந்தப்பரந்த உலகத்திலே இந்தச் சின்னக் கதை பலருடைய நினைவுப் பொருளாக இன்னமும் காட்சி கொடுத்துக் கொண்டு வருகிறது. நன்றாக நடந்து வந்த ஒருத்தி வழுக்கி விழுந்து விடுகிறாள்! இந்திரன் நல்லவன் அல்லன் என்றாலும், கெட்டிக்காரன். ஊரைச் சுற்று வதற்கு உதவும் 'லைசென்ஸாக'வும் 'பர்மிட்' டாகவும் தரிசனம் தர அவள் கழுத்தில் தாலியை கட்டினான்; குறிக்கோளை முடித்துக் கொண்டான். ஆனால் அப்போது

'தடம் புரண்ட குறிக்கோளுடன்' அபலை ஒருத்தி தவிப்பதைபற்றி அவனால் கவலைப்பட முடியவில்லை. அவனுக்குத் திருமணம் நடைபெறுகிறது. அவனுடைய அவளுக்குக்காக இரங்குகிறாள் அகல்யா. கனகலிங்கத்தின் உதவி ஒத்தாசைக்கும் சோதனை வந்தவுடன், குறுக்கிட்டு நின்ற பழைய தசரத குமாரன் அவளுக்கு அடைக்கலம் தருவதாகக் கையடித்துச் சொல்கிறான். கடைசியில், சமையற்காரன் ஒருவன் பாலையும் பாவையையும் ஒன்றாக்கி உவமை பேசப் போக, அவள் அக்கணமே கைவிடப்பட்டு, கடலிடைச் சங்கமம் ஆகின்றாள். இது தான் கதை ! அல்லவா ?

உங்களை ஒரு கேள்வி கேட்கப் போகிறேன் ! அகல்யா கனகலிங்கம் ஆகிய இவ்விருவரில் உங்கள் மனத்தை நிறைக்கும் உருவம் யாருடையது ? என்ன, யோசிக்கிறீர்களோ ? இவ்விருவரையும் 'மேலே' அனுப்பி விட்டதன் மூலம், உங்களுடைய அனுதாபத்துக்கு இவர்கள் இருவருமே இலக்காகவில்லையென்று ஏன் கருதமுடியாது ? நான் அப்படித்தான் கருதுகிறேன்.

மனித மனம் சலனம் நிறைந்தது— சபலம் நிரம்பியது. காதல் என்னும் போர்வை மூலமாகத் திரிந்த அகல்யாவுக்குக் காமமே மிஞ்சியிருக்க வேண்டும். கெட்டவள் என்று தெரிந்தும், தன் இடத்தில் தங்கப் புகலளித்து, பிறகு, நெஞ்சிலும் இடம் கொடுக்க எண்ணியிருந்த கனகலிங்கத்தின் எதிர்பாராத மரணத்தின் சூழ்ச்சியைப் பற்றி ஏற்கெனவே ஊகித்ததாக எண்ணும் அவள் முன் கூட்டியே அந்த விபத்தைத் தடுத்திருக்கக் கூடுமே ? "நான் அப்பொழுதே நினைத்தேன், நீங்கள் தான் அந்தக் கொலைகாரனை அனுப்பியிருப்பீர்களென்று! நீங்கள் நாசமாய்ப் போக!" என்று 'நாகரிகமான சாபம்' கொடுத்துடன் அவள் கனகலிங்கத்தின் உயிரின் மீதும் உள்ளத்தின் மேலும் வைத்த காதலின் கதை சுபம் பெற்று விடுகிறதா? இதயம் பெற்றிருந்தவனை இழந்த கோலம் மாறுவதற்

குள்ளாகவே, அவள் தசரத குமாரனைப் பின் தொடர வேண்டியவள் ஆகிறாளே? அகல்யாவிடம் நமக்குக் கனியும் பச்சாதாபம், பரிவு, பாசம் போன்ற சகல உணர்ச்சிகளும் இந்த இடத்தில்தான் நம்மை விட்டுப் பிரிகின்றன. பிரிந்து அகல்யாவின் கால் அடிகளில் தஞ்சம் புகுகின்றனவா? அன்று. கடலில் குதித்துத் தற்கொலை செய்து கொள்ளுகின்றன!

''வாழ்வுக்கு உதவி கேட்ட, இந்தக் காதல் பைத்தியம்" பெண்களின் பெயரால் வற்புறுத்தப்படும் கற்பின் பெயரால் சாக விரும்பாதவளென நீங்கள் வரம்பு வகுத்து, இறுதியில் தெய்வத்துக்குப் பதிலாக நீங்களே 'சூத்திர தாரி'யாக ஆக்ட் பண்ணி அவளைக் கொன்றிருக்கிறீர்கள். பாவம், அகல்யா!

'எல்லாவற்றையும் வேடிக்கையாகக் கருதுவதால்தான் என்னால் உயிர் வாழ முடிகிறது" என்கிறான் கனக லிங்கம். காதலினால் சாண் வயிற்றைத் திருப்திப்படுத்த முடியாதென்று இந்திரனால் பாடம் படித்துக் கொடுக்கப் பட்ட அகல்யாவின் கதையைக் கேட்ட பிறகே அவன் இவ்வாறு சொல்கிறாள். நெருங்கி வந்தவளிடமிருந்து விலகும் கனகலிங்கம், 'வேண்டாம்' பசி தீர்ந்து விட்டால் நானும் இந்திரனைப் போல் ஓட்டம் பிடித்தாலும் பிடித்து விடுவேன்" என்றும் அறிவிக்கிறான். அவள் ஒட்டி ஒட்டி வரும்போது, அவனோ எட்டி எட்டி போகிறான், சிறு சலசலப்பு. 'ஐயோ, பாவம்! உலகம் தெரியாத அபலை அவள் காதலை உண்மையென்று நம்பினாள்; அந்தக் காதலுக்காகத் தன்னை ஒருவனுக்கு அர்ப்பணித்தாள். அவன் அவளைக் கைவிட்டான். அதற்காக அவள் செத்துப் போக விரும்பவில்லை; வாழ விரும்புகிறாள். ஆண்களுக்கு மட்டும் அந்த உரிமையை அளிக்கும் சமூகம், பெண்களுக்கு அளிக்க மறுக்கிறது— இது அக்கிரமம்தானே?' என்ற கண நேர மௌனச் சிந்தனை அவனது தயாள சிந்தையின் கதவுகளைத்

திறந்து விடுகிறது. "அகல்யா, அகல்யா! நான் உன்னுடைய மனதைப் புண்படுத்தி விட்டேனா என்ன? சொல்லு, அகல்யா சொல்லு", என்று அவன் குழைகிறான். இந்நிலை சலனத்தின் விளைவா? அன்புப் பண்பின் பணியா?

தடம்புரண்டவள் அகல்யா. ஆனாலும், அவள் இதயத்தை அடியோடு இழந்து விடவில்லை. 'ஆம்; அன்று நீங்கள் தான் என்னைக் காதலித்துக் கொல்வதாகச் சொன்னீர்கள். ஆனால் இன்றோ, நான் உங்களைக் காதலித்துக் கொன்று விட்டேன்!" என்று அவள் தன்னுள் சொல்லிக் கொள்ளும்போது, அவள் என் இதயத்தைத் தொட்டுவிட்டாள்.

ஆனால்...?

'ஐயோ! ஆண்களுக்கு ஒரு நீதி. பெண்களுக்கு இன்னொரு நீதியா? இந்த அக்கிரமத்துக்கு இன்னும் என்னைப் போல எத்தனை பெண்கள் பலியாகவேண்டும்? உங்களுடைய இதயத்தில் ஈரம் இல்லையா? அந்த ஈரமற்ற இதயத்தை எங்களுடைய கண்ணீராவது நனைக்கவில்லையா? சீர்திருத்தம், சீர்திருத்தம் என்று வாய் ஓயாமல் அடித்துக் கொள்ளும் இளைஞர் உலகம் இந்த கொடுமையை இன்னும் எத்தனை நாட்களுக்குச் சகித்துக் கொண்டிருக்கப் போகிறது?...

உச்ச கட்டத்தில் 'பகுத்தறிவுப் பாணியில்' அவள் பேசும் 'செயற்கைத் தன்மை'யுடைய இந்த வசனம், அவள் 'நெஞ்சறிந்து ஏற்றுக்கொண்ட பழி'யைத் துடைக்க வல்லதா? ஊஹூம்!

'கெட்டவளுக்கு' அடைக்கலம் கொடுப்பதன் மூலமே ஒருவன் 'நல்லவன்' ஆகிறான். இது அண்ணலின் கருத்து. இந்நிலையிலே கனகலிங்கத்தை நீங்கள் ஏன்அதற்குள் சாகடித்தீர்கள்? நுண்ணிய கட்டிலம் அமைத்து எண்ணிப் பார்க்குங்கால், கனகலிங்கம் ஒரு மின்னலெனவே தோன்றி மறைகிறான். இறந்தும் உயிர்வாழும் பரத்திரப் படைப்

பாகவே கனகலிங்கத்தை நீங்கள் இவ்வாறு ஆக்கியிருக்கிறீர்கள். 'நல்லவர்கள் வாழ்வதில்லை— நானிலத்தின் தீர்ப்பு' என்ற வாசகத்தை மெய்யாக்க வேண்டியே நீங்கள் இவ்விருவருக்கும் விண்ணுலக யாத்திரைக்கு டிக்கெட் வாங்கிக் கொடுத்திருக்க வேண்டும்! அதனால் தான், முடிவுகூட முன்னைய இலக்கிய மரபை ஒட்டிப் பழைமைப் பாணியிலேயே அமைந்து 'சப்'பென்று போய் விட்டது! உங்கள் கொள்கைகளுக்கு உகந்த ரீதியில் பாத்திரங்களை உருவாக்கி, அவர்கள் வாய் வழியே சமுதாயச் சிக்கல்களை அலசிப் பார்க்க முயன்ற நீங்கள், முடிவில் அகல்யாவின் இறந்த காலத்துக்கும் எதிர் காலத்துக்கும் ஊடாக, சிக்கல்களைத் தீர்த்து வைக்கும் வகையில் உங்கள் பணியை ஏற்று, அகல்யாவின் 'எஞ்சியவாழ்வைக்' கனகலிங்கத்தின் அன்புக் கரங்களில் ஒப்படைத்திருக்கும் பட்சத்தில், இவ்விருவரது குணச்சித்திர அமைப்புக்களும் முழுமையடைந்திருக்கக் கூடும்! நீதி தேவனின் மயக்கம் தெளிந்து, நீதியுள்ள சமுதாயச் சித்திரமும் உருவாகியிருக்கும்! பெண்குலத்தை தூய்மைப் படுத்துவதற்காகவே நீங்கள் இதை எழுதியதாக வாதம் புரியும் உங்கள் பேச்சிலும் தர்க்க ரீதியான நியாயம் இருந்திருக்கும்! அன்புப் புரட்சியின் உண்மைக் குரலையும், வீரம் செறிந்த காதல் தத்துவத்தின் மனக்கனவையும் நான் உணர்ந்து அனுபவிக்க முடிந்திருக்கும்! சமுதாய நீதியையும் (Social justice), சமுதாயச் சீர்திருத்தத்தையும் (Social re form) வழங்கிய பெருமை உங்களை வந்தணைந்திருக்கும்! வாழ்க்கைக்கு உரித்தான பொருளுக்கு ஓர் உரைகல்லாக அகல்யாவும் கனகலிங்கமும் அமைந்திருப்பதாக நீங்கள் திருப்திப்படுவீர்களானால், அகல்யா— கனகலிங்கத்தின் கதை அரைகுறைக் கதைதான், ஆமாம், அரைகுறைக் கதையே தான். காரணம் இதுதான். அவர்களின் 'கனவு' நிறைவு பெறாமல் நிற்பதைப் போலவே, உங்களுடைய அருமையான கதையும் நிறைவு பெறாமல் நிற்கிறது.

கடைசியில் சில வரிகள்.

**பா**லும் பாவையும் கதையில் உங்களுடைய 'கிண்டல் பாவமும், நம்பிக்கை வறட்சியும் தோய்ந்த எழுத்து நடையை நான் மனம் பிணைத்து அனுபவித்தேன். சமுதாயத்தின் சித்திரம், பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் கடவுளின் பெயரால் செய்யப் பெறும் மோசடிகள், இலக்கியக் கலையுலகின் நடைமுறைப் போக்கு— இப்படிப்பட்ட சூழல்களிலே உங்கள் 'பேனா' சுழலும்போது, உங்கள் 'தனித்தன்மை'யைப் புரிந்து கொள்கிறேன். ஆனால் உங்களுக்கே உரித்தான குறிக் கோள் தன்மை'யை— (Ideal self) இந்த நெடுங்கதையில் இனம் காணவே இயலாமற் போய் விட்டது! இன்னும் ஒரு பிழை. அகல்யாவிலிருந்து சமையல்காரன் வரை எல்லோருக்குமே நீங்கள் 'இரவல்குரல்' கொடுத்திருக் கிறீர்கள்.

உங்கள் நோக்கு புதிது. போக்கு, பழசு! உங்கள் கரு அற்புதம்; உரு, குறைப் பிரசவம்! ஆத்ம விசாரம் இருக்கும் அளவுக்கு ஆத்ம விசாரணை இல்லையே—! பிரச்சனையும் புதிதல்ல; தீர்வும் தீர்வு முறையும் கூட புதிதல்லதான்!

'வையம் பேதமையற்றுத் திகழ வேண்டுமென்று எதிர் பார்த்து, பெண்களின் அறிவை வளர்க்க இக்கதையை ஒரு கருவியாகப் பயன்படுத்த நினைத்து நீங்கள் இவ்வளவு பக்கங்களை எழுதியிருக்கிறீர்களென்றே வைத்துக் கொள்வோம். நம் தமிழ்ச் சமுதாயம் இப்படித்தான் அமைந்திருக்கிறதென்பதைநீங்கள் சொல்லியிருக்கிறீர்கள். ஆனால், நம் சமூகம் இப்படி இப்படி அமைந்தால்தான், இத்தகைய தவறுகளிலிருந்து அகல்யாவைப் போன்ற அபலைகள்— தமிழ் அபலைகள் நல்ல விடிவு கண்டு வாழ வழி பெறுவார்கள் என்ற ஓர் ஊகத்துக்குரிய தார்மீக அடிப்படையாவது நீங்கள் வழி காட்டியிருக்க வேண்டாமா?

'விந்தன்' என்ற பெயரைக் குறிப்பிடும்போது, 'ஓ' பாலும் பாவையும் விந்தனா?' என்று இன்றும் நண்பர்கள் பலர் கேட்பதை நான் கேட்டிருக்கிறேன். அதனால்தான், நான்காணும் 'பாலும் பாவையும் விந்தன்' அவர்களை அந்த நண்பர்களுக்கு இக்கடிதத்தின் வழியாக அறிமுகம் செய்ய வேண்டியவன் ஆனேன்!

# 3: நளினி !

**க. நா. சு:**

**பு**துமைப் பெண் அல்லள் நளினி. திருடனைக் கணவனாகக் கொள்ள முடியாமல் ஓடி விட்ட பெண்! அவள் பாவாடை கட்டிய சிறுமியாக இருக்கும்போது, சீதாராமன் என்னும் கதாநாயகன் பருவதத்தம்மாள் என்கிற தன் மூத்த சகோதரி வீட்டுக்கு வண்டியில் வந்து இறங்கு கிறான். பாவாடை கட்டிய வளர்ந்த பெண் நளினி, எதிர் வீட்டில் நிற்கிறாள்.

நளினி தாயை இழந்தவள்; ஒரு வகையாக வளர்ந்தவள், முரட்டுப் பிடிவாதத்துடன்! கையில் சின்னம்மாவின் குழந்தையுடன் நிற் கிறாள். "அதோ பாருடா பட்டணத்து மாமா!" என்கிறாள் குழந்தையிடம். "தேவலையே! வாயாடிப் பெண்ணாக இருக்கும் போலிருக்கே! வளர்ந்த பெண்ணாகவும் இருக்கிறதே!" என்று சொல்லிக் கொண்டே போகிறான் சீதாராமன். அந்தப் பட்டணத்து மாமாவையே மணந்து கொள்கிற நிலை நளினிக்கு வந்து விடுகிறது. பெண்ணின் தகப்பனார் நல்ல உழைப்பாளி. வேலை செய்து ஓய்கிற அனுபவம் அவருக்கு.

அன்றே சீதாராமனைப் போலீஸ் தேடி வரு கிறது விஜயபுரம் அக்கிரகாரத்துக்கு. தவறே

செய்யாத நல்லவன் போல் போலீசாருடன் செல்கிறான் சீதாராமன். நளினியை விரும்பிய சீதாராமனும் சீதாராமனை மனத்தில் எண்ணிக் கலந்த நளினியும் சீதாராமனுக்காக வருந்திய அவன் அக்காளும் தபால் குமாஸ்தாவான நளினியின் தந்தை விஸ்வநாதய்யரும் குழம்பி நிற்கிறார்கள்.

பட்டினத்துப் பாங்கிலே இருபதினாயிரத்தைக் கொள்ளையடித்துச் சட்டத்தின் பிடியில் குருசாமி என்கிற எத்தனைப் பழிகாட்டி, சீதாராமன் நல்லவனாகித் தப்புகிறான். ஆனால் இருபதினாயிரத்தில் பங்குக்காகத் தன்னருகிலேயே காத்திருந்த எத்தன் குருசாமியைச் சீதாராமனால் உணர முடியவில்லையே !

விஜயபுரம் வருகிறான். தன் அக்காள் வீடு பூட்டியிருக்கிறது. எதிரே நளினி நிற்கக் கண்டு திகைக்கிறான். பின்பு நளினியிடம் பேசுகிறான். நளினியின் வீட்டில் அவனுக்கு இடம் கிடைக்கிறது. ஆனால் குருசாமி திண்ணைக்கு வந்து விட்டதை அவன் அறிந்தபோது, நளினியிடம் கூடச் சொல்லாமல் — பெட்டி கூட எடுத்துக் கொள்ளாமல் ஓடி விடுகிறான் ! நளினி நிலைக்கிறாள் ! மூன்று ஆண்டுகளுக்குப் பின் மீண்டும் சீதாராமன் வருகிறான். நளினியை மணக்க விரும்புகிறான். நளினியின் தந்தை விஸ்வநாதய்யர் மகளிடம் உடன்பாடு கேட்கிறார். நளினியோ, “போ, அப்பா...!” என்கிறாள் நாணத்தின் மென்மையுடன். ‘திருமணத்துக்கு முன் சீதாராமன் அயோக்கியனா என்று தெரிந்து கொள்ளாவிடில் ஆயுசு பூராவும்... ?’ என்று கலங்கினாள் நளினி. ஆனால், அதை அறிய வாய்ப்பே இல்லை ! திருமணம் நடக்கிறது. மருண்ட

பார்வையோடு சீதாராமனைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்த நளினியைக் கண்ட மணமகனுக்கு அமைதியே இல்லை.

மணமான உடனே நளினியை இழுத்துக் கொண்டு தஞ்சாவூருக்கு வருகிறான் சீதாராமன். இரண்டாம் வகுப்புப் பெட்டியில் பயணம், அப்போதே! அவளை அவன் ஆசையோடு நெருங்கிய சமயம், அவள் பழைய குருசாமியை நினைவுபடுத்தி 'நீ தான் திருடனா?' என்று கேட்காமல் கேட்கிறாள். முதலிலே கசக்கிறது சீதாராமனுக்கு. பின், வழித் துணை கொண்டு தஞ்சையை அடைகின்றனர். அடைந்திட்ட புது மணக் கோலம் பூண்டு!

தஞ்சை வந்த நேரம். அந்தி மாலை. "அந்தப் பழைய கதையையெல்லாம் நீயும் நானும் மறந்து விடுவதே நல்லது" என்கிறான் கதாநாயகன்!

"அதெப்படி சாத்தியம்?" என்கிறாள் நளினி. கடைத் தெருவுக்குப் போய் மீண்டதும் வெளிக் கதவு தாளிடாமலே சாத்தியிருந்தது. "நளினி!" என்று அழைக்கிறான் சீதாராமன்.

"எவ்வளவு சாமர்த்தியசாலிதான் ஆனாலும், ஓர் அயோக்கியனுடன் வாழ நான் விரும்பவில்லை. திடீரென்று ஏற்பட்ட முடிவு அல்ல இது. என்னைத் தேட வேண்டாம். நான் விஜயபுரம் போகவில்லை!" என்று கடிதம் எழுதி இருந்தாள் நளினி.

**அழியாக் கனவு**

**வி**ஜயபுரம் என்று ஓர் ஊர்; அங்கே ஓர் அக்கிரகாரம்; அங்கே பெண் ஒருத்தி; பெண் அல்ல. கன்னி. அவள் பெயர் நளினி. நளினமான பெயர்தான். அவளுக்குத்

தன் வீட்டுத் திண்ணையில் அமர்ந்து 'அழியாக் கனவு' களைக் கண்டு கொண்டிருப்பது தான் அன்றாட அலுவல். அந்த அலுவலுக்கு உயிரூட்டுகிறது சீதாராமன் சீதா ராமன் என்ற இளைஞனின் வருகை. நளினியை இரண்டு முறை பார்த்து, அதன் விளைவாக அவனுக்கு விளைந்த துன்பங்கள் அதிகம். அதனால்தானோ, என்னவோ, அவளை அவன் தன் உரிமையாக்கிக் கொள்கிறான். ஆனால், அவளுக்கோ அவனது வாழ்வில் புதைந்து கிடந்த ரகசியத்தை அறிந்து கொள்ள வேண்டுமென்ற துடிப்பு மிஞ்சுகிறது. உள்ளத்தின் தற்காப்பு உணர்ச்சி (Self preservative instinct) இது. அவளால் அன்பு சொட்ட அழைக்கப்பட்ட 'பட்டணத்து மாமா' வான சீதாராமன், "அந்தப் பழைய கதையை எல்லாம் நீயும் நானும் மறந்து விடுவதே நல்லது!" என்று முத்தாய்ப்பு வைக்கின்றான். இறுதியில் அவளது கடிதம் அவளுடைய அழியாக் கனவு களுக்கு முத்தாய்ப்பு அமைத்து விடுகிறது. எவ்வளவு சாமர்த்திய சாலிதான் ஆனாலும், ஓர் அயோக்கிய னுடன் வாழ விரும்பவில்லை. திடீரென்று ஏற்பட்ட முடிவல்ல இது.

'என்னைத் தேட வேண்டாம்', என்று எழுதி, பின் குறிப்பு ஒன்றையும் இணைத்திருந்தாள்! அவள் தன் பிறந்தகத்துக்குச் செல்லவில்லையாம்!

**ஒரு சிறு விஷயம்!**

'நளினி' என்னும் மகுடம் ஏந்திக் கொண்டிருக்கும் இக் கதையை 'நாவல்' எனப் பெருமையுடன் தேர்ந்தெடுக் கின்றார், நளினியைப் படைத்தவர். இந்தப் படைப் பாளரை முதலில் உங்களுக்கு அறிமுகப்படுத்த வேண்டும். அவர் நம் மதிப்புக்குரியவர். பெயர் க. நா, சுப்ரமணியம். பெரும்பாலோர் சொல்கிறார்கள்; "க. நா.சு. பெரிய இலக்கிய விமரிசகர்!" சிலருக்கு அவர் என்றால், சிம்ம சொப்பனம், அப்படிப்பட்ட 'பயங்கர மனிதர்' தாம் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு (1947) முன்னர் ஆக்கியம்

நளினியைப் பற்றி இப்போது முன்னுரை எழுதும் போது 'பேஷ்! தேவலையே ! ஒரு சிறு விஷயத்தை வெகு அழகாக எழுதிவிட்டோமே ?' என்று குதிக்கிறார். குதிக்கிறார். ''நல்ல பேஷ் !' போங்கள், மிஸ்டர் கே. என். எஸ் !"

ஒரு சிறு விஷயம் !— அந்தச் சிறு விஷயமும் இல்லை யென்றால், இதைப்படித்துத் தீர்க்கவேண்டுமென்று எனக்குத் தலைவிதியா, என்ன ? வயதால் மட்டும் வளர்ச்சி யடையாமல் உள்ளத்தாலும் வளர்கின்ற பக்குவத்தை—மனத்திட்டத்தை—'நளினி' மூலம் பரிசோதனை செய்து பார்த்தார் க.நா.சு. விளைபலன் : தோல்வி! படுதோல்வி!

**சூள் !**

**வா**சகர்களின் மனோதர்மத்துக்குக் கதையின் முடிவைக் காணிக்கை வைத்துவிட்டு எழுத்தாளன் விலகி நிற்பது புதிய உத்தி தான் ; கோடிட்டு, 'கோடி' காட்டும் உட் குறிப்பு (**Subtle Suggestion**) இது இத்தகைய முடிவுக்கு ஓர் தொடக்கம், வளர்ச்சி, இடைநிலை, கதைபிண்டத்தில் ஓர் அழுத்தம், உருவாக்கும் தலைமை கதாபாத்திரங்க ளிலே ஒரு தனித்தன்மை போன்ற பண்புகள் பொலிவு காட்டவேண்டும். 'நளினி'யில் நளினியைத் தவிர, மற்ற எல்லா பாத்திரங்களும் வெறும் அண்டா, குண்டான், குடம் வகையறாத்தான் ! பத்து வயசுப் பெதும்பைப் பூருவத்தில் நளினி அழகு காட்டுகிறாள். திடீரென்று பதினைந்து ஆகிறது; வயசில் சின்னம்மாவுக்கும் சாஸ்திரி களுக்குமே தகராறு. எப்படியோ, அவளுக்குத் திருமண ஏற்பாடுகள் நடக்கின்றன. 'போலி மனிதனாக' ஆக்கி விட்ட சீதாராமனிடம் எப்படித்தான் நளினியை ஒப்படைக்கத் துணிந்தாரோ நம் கா. நா. சு... ?

சீதாராமன் நல்லவனோ, கெட்டவனோ, நாம் அறி யோம் பராபரமே ! அது க. நா. சு. அவர்களின் பேனா வுக்குத்தான் வெளிச்சம். ஆனால், நளினி தன் வாயால், 'அவர் வண்டியிலேருந்து வந்து இறங்கச்சே நான்

பார்த்தேன். நன்னாத்தான் இருந்தார்!' என்று பரிந்து பேசுவதைப் பார்க்கையில், அவன் ஆணழகனாகத்தான் இருக்க வேண்டும். அவன்— அவர் சீதாராமன். ஆனால், இந்த சீதாராமன் செய்த 'படுத்தடிக் காரியம்' என்ன முடிவு கண்டது? பட்டணத்து வங்கி ஒன்றிலே களவு போன இருபதினாயிரம் ரூபாயின் 'தலைவிதி' என்ன? மேற்படி பணத்தைக் கையாடினவர் குருஸ்வாமி என்ற 'உண்மை' நம்மை எட்டிப் பிடிக்கத் தவறவில்லை. ஆனால், சீதாராமனின் நேர்மையும் நாணயமும் கண்ட தீர்ப்பு என்ன ஆயிற்று? பிராயச்சித்தமே இல்லாத ஒரு குற்றத்தைச் செய்து விட்டவன் போல அவன் தலை இறங்கியதற்குக் காரணம் என்ன? 'ஒரு கத்தை நோட்டுக்கள்' அவனுக்குக் கிடைத்தனவே, எப்படி? மறுமொழிகளை நாம்தாம் ஊகம் செய்து கொள்ள வேண்டுமாம்!...

நளினியின் 'குழந்தையுள்ள'த்தில் சீதாராமனைப் பற்றிய வரையில் இரண்டே இரண்டு காட்சிகள் தாம் நின்றன. ஒன்று, சீதாராமன் விஜயபுரம் வந்தபோது, அவனைப் போலீசார் கைது செய்து அழைத்துப்போனது; இரண்டாவது, குருஸ்வாமியும் அவனும் தன் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து விவாதம் செய்தது.

சரி; இப்படிப்பட்ட இரண்டு காட்சிகளும் அவளுடைய மனத்தைச் சலனப்படுத்தியிருந்தால், அவனைப் பற்றி அவள் ஒரு புதுப்பாடத்தைப் படித்துக் கொண்டிருக்க மாட்டாளா? காலங்கடந்து அவள் படித்துக் கொண்டதால் தானே, அவளது 'இறுதிக் கடிதம்' உருவானது? 'குழந்தை உள்ளம்' என்று 'சப்பைகட்டுக்கட்டி நளினியை நட்டாற்றில் அகப்படச் செய்திருக்கும் இவர் 'சீதாராமனைப்பற்றிய வரையில்' நளினிக்கு ஒருமனோதிடமும் சிந்திப்பதற்கான ஒரு முதிர்ச்சியும் ஏற்பட்டிருந்தது வாஸ்தவமே!' என்று வேறு 'வக்கரலத்து' வாங்கிக் கொண்டு தத்தளிக்கிறார். பாவம்! தன் வாழ்க்கைப் பிரச்சனையின் புயல் பகுதியைப் போக்கிக்கொள்ள

நளினிக்கு வாய்ப்பே கிடைக்க வில்லையாம் ! விந்தையாக இல்லையா !

இவர் சொல்ல நினைந்த இதே கதைக் கருவை அடிநாதமாக்கி, அற்புதம் பொருந்திய, உண்மையான, சிறப்புமிக்க நவீனத்தை என்னால் படைக்க முடியும் ! 'நளினி'யின் தோல்வியினை அங்கீகரித்து, இந்தப் 'போட்டியை' திரு. க.நா.சு. ஏற்பாரேயானால், தமிழ் இலக்கியம் பிழைத்துவிடும் என்று நாம் எண்ண வாய்ப்பு இருக்கிறது.

**காந்திஜியும் க.நா.சு.வும்**

தமிழ்ப் புதினத்தின் வளர்ச்சியில் 'தேக்கம்' கண்டிருப்பதாக ஏக்கம் கொண்டு ஏசி, அதற்கென ஒரு பத்து ஆண்டுகளையும், காணிக்கை வைத்துப் பேசியவர் க.நா.சு. என்பதை நீங்கள் மறந்திருக்க மாட்டீர்கள். ஆனால், அவர் மட்டும் மறந்திருக்கத்தான் வேண்டும். அந்த 'மறதி'க்கு வாழ்த்துக் கூற வேண்டும். காரணம் இல்லாமல் இல்லை. நவீனத்தின் 'இருட்டுக் காலத்'தைப் பற்றிப் பேசவந்த இவர், தாம் படைத்த நளினியையும் மனத்தில் ஏந்தி வைத்துத்தான் அவ்வாறு பொதுமக்கள் முன்னிலையில், தம் 'முடிவுக் கருத்துரை'களை வைத்திருக்க வேண்டும். சாதாரணமாக நடைமுறையில் சொல்வது உண்டு— தம் பலம் தனக்குத் தெரியாதாம். ஆனால் இவருக்கோ, இவர் பலம் அப்பட்டமாகத் தெரியும் என்பது இவருடைய தனித்த கருத்து. அதனால் தான் இலக்கியப்பட்டம் வீசி விளையாடி வருகிறார். பட்டம் அடிக்கொரு முறை அறுந்து விழுகிறது. அல்ல, அறுத்துக் கொள்கிறது. ஏன், தெரியுமா ? அவருடைய 'கை'யில் பலமில்லை. அப்படிப்பட்ட கையில் பேனாவைப் பிடிக்கலாமோ ? தம் தோல்வியை தமிழ்ப் புதின உலகின் தோல்வியாக ஆக்கி

விடுகிறார் ; ஆனால் ஓர் இரகசியம். க. நா. சு. ஒரு நாளும் காந்தியாக முடியாது !

பாத்திர அமைப்பைப் பற்றிப் பிறருடைய நவீனங்களில் குறைகாணும் திரு. க. நா. சு. தம் பெயரை அறவே மறந்து விடுகிறார். தம் சொந்தக் கருத்துகளுக்குப் பிறர் நூல்களை மேடையாக்கி 'அதிகப் பிரசங்கம்' செய்கிறவர் இவர். தமிழ் நூல்களை முறையாகக் கற்றுத் தேர்ந்து தெளிந்து, இப்போது தமிழ் வளர்க்கும் தகைமையாளர்களாக நம்மிடையே திகழ்ந்து வருபவர்கள் சிலரை வம்புக்கு இழுத்திருக்கிறார் : தமிழ் ஞானம் எழுத்தாளனுக்கு அறிவைக் கொடுக்காது என்பது இவர் வாதம். இது 'முடக்கு வாதம் !' 'நளினி'யைப் படித்து முடிக்க ஒவ்வொரு பக்கத்துக்கும் ஒவ்வோர் அரையணா எனக்குச் செலவு ஆயிற்று. (1958)

திரு க. நா. சு, வின் தமிழ் நடையைப் படிக்கிறீர்களா ?

'...லீவு கிடைத்த சந்தர்ப்பத்திலே, தன் சகோதரியை பார்த்து எவ்வளவோ நாள் ஆகிறதே, பார்த்துவிட்டு, அவளுடன் இரண்டொரு நாள் தங்கிவிட்டுப் போகலாம் என்று எண்ணி வந்திருந்தான் சீதாராமன்,'

உன்னிப்பாக படியுங்கள். 'விரசம்' தட்டவில்லையா ?

இன்னும் பாருங்கள் :

'...ஆனால் அதெல்லாம் ஏதோ காவியம் படிப்பது போல அவர்கள் உள்ளத்தைத் தொடாமல் போய் விட்டது ;'

அமரர் புதுமைப்பித்தனின் ஒப்புவமை எந்த மூலை, போங்கள் !

'எண்ணை மில் ஒன்று !'

இலக்கியத்தில் அஷ்டாவதனம் செய்து, தெய்வப் புலவரின் தலையிலேயே கையை வைத்த அன்பரின் 'எண்ணையில்' அழகாக இல்லையா? அச்சுப் பேயைக் கை காட்டினால், அது தவறு!

'கல்யாணத்துக்கான ஏற்பாடுகளெல்லாம் நடந்தது!'

இலக்கணம் வதைப்படவில்லையா?

'அபிவாதையே சொல்லாத குறையாக சாஸ்திரிகள் சொன்னார்.'

என்ன அர்த்தமாம்?

'கிரோஸின் சிம்னியுடன்' சமையல் அறை வாசற்படியண்டை நின்றாள்!'

நல்ல தமிழிலே எழுதக் கூடாதோ?

இம்மாதிரி இன்னும் எவ்வளவோ வரிகள் புரியானவாகவும், ஆழ்ந்து படிக்கும்போது, சிரிப்புத் தருவனவாகவும் இருக்கின்றன. 'தமிழறிவு' வளம் பெற்றிருந்தால், இப்படிப் பட்ட பிழைகள் ஏற்பட்டிருக்குமா?

மொழி நடையின் தூய்மைக்கென அமைந்திருக்கும் வேலிகளான இலக்கணம், மரபு ஆகியவற்றின் தேவைகளின் இன்றியமையாத் தன்மை குறித்து திரு. நா. பார்த்தசாரதி ஒரு முறை எழுதியிருந்தார்: 'ஓட்டைக் கிண்ணத்தில் எண்ணெய் தங்குமா? ஒழுங்கும், மரபும், இலக்கணமும் இல்லாதமொழி நடையில் கருத்துக்கள் தங்குமா! தங்கத்தான் முடியுமா?'

உண்மைதானே?

**பொய்மை கொண்ட கலி !**

'என் அகக் கண்ணில் நளினி புதுமைப் பெண் அல்ல ; என்றும் இருந்து, வந்திருக்கின்ற இந்தியப் பெண்மணி தான்' என்று சொல்கிறார் நாவலாசிரியர். புதுமைப் பெண் என்றாலே, அவளும் இந்தியப் பெண்மணிதான் ; ஆனால், இவரோ புதுமைப் பெண்ணை ஏனோ துண்டு படுத்திக் காட்டுகிறார். 'பொய்மை கொண்ட கலிக்கு' ஒரு விடிபொழுதெனச், சொற்களும் செய்கைகளும் ஏத்தி நிற்பவள் புதுமைப் பெண்தான் !

**இப்ஸன் வழி**

தேம்ஸ், மிஸிஸிப்பி, நைல் போன்ற மேலைநாட்டு ஆறுகள் 'பாவம்' செய்தவை ; அதனால்தான், திரு க.நா. சு. அங்கே பிறப்பெடுக்கவில்லை. தமிழ்நாட்டில் அவதரித்தார். விட்ட குறை, தொட்ட குறையின் விளைவாக 'மேலை நாட்டு இலக்கியத்தில்'கரைகாணத் துடிக்கிறார்' மதிப்புப் பெற வேண்டும். ஆனால், இப்ஸன் (Henryk Ibsen) தம் நாடகம் ஒன்றில் கதவடைப்பைச் சித்திரிக்கின்றார். அதில் உயிர் இருக்கிறது. இங்கே இவர் காட்டும் 'அடைந்த கதவு'க்குப் பின்னேதான் கதையின் முடிவே ஒளிந்து கொண்டிருக்கிறதாம். சொல்லுகிறார் ! இவர் எழுதிய'வரவேற்பு' என்னும் சிறுகதையிலும் கதவடைப்பு நிகழ்ச்சி வருகிறது. அது அற்புதம் !

இன்னொன்று : கதவை ஓங்கிச் சாத்திவிடும் உரிமை பெண்ணுக்குக் கிடைத்திருப்பதைப் பெருமையாகப் பேசுகின்ற க. நா. சு. அவர்கள், அந்தப் பெருமையை உரிய வழியில், உரிய முறைப்படி, உரிமையாக்கத் தவறி விட்டார் ; அவருக்கு இப்பணி பிடிபடவில்லை !

தாக்கரேயை (Thackeray) கதை உறுப்பினர்கள் ஆண்டனராம். ஆனால், நம் க.நா.சு.வோ நளினியை ஆள்கிறார். ஸ்காட் (Scott) கொண்டிருந்த கொள்கைக்கு எதிரானவர் இவர். கதையில் வருகின்ற ஏழெட்டு நிகழ்ச்சிகள் காரண காரியமின்றி நுழைக்கப் பட்டிருக்கின்றன.

'இலக்கிய விமரிசகர் என்றால், தாமே இலக்கியம் படைத்துத் தோல்வியுற்றவர் அல்லர்!'— மேலை நாட்டுச் சிந்தனை இது. இக்குறிப்பு நினைவுக்கு வரும் நேரத்தில், எனக்கு ஓர் எண்ணம் எழுவது உண்டு, க.நா.சு. இப்போது இலக்கிய விமரிசகராக 'அவதாரம்' எடுத்திருப்பதும் நல்லதுதான். ஏனென்றால், இவருடைய இலக்கிய வெற்றி தோல்வியைப் பற்றிய முடிவைக்கூற வாய்ப்பு உண்டாகும் வேளையில், என் போன்றவர்களை நளினி காப்பாற்றுவாள்!

உதிரிக் கதைக் கூடாகத் (Loose Plot) தோற்றம் தருகின்ற 'நளினி' திரு கா. நா. சு. வுக்கு மட்டுமல்ல, தமிழ்ப் புதின இலக்கியத்துக்கே ஒரு 'கெட்ட சோதனை'! கடைசியில் காணப்பெறும் நளினியின் நாலுவரிக் கடிதத்தைத் தவிர, சுவைப்பதற்கோ, சிந்திப்பதற்கோ 'தொண்ணூற்றிரண்டு பக்க நாவலில்' வேறு எதுவுமே இல்லை.

'தம் சொந்தக் கஜக்கோலை'க் கொண்டு 'இலக்கிய நியதி'யைப் பற்றி உரையாடி 'முதல் ஐந்து தமிழ் நாவல்கள்' என்ற ஒரு விமரிசனக் கட்டுரைத் தொடரை க.நா. சு எழுதினார். தி.ம. பொன்னுச்சாமி பிள்ளையின் 'நிகழ்ச்சிக் கோவை'; பி. ஆர். ராஜமய்யரின் 'குணச் சித்திர விளக்கம்'; வேதநாயகம் பிள்ளையின் 'வேகம் கெடாத நடை'; அ. மாதவய்யாவின் 'மகிழ்வூட்டும் கதை'; பண்டித நடேச சாஸ்திரியின் 'எழுத்துக் கவர்ச்சி நிதானம்' ஆகிய இலக்கியப் பண்புகளைப் போற்றும் இவர், தம் எழுத்துக்களில் மேற்கண்டவற்றை அரைகுறையாகப் பற்றக்கூட முடியவில்லை!

**ஒரு நாள் க.நா.சு !**

'நளினி' என் அனுதாபத்திற்கு இலக்காகும் ஓர் அபலைப் பெண். அவளுடைய பேதை மனத்தின் நுணுக்கமான மனத்தவத்தை— அந்த உயிர்த் தவத்துக்கு அடித்தளமாய் அமைந்திருந்த அவளுடைய களங்கமில்லாப் பாவனைகளை நுழைபுல நுண்மாண் அறிவுடன் மரபறிந்து, மாயை புரிந்து, எடுத்துச் சொல்வதற்கு 'தகுந்த உள்ளம்' அவளுக்குக் கிடைக்கவில்லை !

பட்டம் :

'ஒரு நாள்' என்னும் அற்புதமான நவீனத்தை எழுதிய 'அந்த ஒரு நாள் க.நா.சு.' அவர்களை இனி தமிழ் எழுத்துலகம் தரிசிக்க வாய்ப்பில்லையோ, என்னவோ ?

பெருங்காயம் வைத்த வெறும் பாண்டம்— க.நா. சுப்பிரமணியம்... ! உள்ளே பண்டம் இல்லை ! 'கமகம" என்ற மணம் ஏமாற்றத்தையே தருகிறது !

# 4. காயத்ரி

**சுஜாதா :**

**சமூகப் புல்லுருவிகள் 4 :**

எழுத்துச் சமூகத்தின் புல்லுருவிகளாக, கொடியில் கட்டிய கொடிகளைப் போலே ஆலாய்ப் பறந்து கொண் டிருக்கின்ற சுஜாதா, புஷ்பா தங்க(த்)துரை. சிவசங்கரி, இந்துமதி ஆகிய அந்த நாலு பேர்களுக்கும் இடை நடுவிலே, இட ஒதுக்கீட்டுச் சிக்கல்கள் வெகு நாட்களுக்கு முன்னதாகவே சூடுபிடித்து விட்டன; ஆனாலும், நாளது தேதிவரையிலுங் கூட, அச்சிக்கல்கள் சிக்கறுக்கப்பட்ட தாகச் சேதி கிடையாது. ஏன் தெரியுமோ? அந்த நாலு பேர்வழிகள் பற்றிய குறுக்கு வழிப் பரபரப்பு இலக்கியச் சந்தையில் ஒடுங்கவும் அடங்கவும் ஆரம்பித்து வெகு நாட்கள் ஆகிவிட்டன!

ஆனாலும் :

நாட்டையும் வீட்டையும் சீரழித்துப் பாழ்படுத்து வதில் 'நான் முந்தி, நீ முந்தி'யென்று ஒருவருக்கு ஒருவ ராகவும், ஒருத்திக்கு ஒருத்தியாகவும் போட்டி போட்டுக் கொண்டு, கிராப்பையும் கூந்தலையும் மாறி மாறி, அல்லது, மாற்றி மாற்றிக் கழிந்த சில ஆண்டுகளாகவே

பிய்த்துக் கொண்டு வரும் இந்தச் சமுதாய எதிர்ச் சக்திகளின் நான்கு முனை அல்ல, நான்கு மூலைப் போராட்டத்திற்கு இடை நடுவிலே, எப்படியோ, ஏனோ, திருவாட்டி, ஊஹூம், திருவாளர் சுஜாதா இவர்கட்கு நடுவிலே முதலாவது இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டுவிட்டார் !

உண்மை இது.

மறுத்தால், பாவம்!—144...!

அதாவது, நமது சமூகத்தின் இளந் தலைமுறையினரை முறைதவறியும் முறையில்லாமலும் கெடுத்துக் கொண்டு வருவதில் சுஜாதாவுக்கு முதல் இடத்தைத் தர வேண்டுமென்பது என்னுடைய தீர்ப்பு !

விந்தைதான் !

என் தீர்ப்பா ?

இல்லை !

சுஜாதாவின் கதை என்ன ?

அதாகப் பட்டது, சுஜாதா படைத்த 'காயத்ரி'யின் கதை விந்தையானது என்கிறேன்: சுஜாதா என்கிற பெண்களின் இயல்பான பெயருக்கேற்ப காயத்திரியை தயாரித்தவர் இயல்பிலேயே பெண்ணாக இருந்திருந்தால், காயத்ரி இப்படிச் சந்தி சிரித்திருக்க மாட்டாள்!—காயத்ரியைத் தயார் செய்த புள்ளி இயல்பிலேயே ஓர் ஆணாக இருந்த காரணம் கொண்டுதான், காயத்ரி இப்படி அவலமும் அலங்கோலமும் அடைந்திட நேர்ந்திருக்கிறது.

பெண்ணுக்குப் பேய் கூட இரங்கும் !

நாலு பேர் சொல்வார்கள்.

இந்த நாலு பேர் சொல்லமாட்டார்கள்.

காயத்ரிக்கு ரங்கராஜன்தான் இரங்கவில்லை! சுஜாதாவாவது இரங்கியிருக்கலாம். அப்படி இரங்கியிருந்தால், பாவம், 'அவர்' வயிறு காய்ந்து நடுவீதிக்கு அல்லவா இறங்கிவிட்டிருப்பார்! சுஜாதாவா கொக்கா ?

**காயத்ரி...ப்பூ!**

சுஜாதா எழுதினதாகச் சொல்லப்படும் 'காயத்ரி' என்னும் கதை அல்லது தொடர் கதை, அல்லது தொடராத கதை பிற்பாடு தமிழில் பேசும் படமாக வெளிவந்ததாகவும் சொல்லப்பட்டது; பேசப்பட்டது! ஓர் ஆச்சரியம் என்ன தெரியுமா?—'அது' வந்தது போலவே போய் விட்டது!—ஓர் ஆனந்தமாக சேதியாகவே இந்நடப்பு அமைந்தது.

பங்களூரிலிருந்து 6—11—1977ம் நாளில் 'காயத்ரி'க்கு வழங்கிய முன்னுரையில் காயத்ரியின் ஆசான் கூறுவதாவது... "இக்கதையிலே ஏதோ ஒரு நீதி இருக்கிறது என நினைக்கிறேன் !"

சுஜாதா குறிப்பிட்டிருந்த மாதிரி, 'காயத்ரி'யில் ஏதோ ஒரு நீதி, அல்லது, எவ்வகையிலேனும் அமைந்திட்ட நீதி என்ற ஏதோ ஒன்று மருந்துக்காகிலும் ஒளிந்து மறைந்திருந்தால் கூட, நமது பெருமதிப்புக்குகந்த நமது தமிழ்ப் பெருங்குடி மக்கள் வந்ததும் தெரியாமல், போனதும் தெரியாமல் இப்படி அவசரம் அவசரமாக இந்தக் காயத்ரியை விரட்டி அடித்திருப்பார்களா, என்ன ?

ஆக :

இந்த உண்மை நிலை ஒன்றே போதும்— 'காயத்ரி' யிலே ஒன்றுமே கிடையாது என்று நிரூபிப்பதற்கு !

ஒரு சுபயோக சுபதினத்திலேதான், குமாரி காயத்திரி திருமதி காயத்ரி ராஜரத்னம் ஆகியிருக்க வேண்டுமென்று நம்ப முடியவில்லை. காரணம் இதுதான் : நாள் பார்த்து, நட்சத்திரம் கணித்து அவள் அவ்வாறு ஆவதற்கு, அவள் தன்னை ஆக்கிக் கொள்வதற்கு மனம் இணங்கித் தன் னுடைய தலையை அல்லது, கழுத்தை மூன்று முடிச்சுக் களைக் கட்டிக் கொள்வதற்கு 'ரத்னா' என்னும் படியான அந்த ராஜரத்னத்திடம் நீட்டியிருக்கும் பட்சத்தில். இப்படிப்பட்ட பட்சபாதச் செயல்களெல்லாம் அவள் வாழ்நாளில் நிகழ்ந்திருக்குமா ? என்ன?—சரசு (ஸூ) கொடுத்த ஒரு புடவையைக் கட்டிக் கொள்ளக் கூட நாள் பார்த்ததோடு நிற்காமல், மேஷ ரிஷபமும் பார்க்க வில்லையா காயத்ரி ?

காயத்ரி!—பாவம்!...

முந்தைப் பிறவியின் பாவ புண்ணியங்களின் ஐந்தொகை கணக்கிற்குப் பதில் சொல்ல வேண்டித்தான் இந்தப் பிறப்பில் அவரவர்கள் மனிதப் பிறவி எடுக்க நேருகிறது.

காயத்ரியைப் பொறுத்த அளவில், அளவற்ற பாவங் களைச் செய்தவள் அவள் என்பதை இடித்துக் காட்டு வதற்கு அவளுக்குக் கணவனாக வாய்த்திட்ட ரத்னாவே சாட்சி சொல்லுவான் அல்லவா ?

ரத்னா 'பெரிய' ஆள் ; ஆகவேதான், அவனுடைய கதை பெரியதாகவே அமைகிறது.

காயத்ரி 'சின்னப் பெண்'; எனவேதான் அவள் கதை சிறியதாகவே அமைக்கப்படுகிறது.

ஓர் அழகான கிளிக்குப் பெயர்தான், 'காயத்ரி' என்பது !

வளர்க்கப்பட்ட அந்தக் கிளி ஒப்படைக்கப்பட்ட—ஒப்புவிக்கப்பட்ட பூனைக்கும் பெயர் இருந்தது ; அது தான், ரத்னா என்கிற ராஜரத்னம் ! நயவஞ்சனையையும் நம்பிக்கைத் துரோகத்தையும் சிலந்தி வலையெனப் பின்னி, அதற்குள் காயத்ரி, ஒரு ரோஜாப் பூவைத் தள்ளி, இருட்டில் அல்லாமல், வெளிச்சத்திலேயே அவளை—கட்டின பெண்டாட்டியான அவளைச் சூழ்ச்சி செய்து மயக்கி ஒரு 'பிஸினஸ்' நடத்தும் போலி மனிதன்—மோசடி ஆள்—மோசமான பேர்வழிதான் **(Pious fraud)** அவன். கொண்டவளுக்கு. அதாவது, கட்டிக் கொண்டவளுக்கு, அதாகப்பட்டது, தாலியைக் கட்டித் தன்னுடைய சொத்தாக ஆக்கிக் கொண்டவளுக்குக் கண் கட்டு மாயமாகத் துரோகங்கள் இழைத்து, அவளைக் கண்களைக் கட்டி வெட்ட வெளிக்காட்டிலே, வெட்ட வெளிச்சக் காட்டிலே தள்ளி விட்ட மாதிரி, அவளது அழகான கண்களைக் கட்டாமலே அவளுக்கும் அவளுடைய புனிதத்துக்கும் சகட்டு மேனியாகத் துரோகங்களை இழைத்து, அவளைப் பிறந்த மேனியில் தட்டித்தடுமாறித் தவித்து, உருகி உருக்குலையச் செய்த அசல் பாவி, பாவியிலும் பாவி, மாபாவி அவன் !

சமுதாயத்தின் அழகான அங்கமான காயத்ரி ராஜ ரத்னம், அதே சமுதாயத்தின் நச்சு நோய்க் கூண்டுப் புழுவான ராஜரத்தினம் காயத்ரியிடமிருந்து இறுதி விடுதலை பெறுகிறாள்.

வழக்குரைஞர் கணேஷ் ; "காயத்ரி ! உன்னை அவர் கள் [ரத்னா என்கிற ராஜரத்னம்+சரஸு என்கிற சரஸ்வதி+'இந்திராபேபி'+ஐயர் கூட்டம்—கூட்டணி] எப்படி உபயோகப்படுத்திக் கொண்டிருந்தார்கள், தெரியுமோ ?"

காயத்ரி : "எப்படி ?"

"சொன்னால், அதிர்ச்சியைத் தாங்கிக் கொள்வாயா?"

"என் 'கணவர்' என்னை ஏமாற்றிய அதிர்ச்சியையே சமாளித்து விட்டேன்!"

கணேஷ் சொல்கிறார் "திரைப்படம் எடுத்துக் கொண்டிருந்தார்கள். உன் சந்தேகங்கள் எல்லாம் சரியே. நீயும் ரத்னாவும் தனியாகப் படுக்கையில் இருந்தபோது, ரத்னா விளக்கை அணைக்க மறுத்ததை ஒரு தடவை குறிப்பிட்டிருக்கிறாய். என்ன நடந்தது; தெரியுமா? திரைக்குப் பின்னாலிருந்து ஒரு சினி காமிரா சுழன்றிருக்கிறது. பாத்ரூமிலும் அதே கதை; அப்புறம். அந்தப் பெண்ணுடன்... அப்புறம்..."

"மை காட்!"

அவள் மௌனம்.

அவள்—காயத்ரி.

தன்னையும் அறியாமல், தன் மானம், தன்மானம் பறிக்கப்பட்ட பேரதிர்ச்சியை அபலைத்தனமான காயத்ரியின் சார்பிலே எடுத்து இயம்ப ஓடோடி வரும் கதை ஆசிரியர், அப்படியென்றால், கதையைத் தயாரித்தவர் ஒரேயொரு சொல்லிலே 'மௌனம்' என்று எடுத்து இயம்பி, மௌனப் பிள்ளையாராக ஆகி விட்டாரே?— பின், அபலைத்தனமான காயத்ரியின் மனக் குமுறலை, இதயப் புயலை, பறிபோன மானத்தின் ஊழிப் பிரளயத்தை யார் சொல்வார்களாம், பாவம்!

ஐயோ, பாவமே, காயத்ரி!—இருந்திருந்து இந்தக் கதைத் தயாரிப்பாளரிடம்தானா—இந்த அபாயப் புள்ளியிடம் தானா உன் கண்ணீர்க் கதையை அஞ்சல் செய்திட வேண்டும்?—'அஞ்சேல், அபயம்' என்பதாக மனித அபிமானத்துடன் ஆறுதல் சொல்லத்தக்க சிறு துரும்பு மனிதர் ஒருவர் கூடவா, உன் கண்ணீர்க் கரையில்

நிழலாடவில்லை?—ஆனாலும், உங்களை உங்கள் அருமை ரத்னா காலை வாரிவிட்ட மாதிரி, உங்கள் அன்பு விதியும் இப்படிக் காலை வாரிவிட்டிருக்கக் கூடாது, போங்கள்!

அம்மணி, 'போங்கள்' என்றதும், உடனேயே போய் விட்டீர்களா? சற்றே நில்லுங்கள், மிஸ் காயத்ரி!

**Thank yon, madame :**

காயத்ரி தயவுசெய்து, திரும்பிப்பார்ப்பீர்களா?— நீங்கள்... **Gayatri, the brilliant** ஆயிற்றே?— நற்பெருமாட்டியான உங்களது ஆரம்பக் கட்டத்திய வாக்குமூலப் பிரகாரம், உங்கள் ரத்னாவை நாகரிக மரபினராகவே (புரியவில்லையா?—" 'ஜென்டில்மன்) ஆகவே தாங்கள் கருதியிருந்தீர்கள். ஆனாலும், நீங்கள் புகுந்த மனை பயங்கரப் புதிர் நிலைச் சூழ்ச்சிகளின் சங்கமத் தலம், **Too much of mysteries** என்னும் உண்மையை நீங்கள் ஊகம் செய்த கையோடு, ஆக்கப் பூர்வமான அல்லது, ஊக்கப் பூர்வமான செயலில் நீங்கள் ஏனாம் இறங்கவில்லை?—கருமத்தைச் செய்து விட்டு அதன் பலனைக் கீதையின் தலையில் அல்லது, அந்தக் கிருஷ்ண பரமாத்மாவின் தலையில் போட்டிருந்தால்கூட, உங்கள் அழகான தலை இப்படி 'அழகாக' உருண்டிருக்காதே? சரி! குளியல் அறையில் உன்னையும் அறியாமல் உன் உடம்பு கூசுகிறது. பாடியவாறு உடம்பில் சோப் தேய்த்துக் கொண்டேயிருக்கிறாய். திடீரென்று மயிர்க் கால்களிலெல்லாம் உணர்கிறாய்! யாரோ உன்னைப் பார்ப்பதாக நீ உணர்கிறாய்! — அப்போதாகிலும், உன் கருத்தும் உள்ளுணர்வும் சொன்னபடி, உன் சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ளவோ, இல்லை, அந்தச் சந்தேகத்தைத் தீர்த்துக் கட்டிவிடமோ ஏதாவது நடவடிக்கை எடுத்தாயா? கிடையாது! — அதுதான் தொலையட்டும்!—அப்புறம், ஒரு நாள் உன் ரத்னா, கணவனென்று பேர் படைத்த உன் ஆசை ரத்னா, ரத்னா

என்கிற பெயரிலேயே போதையும் போதகமும் பெற்று மயங்கிப் போவதற்கு காரண பூதமான ரத்னா, "காயத்ரி! Why do you imagine thing? போன தடவை சரசு பாத்ரூமில் எட்டிப் பார்க்கிறாள் என்றாய். இந்தத் தடவை வரம்புமீறி என்ன என்னவோ சொல்கிறாய். சரசுவைக் கண்டால். உனக்குப் பிடிக்கவில்லையா? அவளை ஏன் இவ்வளவு வெறுக்கிறாய்?" என்று அக்கு வேறு ஆணி வேறாக உன்னைக் கேள்விக் கணை தொடுத்துப் பிய்த்தெடுத்தானே, அப்போதாகிலும், உனக்கிருந்த கற்பனை வளத்தைப் பயன்படுத்திக் கொண்டு, சரசு என்கிற சரஸ்வதியை 'இனம்' கண்டு அவளைப் பாதாதிகேசம் வரைப் பிய்த்துத்தான் உதறினாயா? ஊகூம்?— அதுவும் இல்லை! சரி, போகட்டும்! முன்னமேயே, பயங்கரமான அந்த வீட்டின் பயங்கரமான சூழல் உன்னுள் ஐயத்தை எழுப்பி, உன்னை உறுத்தத் தொடங்கிவிட்டது அல்லவா? இந்நிலையிலே, உன் ரத்னா இரவிலே உன்னோடு தனித்து இருக்கையில், அதாவது, "ராசலீலை'யில் நீயும் அவனும் நான்கு சுவர்களுக்குள்ளே, அடைக்கப்பட்ட கதவுகளுக்கு இடையில், இடையீடின்றி, ஈருடலும் ஓருயிருமாகச் சரச சல்லாபத்தில் மயங்கியும் மயங்கியும் தனியாக, ஒன்றில் ஒன்றான தனிமையில் இருக்கையில், விளக்கை அணைக்க வேண்டாமென்று உன் ரத்னா சொன்னதுமே, உனக்கு அவன் பேச்சில் ஏதோ சூட்சுமம் பதுங்கியிருக்கிறதென்ற உண்மையை—உண்மை நிலையை உன்னுடைய உள்ளுணர்வின் வாயிலாக நீ உய்த்துணர்ந்து, அதற்கேற்பக் காரியத்தில் செயலாற்றியிருக்க வேண்டாமா? சிந்தித்துப் பார், இல்லையெனில், திரும்பிப் பார்!

**மேற்குக் காற்றிலே ;**

இர்விங் வாலெஸ் (Irwing Wallace) டெனிஸ்ராபின்ஸ் அகதா க்ரிஸ்டி. பீட்டர் சீட்னே என்று நூற்றுக்கணக்கில் பிரபலமடைந்துள்ள அந்நியநாட்டு மர்மக்கதாசிரியர்

களெல்லோரும் ஏதோ தன்னைப் பார்த்துத்தான் துப்பை அறியும் கதைகளை எழுதுவதாக மனத்தில் அசிங்கமான கற்பனையைப் பின்னிப் பிதற்றும் நம்மவர்களிலே சுஜாதாவும் ஒருவராக இருப்பதில் ஆச்சரியம் கிடையாது. —ஆனால், மேலே கண்ட மேலை நாட்டுக்காரர்களை யெல்லாம் பார்த்துத்தான், தனக்கு இப்படிப்பட்ட கதைகளையே எழுத வேண்டுமென்று ஒரு நப்பாசை தோன்றி, அதன் காரணமாகவே, மேலே சொல்லப்பட்ட ஆசிரியர்களையெல்லாம் கூட்டிக் குழப்பி இப்போது கதையைப் பின்னி, முரண்பட்ட காதலை முரண்பட்டுச் சொல்லி, இளைய பாரதத்தின் புதிய தலைமுறையினரைக் கெடுத்துக் குட்டிச்சுவராக ஆக்கும்படியான இப்படிப் பட்ட ஒரு வசதி வாய்ப்பு வாசகர்களின் புண்ணியத்தில் குருட்டு அதிர்ஷ்டமாகத் தனக்கும் தன் கும்பலுக்கும் கிட்டியிருக்கிறதென்கிற பரமரகசியத்தைத் தமிழ்ச் சமூகத் தினர் இப்போது துப்புக் கண்டு அறிந்து உணர ஆரம்பித்து விட்டார்கள்!— ஆனால், இந்த ரகசியம் இவர்களின் மண்டைகளில் கூட, இன்னமும் உறைக்க வில்லையே...?

'மணியன்' ஆசிரியரான மணியன் முன்னம் குறிப்பிட் டிருந்தாற் போன்று, சுஜாதா எழுதிய 'நைலான் கயிறு' என்கிற குமுதமான முதல் நாவல் அவருடைய எழுத்துலக வாழ்க்கைக்குச் சிறப்பான ஆரம்பமாக அமைந்திருக் கலாம்!—ஆனால், அந்த ஆரம்பம் அறிமுகம் செய்த சுஜாதா, அதே துப்பறியும் மர்மத் துறையில், அதே மேலைநாட்டின் அடிச்சுவடுகளை ஒற்றியேதான் இன்னமும் மலையாள அவியலாகக் கதை பண்ணி வருகிறார்!—ஆகவேதான், அவரது எழுத்துப் பிழைப்பு, அவருக்கு விஸ்தாரமாகப் 'படி' அளப்பதோடு நின்று விட்டது; ஆகவேதான், அவருடைய எழுத்துக்கள் சமூகப் பிரச்சினையோடு கூட சமூகப் பொறுப்பு எதையும் ஏந்தி நிற்பதாகவும் அமைந்திடக் காணோம்! இந்நிலையிலே, தனது 'காயத்ரி'யில் பிரமாதமாகச் சமூக நீதி மறைந்து

கிடப்பதாகத் திருவாய் மலர்ந்திருப்பதற்கான காரண காரியம் இந்த ரங்கராஜனுக்கும், அந்தப் பள்ளிகொண்டானுக்கும்தான் வெளிச்சம்... !

இராமகாதையில் விதியின் நாயகியாம் சீதாப்பிராட்டிக்கே விதியாக அமைந்தது இலட்சுமணன் கோடு !—அது போலவே, நமது அன்றாட நடைமுறை வாழ்வில் இலட்சுமணன் கோடாக அமைவதுதான் ஒழுக்கம் எனும் விதிமுறை ! விழுப்பம் தருவதாலேதான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படுகிறது. வள்ளுவம் வரையறுக்கும் ஒழுக்கத்தினாலே தான் பண்பு பண்பாடும் ; மரபு சதங்கையொலி எழுப்பும்; குணநலன் சரித்திரம் படிக்கும்! —அப்போதுதான், மனிதன் உயர, சமூகமும் உயரும் ; சமூகம் நல்லபடியாக உயர்ந்திட சமூக மனிதனும் மனிதனாக உயர்ந்திடுவான் ! மானுட வாழ்க்கையின் இலட்சியங்கள் இலட்சுமணன் கோடுகளாகப் பொலிந்து தழைத்துச் செழித்துச் சிரிக்கையிலேதான், மண் வாழ்க்கையின் உயிர்க்களை பொலிந்த கதை மாந்தர்களும் சிரிக்க முடியும் ; சிறக்க இயலும் ; நிறக்கவும் கூடும் !

வாழ்க்கை இலக்கியத்தின்—இலக்கிய வாழ்க்கையின் மேற்கண்ட விதிமுறைகளுக்கும் முறைவிதிகளுக்கும் எவ் வகையிலும் 'காயத்ரி' ஈடுகொடுக்கவே இல்லை !

பேராசிரியர் கல்கி என்று சொன்னால், உடனே ஆயனர் மகள் சிவகாமி நம் மனக்கண்ணில் ஆனந்த நடமாடுவாள் !

தகழி எனறால், கருத்தம்மா கள்ளங்கவடு இல்லாமல் வெள்ளைப் புன்னகையினை அள்ளி அள்ளி வீசுவாள்.

டால்ஸ்டாய்க்கு அன்னா கரினா வாய்க்கவில்லையா ?

நோபல் பரிசுக் கலைஞர் தாகூரின் புகழை நாளும் பொழுதும் பாடுவதற்குக் கோரா கிடைக்கவில்லையா ?

இங்கே, சுஜாதா என்றால், பளிச்சென்று ஒருத்தி பளிச்சிட்டு மின்னுகிறாளா ?—ஊஹூம்—மூச் ! மேலை நாட்டு நாகரிக மங்கைகளெல்லாம், ரேவதி, பவானி, காயத்ரி, கிருஷ்ணவேணி, கணேஷ், வசந்த், சரசு அது இது என்று மாற்றுத் தமிழ்வேடம் புனைந்து 'காபரே' நடனம் ஆடுவார்கள் !— அவ்வளவுதான் கண்ட பலன் !— ஆதலால்தான், காயத்ரி மாதிரியே, ஏனைய நவீனங்களின் கதை அரசிகளும் ரேஷன் அரிசியாக உப்புச் சப்பு இல்லாமலும், இருந்த இடம் தெரியாமலும் போய் விட்டார்கள், பாவம் !

கதை என்றால், கரு, பின்னல், போராட்டம், மனவோட்டம், குணச்சித்திரம், நீதி என்று பற்பல விதிகள் உண்டு !

ஆனால், தமிழ்ச் சமூகத்தின் துரோகிகளாகவும் எழுத்துச் சமுதாயப் புல்லுருவிகளாகவும் பட்டாம் பூச்சிகளாக மின்னிக் கொண்டிருக்கிற நாலு பேர்களில் என்னதான் சுஜாதா முதல் இடத்தைப் பற்றிக் கொண்டாலும், புஷ்பா தங்க(த்)துரை, இந்துமதி, சிவசங்கரி ஆகியவர்களுக்கு அவர்களது ஆபாச இலக்கியச் சேவகத்துக்கு அளிக்கப்படுகிற மிகமிகக் கடைசியான இடத்தையே நான் இந்த ரங்கராஜனுக்கும் வழங்க முடியும் !

# 5. ஒரு (ஓர்) ஊதாப்பூ கண் சிமிட்டுகிறது !

புஷ்பா தங்க(த்)துரை

**பாவப் பரிசோதனையிலே நால்வர் !**

பேசுகின்ற வரலாற்றில் பேசப்படும் பெருமையை நிலைத்து நிலை பெறச் செய்து வரும் தமிழச் சமுதாயம். மரபு வழிப்பண்பாட்டில் வரலாறு படைத்துள்ளது அல்லவா ?—அவ்வாறு படைக்கப்பட்டுள்ள வரலாற்றில், தமிழச் சாதியைப் பிரதிபலிக்கும் படைப்பு இலக்கியத்தின் நெறிமுறை சார்ந்த மேம்பாடு ஓர் அங்கமாகவும் அணியாகவும் விளங்கும் அல்லவா ?

ஆனால், சீர்மையும், சிறப்பும் பெற்ற பொதுமக்கள் இலக்கியம் கொஞ்ச காலமாகக் கெட்டு விட்டது : கெடுக்கப்பட்டு விட்டது,

பாவம் செய்தவர்கள் நாலு பேர்.

பாவப்பட்ட ஜன்மங்களோ ஆயிரக்கணக்கில், பதினாயிரக் கணக்கில் !

விதியின் சோதனையைப் போலவே, இந்தப் பாவப் பரிசோதனையும் நிகழ்ந்தது ; நிகழ்ந்தும் வருகிறது !

புனிதம் மண்டிய தமிழ்ப் படைப்பிலக்கியத்தைப் புனிதம் காத்துப் பொற்புமேவப் பேணிக்காத்து வாழ்த்தி வாழவைத்த தமிழ்ச் சமூகக் காவலர்களின் இலட்சியக் கனவுகளையெல்லாம் தங்களுடைய சுய நலம் கொண்ட வயிற்றுப் பிழைப்புக்காகவும், குறுக்கு வழிப் புத்தி படைத்த அற்பப் பேருக்காகவும் அவசரப் புகழுக்காகவும் பாழ்படுத்தி வருகின்ற வெறும் நாலு பேர் அடங்கிய நாசகாரக் கும்பலில் பண்பட்ட எழுத்தாளரான ஸ்ரீவேணு கோபாலன், பண்புகெட்ட எழுத்தாளர் புஷ்பா தங்க(த்) துரையாக இடம் பெற்றது, இடத்தை பிடித்துக் கொண்டது அவருடைய துர்ப்பாக்கியம் என்றே சொல்ல வேண்டும், வாழ்க்கையைச் சோதிப்பதாகச் சொல்லி, இளைய பாரதச் சமுதாயத்தினரைச் சோதித்த—சோதிக்கும் இந்தச் சமூக விரோதிகளில், சுஜாதா என்கிற ரங்கராஜனுக்கு அடுத்த படியாகவே, புஷ்பா தங்க (த்) துரை என்னும்படியான ஸ்ரீ வேணுகோபாலன் இடம் பெறுவார்.

சமுதாயம் என்பது வெறும் நாலே நாலு பேர் மாத்திரமே தான் என்கிற 'பூனைக்கண்' மயக்கத்தில், பிரமையில், அசட்டுத் தைரியத்தில், அநியாயப் பாவத்தில் மனச் சூது கவ்வப் பேனாவைக் கவ்வித் திரியும் இக் கும்பலில் மூன்றாவது இடம் இந்துமதிக்கும் நான்காவது இடம் சிவசங்கரிக்கும் உரிமதாகவும் கருதலாம்!—இதுவே தார்மிக நியாயமெனவும் அந்த வட்டாரப் புள்ளி களிடையே ஒரு பேச்சு சலசலப்பதும் பொய்யாக இருக்க முடியாது!

**வி**க்கிரமாதித்தன் யுகத்திலேதான் கூடுவிட்டுக் கூடு பாயும் சித்து விளையாட்டு நடைபெற்றதா?

இல்லை!

இதோ, இங்கே, ஸ்ரீவேணுகோபாலன் என்கிற நல்ல எழுத்தாளர், புஷ்பாதங்கதுரை என்கிற பொல்லா எழுத்-

தாளராகக் கூடு விட்டுக் கூடு பாய்ந்து, கூத்தாட வில்லையா ? கூத்தடிக்கவில்லையா ?

"சுவர்க்கம— சுகம்— சுநீதா' என்னும் புஷ்பா தங்க துரையின் நவீனத்துக்கு 'மணியன்' ஆசிரியரான திரு மணியன் அருளிய முன்னுரையில் கீழ்க்கண்ட பாராட்டுக் களையும் அருளி யுள்ளார் : "திருவரங்கன் உலா' போன்ற சரித்திர நாவல்களை எழுதும் ஸ்ரீவேணுகோபாலனும், 'இளமைக்கு ஒரு விசா' போன்ற 'நியூ வேவ்' நாவல்களை எழுதும் புஷ்பா தங்கத்துரையும் ஒருவரேதான் என்பதை நம்புவது மிகவும் சிரமம். அப்படித் தன்னை இருவிதங் களிலும் வெற்றி பெறச் செய்து கொண்டிருப்பதே அவருடைய சாமர்த்தியத்துக்கும் ஒரு சான்று !"

பொய் அல்ல !— மணியன் பொய் சொல்லமாட்டார்!

புஷ்பா தங்கத்துரை சர்வ நிச்சயமாகச் சாமர்த்தியக் காரர் தான் !— இல்லாவிட்டால், இளைய பாரத சமுதா யத்தை இப்படி ஆட்டிப்படைத்து அலைக்கழித்துத் திசை திருப்பிவிட்டு, அந்தத் திருப்பத்தின் சந்நிதியில் தன்னு டைய அற்பப்புகழை வளர்த்துக் கொள்ளத் துணிந்திருக்க மாட்டார் !

**கண் சிமிட்டும் ஊதாப் பூ !**

**ஊ**தாப்பூ கண் சிமிட்டும் !...

இது ஒன்றும் ஒன்பதாவது பத்தாவது உலக அதிசயம் அல்லதான் !

என்றாலும் ;

புஷ்பா தங்கத்துரை உருவாக்கித் தயாரித்துள்ள இந்த ஊதாப்பூவில், கண் சிமிட்டுகின்ற இந்த ஊதாப் பூவில், அழகும் உண்டு; அழகுக்கேற்ற சுகந்தமும் உண்டு.

மறுமலர்ச்சித் தமிழின் படைப்பிலக்கியம் இன்று திசை மாறி, பண்பு மாறி எங்கேயோ போய்க்கொண் டிருக்கிறது என்னும் உண்மையை— உண்மையின் நிலையைச் சமுதாயப் பொறுப்பும் சமூகப் பிரச்சினையும் கொண்ட பத்திரிகைக்காரர்கள் ஆகட்டும், சமூதாயத்தின் நெறிமுறையான ஆரோக்கிய வளர்ச்சியில் நாட்டம் கொண்ட வாசகர்கள் ஆகட்டும், அத்துணை லகுவில் மறந்துவிட முடியாது; மறுத்துவிடவும் முடியாது!

இவ்வுண்மையின் சத்தியத்தை உணர்ந்து கொண்டால் தான், புரிந்து கொண்டால்தான், ஊதாப்பூவின் கதை காரணத்தையும் நீங்கள் அதே சத்தியக் கோட்டில் நின்று உணர்ந்து கொள்ள முடியும், புரிந்து கொள்ளவும் முடியும்!

ஊதாப்பூவின் கதை சாதாரணம்!— வெகு சாதாரணம்!

இந்தரும் சசியும் நெருங்கிப் பழகிய பொறி யியல் மாணவர்கள்; விதிப்பொறியாகவே அவர் கள் மத்தியில் ரமி தோன்றுகிறாள்! பாவேந்தர் பாடினதற்கொப்ப, ரம்யா என்னும் ரமி அழகின் உச்சி!—

அழகிலே, போட்டி உதிக்கிறது!

போட்டியில், பொறாமை கண் சிமிட்டு கிறது.

பொறாமையின் கண் சிமிட்டலில் சவால் விளையாடுகிறது; விதியும் விளையாடுகிறது.

முடிவில், கொலை, ஊதாப்பூவாக விதியின் வினை வடிவிலும் வினையின் விதி உருவிலும் விளையாட்டுக் காட்டுகிறது.

இந்தர் கொலைகாரன் ஆகிறான்.

கொலையுண்டவன் சசி.

ரமிக்காகக் கனாக் கண்டவனுக்குச் சிறைக் கதவுகள் திறக்கின்றன ; மூடிக் கொண்டுவிடு கின்றன ! ஒரு கட்டத்தில், மூடிக்கொண்ட கதவுகள் திறந்து கொள்கின்றன !

ஆனால், அங்கே ரமி— அதாவது, இந்தர் இதய பூர்வமாக நேசித்த ரமி அப்போது வேறொருவரது சொத்தாக ஆகிவிட்டிருந்தாள் !

அல்லும் பகலும் தன்னுடையவளாக ரம்யாவை நினைந்து நினைந்து, ஆறு ஆண்டு களைக் கொட்டடியில் கழித்து, ஓர் இனிய காலைப் போதில் சுதந்தர வானம்பாடியென விடுதலை அடைகிறான் இந்தர்.

இந்தர், நரேன் ஆகிறான் !

ஆனால், அங்கே தன்னுடைய ரமி அப்போது மாற்றான் தோட்டத்து முல்லையாக மலர்ந்து மணம் பரப்பிக் கொண்டிருந்த அதிர்ச்சியைத் தாங்கவும் முடியாமல், தாளவும் மாட்டாமல் நரேன் தவிக்கிறான்.

எப்படியோ, மறுபடி அவளைச் சந்திக்கிற வாய்ப்பு அல்லது வசதியை ஏற்படுத்தித் தரு கிறது விதி.

விதி பொல்லாதது !

ஆமாம்; ரமியின் ஒரு பார்வைக்காக ஒற்றைக் காலில் தவம் இயற்றி, காதல் நோன்பையும் இயற்றிக் காத்திருக்கிறான் நரேன்.

ரமியும் நரேனும் சந்திக்கிறார்கள்.

ஆனால், ரமி அவனுடன் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

மனம் ஒடிகிறான் அவன்.

அவளது உதாசீனம் அவனைக் கொல்லாமல் கொல்கிறது.

மறு சந்திப்பில், ரமி சொல்வாள்: ''நரேன்! நான் வேறு ஒருவரை ஏற்றுக் கொண்டாகி விட்டது. இனி மாறுபட வழியில்லை; இது எனக்குத் தெரியும். ஆனால், அதே சமயத்தில் உங்கள் நினைவு என் மனத்தில் ஒரே சீராக ஊடுருவி விட்டது. அதைக் களைந்து எடுப்பது முடியாத காரியம். இந்த ஜன்மத்தில் முடியாது. உங்கள் நிழலைப் பார்த்தால்கூட, என் நினைவுகள் கிளர்ந்துவிடும். என் மனம் அவ்வளவு மெல்லியது. உங்கள் நினைவு அலைபாய்ந்து வருவதை என்னால் தடுக்க முடியாது. ஆகவே, உங்களைப் பார்க்காமல் இருக்க வேண்டுமென்று நினைத்தேன்!"

அவன் கவலைப்பட்ட மாதிரி, அவள் தன்னைக் கேவலமாக நினைக்கமாட்டாள் என்பதை அறிந்து, அவன் மனம் அமைதியில் நெகிழ்கிறது.

இந்நிலையில்:

ரமியிடம் நரேன் வரம் ஒன்றைக் கேட்கிறான்: 'ரமி! நீ என்னுடன் ஒருநாள், ஒரே

ஒருநாள் இல்லறம் வாழ வேண்டும்!... ஒரே ஒருநாள் கணவன்—மனைவி போல் நாம் வாழ வேண்டும். அதுபோதும். அந்த நினைவிலேயே வாழ்வைக் கழித்து விடுவேன்!' அவளைக் கையால் கூடத் தொடுவதில்லையென்று அவன் சத்தியம் செய்து கொடுக்கிறான்.

ரமியும் நரேனும் அவ்வாறே ஒரு நாள் கணவன்—மனைவியாக வாழ்கிறார்கள்!

பின்:

வாழ்வின் விதிச் சிரிப்பிலே சிந்தும் சிற்றலைகளாகச் சபலங்கள், சலனங்கள், தாகதாபங்கள், முரண்நிலை ஆசாபாசங்கள்!— இருவருமே அல்லாடுகிறார்கள்; த ள் ள ா டு கி ற ா ர் க ள்; தடுமாறுகிறார்கள்; தத்தளிக்கிறார்கள்.

ரமியை நரேன் தன் வாழ்நாளிலே ஒரு போதும் மறக்கமாட்டான்; மறக்கவும் முடியாது; மறக்கவும் கூடாதுதான்.

அதே நிலையில் ரமியும் தவிக்கிறாள். ''என் வாழ்க்கையின் பந்தங்களை விடுவித்துக்கொண்டு, உங்களை வந்து அடைகிறேன். இருவரும் எங்கேயாவது தூரத்தில், எங்கேயாவது போய் நிம்மதியாக வாழ வேண்டும்!" என்கிறாள். அதற்காக நடவடிக்கைகளையும் மேற்கொள்கிறாள். கணவர் சியாமுக்குக் கடிதம் எழுதி வைக்க, அவர் அதைப் படித்த கையோடு, அவளை எதிர்பாராமல் சந்திக்க நேருகிறது. "அமைதியுடன் போய் வா!" என்று விடை கொடுக்கிறார் சியாம்— ரமியின் சியாம்.

சியாமின் ரமி மனமாற்றம் அடைகிறாள்.

ஆனால், எந்த மாற்றமும் விதியின் கணக்குப் பிரகாரம் கொஞ்சகாலம்தான் நீடிக்கும் போலும்!

மறுபடி சலனம், சபலம்... இத்யாதி!

தனது நன்மைக்காகவும் தனது காதலனான நரேனின் நன்மைக்காகவும் ரமி அவ்வூரைத் துறந்து பம்பாய்க்குப் போய்விடத் தயாரா கிறாள். வெள்ளியன்று ரயில் நிலையத்தில் சந்திக்குமாறு வேண்டிக் கடிதம் அனுப்புகிறாள் : "கடைசி முறையாக என் கண்களால் உங்களைப் பார்க்க விரும்புகிறேன்!"

அன்று வெள்ளியன்று ரயில் நிலையத்துக்கு ஓடோடி வருகிறான் நரேன்.

**ஆனால்—**

அதற்குள் :

ரயில் வண்டி புறப்பட்டுவிடுகிறது!

நரேனின் கண்களுக்கு மட்டும் அந்த ஊதாப்பூ கண் சிமிட்டுவது தெரிகிறது!

இப்போது, நரேன் புது மனிதன் ஆகிறான்!
கதை முடிகிறது!

இந்தக் கதை முடியும் போது, கத்தரிக்காய் காய்க்காது!

காய்க்காத கண்ணீர்த்துளிகள் தாம் காய்ப்பேறிக் காட்சி தரும், தரிசனமும் தரும்!

**காதற் கனவுகளில் ஊதாப்பூ**

அழகான கனவுக்குக் காதலை ஒப்புவமையாக்கி நான் எண்ணிப் பார்ப்பது வழக்கம்; வழக்கமான காதலில்

ராசலீலைகளும் லீலா விநோதங்களும் காதற்கனவின் கனவுக் காதலின் பின் புலத்தில் அப்பொழுது கண்ணா மூச்சி ஆடவும் தவறுவது இல்லைதான் !

காதலில்தான் எத்தனை ரகங்கள், ராகங்கள் !

ஒரு தலைக்காதல்.

மறுதலைக் காதல்.

உடற்கவர்ச்சிக் காதல்.

இப்படிப்பட்ட காதலின் பிரிவுகளில் குறிப்பிடத்தக்க தாகக் குறிக்கப்பெறும் ஆத்மார்த்தக்காதலின், அதாவது, ஆன்ம நேயப் பிணைப்பின் (**Platonic love**) உருவகச் சித்திரங்களாகவே ஊதாப்பூ நாயகியும் நாயகனும் மின்னுகிறார்கள். மின்னுவதெல்லாம் பொன் அல்லவே!— ஆனாலும், நாயக—நாயகிப் பாவங்களில், பாவனைகளில், நாயகனைவிடவும், நாயகியின் மன உணர்வுகள்தாம் இங்கே துல்லியமாகப் பளிச்சிடக் காண்கிறோம் ; கேட்கிறோம் !

**அழகான புயல்— ரமி !**

ரமி ஓர் அழகான புயல் ! வாசனை மிக்கதோர் ஊதாப்பூ ரமி ! தாலியாக— திருவாக விளங்குபவள் திருஉருவான சீதாப்பிராட்டியே என்பார் கவிச் சக்கரவர்த்தி. அப்படிச் சிறப்பும் செல்வாக்கும் வாய்க்கப் பெற்ற மங்கலத் தாலியைத் தன்னுடைய உள்ளத்தைக் கவர்ந்த இந்தரின் மூலம் தன் கழுத்தில் பூட்டிக்கொள்ள வேண்டுமென்றுதான் ரமி ஆனந்தக் கனவைக் கண்டாள். ஆனால், அவளுக்குத் தாலி கட்டியவரோ சியாம் ! எனினும், அவளால் பழைய காதலன் இந்தரை—நரேன் என்று புதிய பெயரைச் சூட்டித் தட்டித் தடுமாறிய இந்தரை மறக்கமுடியவில்லை. நரேன் எனப்பட்ட இந்தரை நாடித் தேடி ஓடிவிட முடிவு செய்திட வேண்டிய மனச்சூழல் அவளிடை உருவாகிறது ; உருவாக்கப்படுகிற தென்றும் சொல்லலாம்.

கொண்ட காதலின் ஆதீதமான உயிர்ச் சக்தியால் ஆட்டிப் படைக்கப்பட்ட ரமி என்கிற ஒரு பாரதப் பெண், தமிழ்ப்பெண், கொண்ட கணவனான சியாம் என்கிற நல்ல கணவரைத் துறந்து, பழங்காதலன் நரேனுடன் இரண்டறக் கலந்து விடத் துடிக்கிறாள்; அவள் துடிப்பில், பத்தினித் தருமத்தைப் பார்க்கிலும் காதற்தருமம்தான் மேலோங்கித் துடிக்கிறது!— கேட்கிறீர்களா?

அன்புள்ள சியாமுக்கு,

நான் இவ்விதம் செய்வேன் என்று கனவிலும் எதிர்பார்த்திருக்க மாட்டீர்கள் இப்படியெல்லாம் எனக்குப் பின்னணியில் ஒரு வாழ்க்கை இருந்ததா என்று கூட நினைத்திருக்க மாட்டீர்கள்.

நான் உங்களை விட்டு விலகிச் செல்கிறேன். எங்கே போகிறேன், எதற்குப் போகிறேன் என்றெல்லாம் கேட்காதீர்கள். இது என் வாழ்க்கையில் ஒரு விபத்து. என் வாழ்க்கையில் ஏதோ மறைந்திருக்கிறதென்பதை மட்டும் நீங்கள் புரிந்து கொண்டால் போதும்.

உங்களுடன் வாழ்ந்து விட்டு, உங்களுக்கு அநீதி இழைக்கலாமா என்று என் மனமே என்னைக் கேட்கிறது. அதற்கு என்னால் பதில் சொல்ல முடியவில்லை. நீங்கள் என்னை நேசிக்கிறீர்கள்; பூரணமாக நம்பியிருக்கிறீர்கள். அந்த நம்பிக்கைக்கு நான் உகந்தவளா என்று நினைக்கும்போது, என் நெஞ்சம் வெடித்து விடுகிறது. நீங்கள் உயர்ந்தவர். உங்களுடன் வாழ்வதையே ஒரு பெண் லட்சிய இன்பமாகக்

கருத வேண்டும். நானும் கருதினேன். ஆனால், இப்போது...

இப்போது முடியவில்லை. அதன் காரணம், உங்களுக்கு என் மீதுள்ள அன்போ, அக்கறையோ குறைந்து விட்டது என்பதால் அல்ல. எனக்கு எதுவோ நேர்ந்து விட்டது. அது என் கல்லூரி வாழ்க்கையின் தொடர்ச்சி, அவ்வளவு தான்;

சியாம்! என்னை மன்னிப்பீர்களா? நீங்கள் மிக்க நல்லவர். பண்புடையவர். உங்களை விட்டுப் போகிறேன் என்றால், வேறுவழி எதுவும் எனக்கில்லை என்பதால்! போகாமல் இருந்தால், என் வேதனையே என்னை இங்கே கொன்று விடும். அல்லது, என் வேதனையைக் கொல்வதற்காக என்னையே நான் கொல்ல வேண்டியிருக்கும். உதார குணமுள்ள நீங்கள், நான் எங்கேயாவது வாழ வேண்டுமென்றுதான் விரும்புவீர்கள். அதனால்தான் போகிறேன்.

என்னைப் பற்றி அதிகம் கவலைப்படாதீர்கள். உங்கள் வாழ்க்கையில் இப்படி ஒரு களங்கம் விளைவித்தேன் என்பதற்காக என்னை மன்னித்து விடுங்கள். உங்கள் பாதங்களில் விநயத்துடன் விழுந்து வணங்குகிறேன். விடை பெறுகிறேன்.

உங்கள்
ரமி

மனித மனம் விந்தையானது; விந்தைகள் நிரம்பியது; ஒத்துப் போவதும் உண்டு; இணங்க ஒப்பாமல், முரண்டு பிடிப்பதும் உண்டு. முரண்படுவது ஒரு விபத்து மாதிரி; ஆகவே, பரஸ்பரம் சமரச இணக்கம் ஏற்படாமலும், இரு புறமும் விட்டுக் கொடுத்தல் பண்பு உருவாகாமலும்

இருந்தால், அங்கே முரண்கள் தோன்றவே செய்யும்; முரண்பாடுகளைத் தவிர்ப்பதில் தான் வாழ்க்கையின் பெருமை பேசப்படும்! — ஆகவே தான், முரண்பாடுகளே வாழ்க்கையாக ஆகி விட முடியாதென்றும் நான் அடிக்கடி நினைவு கூர்வேன்; நினைவு படுத்துவேன்.

இங்கே, ரமியின் அழகான அன்பு நெஞ்சம் முரண் படுகிறது; பயங்கரமான, பண்பு மீறிய, அநாகரிகமான, துரோகம் நிறைந்த அந்த முரண்பாட்டில் அவளது உள்ளத்தின் அழகு களங்கமடைந்தாலும், தோன்றின சடுதியிலேயே அந்த முரண் விலகும்போது, அல்லது, விலக்கப்படும்போது, அவளது உள்ளத்தின் பழைய அழகு புத்துயிர் பெறத் தொடங்கி விடுகிறது; புனர் ஜன்மம் எடுக்கவும் தலைப்படுகிறது!— இங்கே தான் புஷ்பா தங்கத்துரை, அசல் ஸ்ரீ வேணுகோபாலன் ஆகி பளிச்சிடு கிறார்!— தப்பிப் பிறந்தாற் போன்று, நல்ல காரியம் ஒன்றைச் செய்து விட்டீர்கள். மிஸ்டர் ஸ்ரீ வேணு கோபால்!— ரமியைச் சியாமிடம் மறுபடி சேர்ப்பித்து விட்டீர்கள்! — Sabash! உங்கள் திருக்கூட்டத்திலே, உங்கட்காவது, கடைசிப்பட்சமான இந்த ஒரு சந்தர்ப்பத் திலாவது, தமிழ் ரத்தம் உறைந்திருக்கிறது! — நல்ல காலம், தப்பித்தீர்கள், என் பேனாவிடமிருந்து!

**'இரண்டாவது கண்ணகி'யின் நகல் :**

**ச**மூகக் குற்றவாளிக் கூண்டு உங்களையும் விட்டு வைக்கவில்லை!— அதற்குக் காரணம் உங்கள் ஸ்வப்நா!— கண்ணியம் சோறு போடாது என்பதாக நம்பும் ஸ்வப்நா மாதிரிதான் நீங்கள்!— உங்கள் சொந்தச் சித்தாந்ததுக்கு உகந்த இடம் இந்தத் தமிழ் மண் அல்ல தான்!

சகோதரி—சகோதரர் புஷ்பா தங்கத்துரை அவர் களே!— இப்போது, நீங்கள் என் முன் ஒரு கைதி!—

"ரமி! நீ என்னுடன் ஒரு நாள், ஒரே நாள் கணவன்—மனைவி போல வாழ வேண்டும்!"— நரேன் சொல்வான் இப்படி? — இந்தச் சிந்தனைக்கு அசலான உடைமையாளி நான் அல்லவா?— 1957 காலக் கட்டத்தில், நான் எழுதி 'உமாவில் வெளிப்படுத்திய 'இரண்டாவது கண்ணகி' என்னும் தொடர் கதையில், கண்ணகி—பூங்குழலி என்கிற சகோதரிகட்கிடையில் நிகழ்ந்த மனப் போரின் உச்சக்கட்டமாக அமைந்ததே இந்த நிகழ்ச்சி தானே?

"என்னுடைய ஆசை நிறைந்த — அன்பு கெழுமிய — அழகு மண்டிய உயிர் அத்தானுடன் ஒரு கணம், ஒரே ஒரு கணம் வாழும் பாக்கியம் கிட்டினால்கூடப் போதும்!— அந்த அமைதித் திளைப்பிலே— ஆனந்தப் பூரிப்பிலே— அளப்பரிய கனவின் மகிழ்ச்சியிலே அவருடன் ஒரு நூறு வருஷங்கள் கூடி வாழ்ந்தது போன்ற அமைதியை— ஆனந்தத்தை நான் அடைந்திடுவேனே!"

பூங்குழலியின் இந்த நாட்குறிப்புத் தான் கதைக்குத் திருப்புமையமாக அமைந்தது.

பூங்குழலியின் சகோதரி கண்ணகிக்கு மட்டுமன்றி, அவள் காதலித்த அத்தான் கரிகாலனுக்கும் அது சோதிப்பாகவே அமைந்தது அல்லவா?

இந்நிகழ்ச்சியை வேண்டுமென்றே உங்கள் கதையிலே திணித்ததால், அது உங்கள் கதையோடு ஏன், உங்கள் கதைப் படத்தோடு கூட ஒட்டாமலே போய் விடுகிறது!— அந்நிகழ்ச்சி என் கதைக்கென்று பிறந்தது ஆயிற்றே, இனிய தோழரே?...

ஸ்ரீ வேணுகோபாலனும் நானும் எழுததுத தோழர்கள்!—

ரமியின் உள்முகப் போராட்டத்தில் (**inward conflict**) நான் புஷ்பா தங்கத்துரையைக் காணவில்லை;—ஸ்ரீவேணு

கோபாலன் தான் என்னுடைய திறனாய்வுக் கண்களில் மின்னுகிறார்!—கதையின் தொனியில் (tone) ஒரு சமுதாய வாதியின் பொறுப்பு ஒலிக்கிறது; எதிரொலிக்கிறது,

'சுவர்ணமுகி' படைப்பாளர்தான் 'ட்விங்கிளத்தன' என்று நொடிக்கு நூறு தரம் இங்கே எழுதியிருக்கிறார்!—என்ன பொருள், புஷ்பா?—என்ன அர்த்தமாம், தங்கதுரை?...

ஊதாப்பூ நல்ல ஜவ்வு மிட்டாய், போங்கள்!

**தமிழ்ச் சாதிக்குத் தேவை!...**

வெவ்வேறு சூழ்நிலைகளில் தங்கள் கற்பை இழந்து, பொது மகளிராகவும் இரு மனப் பெண்டிராகவும் மாறிய சிவப்புப் பெண்களின் நடைமுறை வாழ்வுக் கதைகளை சிவப்பும் பச்சையும் மஞ்சளுமாகப் பின்னிய புஷ்பா தங்கத்துரையின் சாயலிலே ஊதாப்பூவும் கண் சிமிட்டுவது இயற்கைக்கு விரோதமானதென்று சொல்வதற்கில்லை! அது அவருக்கு அதாவது, புஷ்பா தங்க துரைக்கு ஆகிவந்த கலை; அது மஞ்சள் இலக்கியப் பணியின் பண்பாடிழந்த 'செக்ஸ்' கலா விநோதமும் கூட!

இருப்பதைச் சொல்வது கலை.

இருக்கவேண்டியதைச் சொல்ல வேண்டியதும் கலை தான்.

ஆனால், 'சொல்லித் தெரிவதில்லை மன்மதக்கலை' என்னும் பாமர ரஞ்சகமானதொரு முதுமொழியைப் பொய்யாக்க நினைத்து, சொல்லித் தெரிவதுதான் மன்மதக்கலை என்கிற புதிய வாய்ப்பாடு ஒன்றை உருவாக்கி வருகிற சுஜாதா கும்பலில் ஸ்ரீ வேணுகோபாலனும் கூட்டுச் சேர வேண்டுமா?

சோற்றில் சுவர்க்கம் இருக்கட்டும்!

ஆனால், சேற்றில் சுவர்க்கத்தைக் காட்டுவது தருமமா?—மனிதாபிமானத் தருமமா இது ?

சொல்லுங்கள் !

ஓ! சொல்லமாட்டீர்களா ?

சரி.

நான் சொல்லட்டுமா ?

நீங்கள் ஊதாப்பூவில் இடைச் செருகலாக அள்ளி அணைத்துத் திணித்துத் திக்குமுக்காடியிருக்கிற 'ஸ்வப்நா' ஒரு வேசி; தாசி! இளம் பிள்ளைகளுக்கு இளம் பிள்ளை வாதம் ஏற்படச் செய்யவென்றே ஸ்வப்நாவை அறிமுகப் படுத்தியிருக்கிறீர்கள் :

ஸ்வப்நா பேசுகிறாள் :

"...அன்று காந்த் என்னிடம் அகப்பட்டுக் கொண்டார். ஒரே அறையில் தங்கினோம். அவர் கூச்சம் மிகுந்தவர். வெளியே படுக்க விரும்பினார். ஆனால், வராந்தாவெல்லாம் மழை நீர். படுக்க முடியவில்லை: உள்ளே படுத்தார். நான் அவரிடம் பேசினேன். பேசிக் கொண்டேயிருந்தேன். பேச்சுக்கிடையே, ஏதோ கடிக்கிறது என்று கூறி, வேண்டுமென்றே விளக்கைப் போட்டு, பாதி திறந்திருந்த என் மேல் உடம்பைக் காட்டினேன். ஒரு தரமல்ல; பல தடவை விளக்கைப் போட்டு உடம்பை வெவ்வேறு கோணங்களில் காட்டினேன். கடைசியில், ஒரு காலைத் தூக்கி அவர் கட்டிலில் மீது வைத்து, பூச்சிக் கடிகளால் சிவந்துபோன பகுதி என்று சொல்லிச் சில இடங்களைக் காட்டினேன்!..."

சே!...

போதும், அம்மணி, போதும்!— ஸ்வப்நா, நீங்கள் தமிழ் வித்துவான் போலிருக்கிறது! இலக்கணச் சுத்த மாகப் பேசுகிறீர்களே ?...

மிஸ்டர் புஷ்பா—தங்கத்துரை! நீங்கள் இந்தச் சமூ கத்தின் யுவதிகளைப் பற்றியும் இளைஞர்களைப் பற்றியும் கவலைப்படமாட்டீர்கள்! ஆனால், உங்களது சகோதரி சகோதரர்களைப் பற்றிக்கூட கவலைப்படமாட் டீர்கள் போலிருக்கிறது!—போதும், சிவப்பு இரவு! போதாதா மூர்மார்க்கெட் வாசம் ?

மிஸ்டர் ஸ்ரீ வேணுகோபாலன்! — நீங்கள் 'புதுமை எழுத்தாளர்' (!) புஷ்பா தங்க(த்)துரை அவதாரம் எடுத்தது போதும்!—ஏன், தெரிகிறதா?—இப்போது, இளந்தலை முறைத் தமிழ்ச் சமுதாயத்திற்குப் புஷ்பா தங்கத்துரை ஒரு சிம்ம சொப்பனம் ஆகிவிட்டது!

சட்டமும் விதியும் சமூகச் சீர்திருத்த எழுத்தாளர் ஸ்ரீ வேணுகோபாலனை மட்டுந்தான் காக்க முடியும்! — காக்கவும் வேண்டும் !

○

# 6. மணல் வீடுகள்

## இந்துமதி :

**மணல் வீடுகளின் சலி!**

*நான் 'பத்தினித் தெய்வம்' என்றொரு புதினத்தை 1963 காலக் கட்டத்தில் வெளியிட்டேன்; அதுவே, முன்னம் 'உமா' இதழில் 'இரண்டாவது கண்ணகி' என்னும் மகுடம் புனைந்து 1957—58ல் தொடரும் கதையாகித் தொடர்ந்தது. அந்தக் கதை போட்டி ஒன்றிற்காக அழைப்பின் பேரில் எழுதப்பட்டது. தொடர்கதையாக அது வெளிவந்து கொண்டிருக்கும் போதே, இரும்புத் திரையும் விரியலாயிற்று!... அசலையும் நகலையும் இனம் கண்ட தமிழ் உணர்வுமிக்க ரசிகர்கள் பலர் அப்போதே எனக்கு வாய்த்திருந்தனர். அந்நூலில் நான் எழுதியிருந்த 'இலக்கியமரபு வழியில்' என்ற முகவுரையில் சில வரிகளை மறுபடி எண்ணிப் பார்த்திட வேண்டிய நிர்ப்பந்தம் இப்போது ஏற்பட்டுள்ளது :*

> *"...காதலும் கடவுளும் ஒன்று!—மனித வாழ்க்கையிலே சிக்கல்களும் போராட்டங்களும் போர்களும் ஆசாபாசங்களும், ஏக்கங்களும், கோபதாபங்களும் மல்லுக்கு நிற்கும் நடைமுறைப் பாவனைகளுக்கும், ஓங்காரப் பெருமூச்செறியும் மாயவிதியின் சித்திர விசித்திரமான எழுத்துக்கும் ஊடாக, ஊடும் பாவுமாக ஊடாடி நின்று உணர்வும்,*

பாசமும் நேசமும் தருமமும், பரிவும் சோதிக்கின்ற சோதிப்பு முறைக்கும் இடையிலே, அல்லற்பட்டு அவதிப்படும் மனிதனுக்கு, சராசரி மனிதனுக்கு, நடைமுறை உலகின் பாற்பட்ட மனிதனுக்குக் கண்ணால் காண முடியாத கடவுளும் நெஞ்சால் உணர முடிந்த காதலும் ஒன்றாகத் தோன்றுவது இயற்கை மாத்திரம் அல்ல, நியாயமும் கூடத்தான்!... எல்லை சொல்ல இடம் தரும் பிறப்புக்கும், முடிவு கட்ட முடியாத இறப்புக்கும் இடைப்பட்டு, முன்னைப் பழவினையின் மறக்கருணையினால் அமைத்துக் கொடுக்கப்படுகின்ற ஒரு 'கனவுக் காட்சி' போன்றதான இந்த மண் வாழ்க்கையிலே கண்களை மூடிக்கொண்டிருக்கும் வரையிலும் காதல் ஓர் இனிதான, எழிலான கனவாகவேதான் காட்சியளிக்கும்!—கண்களைத் திறந்து விட்டாலோ, கடவுள் மாதிரியே, காதலும் காணாமலே போய் விடும்!..."

இருபது ஆண்டுகளைக் கழித்து இன்றைக்குப் படிக்கும் போது, மேலே கண்ட என்னுடைய இந்தச் சிந்தனைகள், 'புதிய அலை' ஆர்ப்பரிக்கின்ற இன்றைய நாகரிக யுகத்திலும் யதார்த்தமான பொருத்தம் கொண்டிருப்பதாகவே நான் உணர்கிறேன்!—அவ்வுணர்விலே, காதலும் கடவுளும் சிரிக்கின்ற அந்த மாயப் புதிர்ச் சிரிப்பையும் என்னால் உணர முடிகிறது!

புனிதமான காதலுக்கு இன்று என்னென்னவோ முரண்பட்ட அர்த்தங்களும் அனர்த்தங்களும் சொல்லப்பட்டு வருகின்றன!— இப்படிப்பட்ட புண்ணியத்தைக் கட்டிக் கொண்டு திரிகின்ற சமூக விரோதப் புல்லுருவி எழுத்தாளர்—எழுத்தாளிகளிலே, இந்துமதிக்கு நிச்சயமாக மூன்றாவது இடத்தைக் கொடுத்துவிடத்தான் வேண்டும்!—சமுதாயத்தின் இளம்பருவத்தினரை அடுத்துக்

கெடுத்த பாவத்தில், ஆபாச மஞ்சள் இலக்கியத்தின் முடிசூடா மன்னியான சகோதரி பெறத்தக்க பங்குபணி அற்ப சொற்பம் அல்லவே ?

'தரையில் இறங்கும் விமானங்கள்' வரை, இந்துமதி இந்துமதியாகவே பொலிந்தார்!—உண்மைதான்! ஆனால், அந்த இந்துமதியை இனி நான் தரிசிக்கவே வாய்ப்பு இல்லை. இருக்கவும் இயலாது!—சகோதரியின் பாதை மாறிவிட்டது; பாதை மாறிய பேனா, இளைய பாரதத்தினரின் பாதையையும் அல்லவா இடை நடுவிலே மாற்றி விட்டது!

சகோதரிக்குச் சோற்றில் சுவர்க்கம் தெரிகிறது.

ஆனால், நம் இளம்பிள்ளைகளுக்கும் கன்னிகளுக்கும் சொர்க்கத்திலே சேற்றை அல்லவா காட்டிக் கொண்டிருந்தார் இந்துமதி ?

**கரு 1 — படையல்கள் : 3**

**எ**ழுத்துலகின் சோதரி இந்துமதியை என்னைப் போலவே உங்களுக்கும் நன்றாகவே தெரியும்!—ஆதலால், இந்துமதி படைத்த 'மணல் வீடுகள்' பற்றியும் உங்களுக்குத் தெரிந்திருக்கத்தான் வேண்டும்.

குழந்தையே ஒரு பிரச்சினையாகி, அக்குழந்தைப் பிரச்சினையே— வெவ்வேறு மூன்று தமிழ்ச் சாதிக் குடும்பங்களைச் சோதிக்கிறது.

ஒன்று : நாவலாசிரியை 'லக்ஷ்மி' படைத்த 'அவள் தாயாகிறாள்!' என்கிற நாவல்.

இரண்டு : கதாசிரியை சிவசங்கரி உருவாக்கிய 'ஒரு சிங்கம் முயலாகிறது' கதை.

மூன்று : எழுத்துப் புள்ளிமான் இந்துமதியின் 'மணல் வீடுகள் !'

இந்த மூன்று கதைகளுக்குமே குழந்தைதான் ஜீவன்.

இந்த ஜீவனுக்கு முதல் ஆதாரம் அளித்தவர் டாக்டர் லக்ஷ்மி.

லக்ஷ்மியின் கதையமைப்பில் பின்னர் தடம் ஒற்றி நடந்தது 'சிவசங்கரி' என்னும் பெயர்.

நடுவில் வந்தது 'மணல் வீடுகள்'.

சமுதாய நீதியையும் சமூக நியதியையும் சீர்குலைக்கும் பச்சை விபச்சாரக் கதைதான் இந்த 'மணல் வீடுகள்!' கதை.

க்ருபாகரன்.

புவனா.

சஸி.

மூன்று பேரும் முக்கோணப் புள்ளிகள்.

> புவனா-க்ருபா ஜோடிக்குப் பெயர் சொல்லப் பிள்ளை இல்லை. ஆனாலும், அவர்களுக்குக் குழந்தை தேவைப்படுகிறது!—அந்தப் புண்ணியம் சஸி என்கிற பாவிப் பெண்ணுக்குக் கிட்டுகிறது. க்ருபா வாயிலாகச் சஸி 'ஆடிவரும் தேன்' குழந்தையைப் பெற்றெடுக்கிறாள். அவளது கடமையோடு, அவளுடைய கதையும் சந்தி சிரித்த பிறகு, ஒரு முச்சந்தியில் பிரிகிறது !

முரண்பட்ட ஆபாசத்துக்கு, சுஜாதாவைப் போலவே மற்றுமொரு வடிகால் அமைப்பாக விளங்கும் இந்துமதி

யின் சஸி, ஒரு பொய்ப் பித்தலாட்டமான சொந்தத் தத்துவம் ஒன்றைப் பொதுவுடைமைச் சித்தாந்தமாக்க முயற்சி செய்யும் பயங்கரத்தைக் கேளுங்கள் : "மனசிலே இடம் கொடுத்தபின், வெறும் உடம்பு என்ன பெரிய விஷயம், சாந்தி ?" தோழிப் பெண்ணான சாந்தியிடம், அன்றொரு நாள் வாடகைப் பெண்ணாக 'மாறு வேடம்' புனையத் தீர்மானம் செய்தபின் கூறிய சஸியின் இந்தக் கூற்றில் ஓர் அசல் வேசியின் நிழலைத்தானே நாம் தரிசிக்க முடிகிறது ?— இங்கே, இந்தச் சஸி சமூகத் துரோகச் சக்தியாகவும், சமுதாயத்தின் விரோதச் சக்தியாகவும் உருவாகி, அல்லது, உருவாக்கப்பட்டு, இவளும் ஒரு '429' ஆகி அல்லது, ஆக்கப்பட்டு, அசல் தாசியாக அரங்கேறவும் தலைப்படவில்லையா? இங்கேதான், 'சஸியின் குணச் சித்திரம், குணம் கெட்டு, தரம் தவறி, பண்பு தடுமாறி, கற்பு மனமொப்பி மானமிழந்து, வாடகைக்கு விடப் பட்டு, சஸி என்னும் இந்தப் பெண், சஸி என்கிற இரு மனப் பெண்ணாக உருமாறவும் நேர்கிறது!—இந்நிலையில், அதாவது, மனத்திலே ஒருவருக்கு இடம் கொடுத்த பின், வெறும் உடம்பைப்பற்றி லவலேசமும் அக்கறையோ, அனுதாபமோ அல்லது, கவலையோ கொள்ளாத இந்தச் சஸி நமது தமிழ்ச் சமுதாயத்துக்கு அறிவிக்கின்ற சேதி [Social message] 'உடம்பு என்பது வெறும் விஷயம்' என்பதாகத் தானே இருக்க முடியும் ?— இளைய தலைமுறையினரைத் தடம் புரண்டு திசைமாறச் செய்திட [demoralize] முனைந்த சஸி மாத்திரமல்லாமல், சஸியை உருவாக்கித் தயாரித்த இந்துமதியும் சமூகக் குற்றவாளியாக இப்பொழுது ஆகிவிடவில்லையா, என்ன?

**சீர்திருந்தும் குறைபாடுகள் !**

தமிழ்ப் பல்கலைக் கழகங்கள் சிலவற்றில் முன்னம் ஆராய்ச்சித்துறை மாணவ மாணவியர்க்கு ஆய்வுக் குறிப்பு நூலாகப் பரிந்துரை செய்யப்பட்ட 'கல்கி முதல் அகிலன் வரை' என்ற என்னுடைய இலக்கியத் திறனாய்வு

நூலில் நான் குறித்திருந்த விவரம் இந்நேரத்தில் குறிக்கத் தக்க விவரமாகவே அமைகிறது :

''சமுதாயத்தின் குறைபாடுகளை அம்பலப்படுத்தும் முயற்சியைச் சமூகச் சீர்திருத்தப் பிரக்ஞையுள்ள அனைவரும் வரவேற்கவே செய்வார்கள் ; இப்படிப்பட்ட சமூக நலப் பணி முறைகளில் செயலாற்ற முனையும் இலக்கியப் படைப்பாளர்கள் சமூக நலப் பண்பையும் பண்பாட்டையும் தலையாய கடமையாக மனத்தில் கொண்டு செயற்படுவதும் அவசியம் ஆகிறது... இந்நிலை பக்குவமாகப் பேணிக் காக்கப் படுவதும் முக்கியம் ஆகிறது !— அப்போதுதான், மனித மனங்கள் நெறி முறையுடன் பேணிப் பாதுகாக்கப்படவும், அதன் நல்ல விளைவாக இந்தத் தமிழ்ச் சமுதாயம் நெறிமுறையோடு திருத்தமும் சீர்திருத்தமும் பெறவும் வாய்ப்பு வசதி உண்டாகும் ; உண்டாக்கப்படும் !''

இந்த எல்லைக் கோட்டில் நின்று, இந்துமதியின் சஸியை நிறுவை செய்யும் போது, சஸி, அதாவது, 'மணல் வீடுகள்' கதையின் நாயகியான சஸி என்னும் வேசி எடைத்தட்டிலேயே தங்க மறுத்து விடுகிறாளே ?— மேலும், சமுதாயக் குறைபாடுகளை அம்பலப்படுத்தும் போது, சமுதாயம் நலம் பெறுவதற்கான உபாயங்களைப் பளிச்சிடச் செய்ய வேண்டியதும் படைப்பாளியின் தார்மீகக் கடனாகவும் அமைய வேண்டும் அல்லவா ?— இந்நிலையைச் சோதித்தால், பரிசோதித்தால், சமுதாய நலப்பார்வை கெட்ட சஸி தமிழின் எல்லையை மறந்தும் துறந்தும் எங்கேயோ தூக்கி எறியப்பட்டுவிடுகிறாளே ? இயல்பு பிறழ்ந்த இயல்புடைய புவனா, க்ருபா மற்றும் சஸி ஆகிய மூன்று பேருமே இந்துமதியின் 'மணல் வீடுகள்' கதையில் நம்ப முடியாத பாத்திரங்களாக (**Abnormal Characters**) மட்டுமல்லாமல், நம்பிக்கைக்குப் பாத்திர மற்ற, தமிழ்ப் பண்பற்ற பாத்திரங்களாகவும் காட்சி தருகின்றனர் !

நல்ல மனங்களைக்கூட கண்மூடிக் கண் திறக்கும் கைந் நொடிப் பொழுதிற்குள்ளாகவே மயங்கவும் மயக்கவும் செய்ய வல்ல சஸி, நமது தமிழ் மண்ணுக்குத் தேவை யில்லை!...

**பயன் தரும் பண்பான சிந்தனைகள் !**

**நீரின்** மறுபடி சொல்வேன் :

அண்ணல் எச்சரித்த மாதிரி, மனித வர்க்கத்திற்கு ஓர் அன்புப் பண்பு இயல்பிலேயே அமையவேண்டும் !— ஆகவே, உருவாக்கப்படுகிற படைப்பு இலக்கியத்திலே உருவாகும் எந்த ஒரு பாத்திரமானாலும் சரி, அதன் வாயிலாக நமது தாய் மண் பயனுறவும் நாட்டு மக்கள் பயனுற்று மனம் சீர்திருந்தி வாழ்வு வளமடையவும் வாய்ப்பு வசதி ஏற்படவும் வேண்டும் ! இத்தகைய உயர்ந்த சமூகநல நோக்கம் இல்லாத எந்தக் கதையும் எந்தக் கதைப் பாத்திரமும் சமுதாயப் பொது வீதியில் செல்லாக் காசுகளாகவே ஆகிவிடும் !— அறிவுக்குப் பொருந்தாத— அறிவுக்குப் பொருத்தமற்ற முரண் பாடான நிகழ்ச்சிகளை (**irrational elements**) 'மணல் வீடுகள்' மூலம் பச்சையும் சிவப்புமாக மஞ்சள் எழுத்துக் களில் சித்திரிக்கும் இந்துமதியை எண்ணும்போது, 'நல்லது செய்தல் ஆற்றிராயினும், அல்லது செய்தல் ஓம்புமின் !' என்னும் 'புறம்' தான் என் நினைவில் பளிச்சிடும் !

**சஸியின் சமுதாயப் பாடம் :**

**சஸியைத்** திரும்பிப் பார்க்கிறேன்.

என்னுள் காந்தி மகாத்மா மீண்டும் தரிசனம் தருகிறார் :

"கடவுள் இல்லையென்று மறுக்கும் நாத்திகன்கூட, வாழ்க்கைக்கு ஓர் ஒழுக்கம் கட்டாயம் தேவைதான் என்னும் உண்மையைக் கட்டாயம் ஒப்புக் கொள்ளு வான் !"

இந்த நடைமுறைத் தத்துவத்தை சஸியின் இந்துமதி ஏற்றுக்கொண்டால்தானே, இந்துமதியின் சஸி ஏற்றுக் கொள்வாள், பாவம் !

பாவம், சஸி !...

வேசி நாயகி சஸியை ஆராய்ந்தால், இன்னோர் உண்மையையும் 'மணல் வீடுகள்' தெரியப்படுத்தக் கூடும் !— இந்துமதியின் சஸி நமது அருமைச் சமுதாயத் திற்குத் தெரியப்படுத்தும் நீதிபோதனை (**moral judgement**) என்ன, தெரிகின்றதா ? எந்தக் கன்னித் தமிழச்சியும், தமிழச்சிக் கன்னியும் தன் இஷ்டம் போலவும் இஷ்டப் படியும் சோரம் போகலாம், விபசாரம் செய்யலாம் என்பதாகத்தானே இருக்க முடியும் ?— அரசின் விபசாரத் தடைச் சட்டத்தின் கீழ், 'மணல் வீடுகள்' கதையில் சஸி என்னும் தாசி ஒருத்தியை உருவகப்படுத்திய இந்த எழுத்துச் சகோதரியை அதே விதியின்படி ஏன் கைது செய்யக் கூடாதாம் ?— பாவம், சகோதரி !— இன்னமும் அதே சமுதாயத்தின் அதே குற்றவாளிக் கூண்டிலேயே கால் கடுக்க நின்றுகொண்டேயிருக்கிறார் !—**Indhu, excuse me please** !

இந்நிலையிலே—

'மணல் வீடுகள்' படைத்த சகோதரி அக்கதையின் முன்னுரையாகப் பேசுவதாவது. "இது ஒரு வித்தியாச மான கதை. முரண்பாடான வாழ்க்கை. இந்த முரண் பாட்டை ஏற்றுக்கொள்ளாமல் நிறையப்பேர் இருக்கலாம். ஆனாலும், முரண்பாடுகள் தவிர்க்க முடியாதவைகள் ; வாழ்க்கையை விட்டு விலக்க முடியாதவைகள் ; விலக்க முடியாதவைகளோடு கைகுலுக்குவதைத் தவிர வேறு வழி இல்லை. இதைப் புரிந்து கொண்டு, தன் உதட்டின் சிரிப்பு மாறாமல் கை குலுக்குகிறாள் ஒரு பெண்தான் சஸி ! சஸி என்கிற இந்தப் பெயர் நிஜமில்லை. ஆனால், அவள்

மட்டும் நிஜம். இந்த நிஜம், எழுதுகிற வசதிக்காக, சில சின்ன மாற்றங்களோடு இங்கே கதையாகிறது.

சமூகத்தின் குற்றக் கூண்டிலே இன்னமும் இந்துமதி நின்று கொண்டிருப்பதற்கு, அல்லது, இன்னமும் கூட நிறுத்தி வைக்கப்பட்டிருப்பதற்கான காரண காரியம் இப்போது உங்கட்கெல்லாம் நிச்சயம் புரிந்திருக்கத்தான் வேண்டும் !

ஆமாம் : சஸி என்னும் ஒரு 'செக்ஸ்' வேசியையே நியாயப்படுத்த முன் வந்ததால்தானே இந்துமதிக்கு இப்படிப்பட்ட பரிதாபமான நிலை ஏற்பட்டது ?

ஒன்றைமட்டும் மறுபடி நான் சொல்லித்தான் தீர வேண்டும் !— ஒரு கதாசிரியரோ, அல்லது ஒரு கதாசிரியையோ படைக்கின்ற படைப்புக்களை இனம் கண்டால், அப்படைப்புக்களின் ஆசிரியரை அல்லது ஆசிரியையே 'இனம்' கண்டு கொள்ள முடியும் !— நூலைப் போலத்தான் சேலை !— பொய் இல்லைதான் !

வாழ்க்கை நிலைப்பதில்லை.

மண்ணில் ஆரம்பமாகின்ற மண் வாழ்க்கை, மண்ணிலேயே முடிகிறது ; முடிவடைகிறது.

கொண்டாடப்படும் போதுதான், குழந்தையும் தெய்வமும் கொண்டாட்டம் அடையும்.

மேலே கண்ட குழந்தையும் தெய்வமும் ஒன்றில் இரண்டாக ஒன்றியும், இரண்டில் ஒன்றாகப் பிரிந்தும் விளையாடும் போதோ, அல்லது விளையாட்டுக் காட்டும் போதோ, சிருஷ்டியும் சிருஷ்டி ரகசியமும் விளையாடத் தலைப்படும் ; ஏன், விளையாட்டுக் காட்டவும் தலைப் பட்டுவிடும்.

இதுவே, பொய்யான மண் வாழ்க்கையின் சிதம்பர ரகசியம் ஆகிறது!

ஆனால் :

தெய்வத்தைப் பிரிந்து, அல்லது, தெய்வத்தைப் பிரித்து, குழந்தை விளையாடவோ, விளையாட்டுக் காட்டவோ ஆரம்பிக்கும் போதுதான், வாழ்க்கையே ஒரு பிரச்சினையாக உருவாகவும், உருக்காட்டவும் தொடங்கி விடுகிறது!

இவ்வுண்மை நிலைதான், குழந்தையை மையக் கருவாகக் கொண்டு எழுதப்பட்ட மூன்று கதை ஆசிரியை களின் மூன்று கதைகளிலுமே தரிசனம் தருகின்றது.

எழுத்துப் பெண்டிர் மூவர்.

ஒன்று: லக்ஷ்மி—டாக்டர் திரிபுர சுந்தரி லக்ஷ்மி!

இரண்டு: இந்துமதி !

மூன்று: சிவசங்கரி !

இம்மூன்று பெயர்களிலும் ஆச்சரியக்குறி நயமாகப் புன்னகை செய்வதை விநயமாகப் பார்த்திருப்பீர்கள்.

இதுவே காரணம்:

லக்ஷ்மி சமூகப் பார்வையுடன் படைத்த 'அவள் தாயாகிறாள்' நீள் கதையும், இந்துமதி விளையாட்டுத் தனமாகக் கட்டின 'மணல் வீடுகள்' புதினமும், சிவசங்கரி சோதனை செய்து தோற்ற 'ஒரு சிங்கம் முயலாகிறது' நவீனமும் அதே குழந்தைப் பிரச்னையில் தோன்றினது

போல, அதே 1979 காலக் கட்டத்திலேயே உருவானது, உருவாக்கப்பட்டதும் கூட!

ஆச்சரியந்தானே ?

ஆமாம்; ஆச்சரியந்தான்!

ஏன், தெரியுமா ?

குழந்தை என்றாலே, அதுவே ஓர் ஆச்சரியம்; ஒரு பேராச்சரியம்! விஞ்ஞான யுகம் இது!—விஞ்ஞானமும் அதிசயிக்கத் தக்க மகா ஆச்சரியம் அல்லவா குழந்தை என்னும் விதி ?

**லக்ஷ்மியின் வழியில், வழி மாறும் இருவர்:**

இந்நேரத்தில் எதார்த்தமானதோர் உண்மை நடப்பையும் நாம் உணர்வது நலம் பயக்கும்; அதாவது இந்தக் குழந்தைப் பிரச்சினையை கருவின் மையப்புள்ளி யாக்கி முதன் முதலில், அதாவது, முன்னே குறிப்பிட்ட 1979 காலப்பிரிவில் கதையை உருவாக்கிய முதற் காளாஞ்சி மரியாதை நாவலாசிரியை 'லக்ஷ்மி'யைத் தான் சார வேண்டும்!—'அவள் தாயாகிறாள்!' என மகுடம் தரித்தாற் போன்று அசலானதும் அருமையானதுமான பண்பாடு நிரம்பிய தமிழ் நவீனம் ஒன்றை மிக நவீன மாகப் படைத்தார் லக்ஷ்மி !—திலகா, தமிழைப் போலே, சிறப்பானவள் ஆயிற்றே ?

லக்ஷ்மியின் வழித் தடத்தைத் தடம் ஒற்றி நடக்க முயன்ற சிவசங்கரி என்கிற மற்றொரு தமிழ் எழுத்துத் தங்கச்சி சிவசங்கரி கால் வைத்த இடத்திலேயே மயங்கித் தடுமாறிப் பாதை மாறி, பால் மாறி நடந்ததன் கெட்ட விளைவெனத் தயாரானது தான் 'ஒரு சிங்கம்

முயலாகிறது' என்னும் கதை; இது, பின்னர் 'அவள்—அவன்—அது!' என்ற 'புரட்சிகரமான'பெயருடன் தமிழ்த் திரையில் 'டான்ஸ்' ஆடத் தொடங்கின சடுதியிலேயே, டப்பாவுக்குள் சரணடையவும் நேர்ந்தது. சிவசங்கரியின் இனக் கவர்ச்சி நாயகியான மேனகா முதல் எண் கொண்ட தாசி!

இடைநடுவிலே, இந்துமதியின் 'மணல் வீடுகள்' மூலம் சனி என்னும்படியான மற்றொரு வேசியும் அறிமுகமானாள்; அம்பலமானாள்!

குழந்தையைக் கதைக்குக் கருவாக்கி தெய்வ பக்தியுடன் படைத்த பண்பட்ட, பண்பாடு கொண்ட நாவலாசிரியை 'லக்ஷ்மி'யின் 'அவள் தாயாகிறாள்!' கதை தான் அன்றும் உயர்ந்து நின்றது; இன்றும் உயர்ந்து நிற்கிறது!— உயர்ந்த சிந்தனையாளரின் எழுத்துக்கள் பொறுப்பு மிக்க சமுதாய மக்களுக்கு மத்தியில் அக்கறையுடன் உயர்ந்து விளங்குவது நியாயம்.

வேலியோரத்துப் பூக்கள் கண்ணைக் கவரலாம்; ஆனால், கருத்தைக் கவருவது இல்லை.

செல்லாக்காசுக்கு நாணய மதிப்போ, நாணயமான அந்தஸ்தோ எப்படிக் கிட்ட முடியும் ?

அரவிந்தச் செல்வராம் அமரர் பி. கோதண்டராமன், "உண்மையை வணங்குவோம்; உண்மையின் ஓர் அங்கமான ஒழுக்கத்தையும் வணங்குவோம்." என்பதாகத் தமது 'இலக்கியமும் விமரிசனமும்' என்னும் நூலில் எடுத்துரைத்திருந்ததை எப்போதும் நான் வணக்கத்துடன், பொறுப்புடன் எண்ணிப் பார்ப்பேன்:

பாவம், இந்துமதி...!

# 7. உறவைத் தேடும் பறவை :

## அனுராதா ரமணன் :

**அறிமுகம் ஒன்று :**

*குமுதத்துக்கு மட்டிலுமே உறவு பூண்ட மூன்றெழுத்துக்கள் இவை— எஸ். ஏ. பி: அவர் அன்புக்குகந்த எழுத்துத் தங்கையை அறிமுகம் செய்துவைக்கும் பணியும் முறையும் இங்ஙனம் அமைகிறது: "...இவரது முதற் சிறுகதை 1977ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 'மங்கை' இதழில் வெளிவந்தது; 1978ல் 'இதயம் பேசுகிறது' பத்திரிகை நடத்திய வாசன் நினைவுச் சிறுகதைப் போட்டியில் இரண்டாவது பரிசாகத் தங்கப் பதக்கம் பெற்றார்; 1980ம் ஆண்டில் 'ஆனந்த விகடன்' பொன் விழாச் சிறுகதைப் போட்டியில் முதற்பரிசாக ரூபாய் பத்தாயிரம் பெற்றார்; ஓவியத்தில் முறைப்படி 'டிப்ளமா' வாங்கியுள்ள இவர் ஒரு பத்திரிகையில் 'லே—அவுட்' ஓவியராகவும் பணியாற்றியுள்ளார்; தமிழ்நாட்டில் பல இடங்களிலும் ஓவியக் கண்காட்சி, ரங்கோலி கண்காட்சிகள் நடத்திப் பல பரிசுகள் வாங்கியிருக்கிறார்; இவருக்கு இரண்டு பெண் குழந்தைகள் இருக்கிறார்கள்!..."*

*உறவைத் தேடும் பறவையான பாலா என்கிற அசல் தமிழ்க் குலப்பெண்ணை அறிந்து கொள்ளுவதற்கு முன்னதாக, பொது வாழ்க்கையில் பெண் ஒருத்தியின்*

பொதுவான நிலை என்ன, நிர்ணயம் என்ன என்பதைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும்.

பாரதம்—பாகிஸ்தானம் போரின் சூழலை அடிநாத மாக்கித் 'தாய்மண்' என்ற பெயரில் பெருங்கதை ஒன்றை எழுதினேன்; அதன் முன்னுரைப் பக்கங்களில், வாழ்க்கையின் தவநிலை பற்றியும் பெண்ணின் காதல் நிர்ணயம் குறித்தும் சிந்திக்க வேண்டிய சூழல் உருவாயிற்று. இப்படி நான் எண்ணமிட்டேன்:

"...பெண் ஒரு புதிரல்லள்; அவள் ஒரு புதுமை.

தெய்வம் ஒரு புதுமையல்ல; அது ஒரு புதிர்.

குழந்தை ஒரு கனவல்ல; அது ஒரு வாழ்க்கை.

அன்பு ஒரு சோதனையல்ல; அது ஓர் உண்மை.

சத்தியம் ஓர் ஆணையன்று; அது ஒரு தருமம்.

இலட்சியம் ஓர் எல்லையல்ல; அது ஓர் ஆன்மா.

காதல் ஒரு விளையாட்டு அல்ல: அது ஒரு சாதனை.

வாழ்வு ஒரு பிரச்னையல்ல; அது ஓர் உன்னதம்..."

இன்றையக் கதாசிரியையான அனுராதாவுக்கெனவே அன்றைக்கே நான் இப்படிச் சிந்தித்தேனோ, என்னவோ...?

பிறவி என்னும் கடனைச் செய்து முடிக்க வேண்டிய மனிதத் தருமத்தின் கட்டுப்பாட்டுக்கு, வாழ்க்கை ஓர் ஆதார பீடமாக அமைகிறது; மனிதாபிமானம் கொண்ட மனித மனம் இவ்வாழ்க்கைக்கு ஓர் ஆதார சுருதியாகக் குரல் கொடுக்கிறது.

இத்தகைய மானுட வாழ்க்கைக்கு உகந்த காலம் குறைவு; ஆனால், கனவுகளோ கூடுதல்.

குறைவான காலத்தின் எல்லைக்குள்ளேதான் கூடுதலான கனவுகள் அழகு காட்டி ஆரவாரம் செய்து அலைக்கழிக்கவும் செய்கின்றன.

ஆகவேதான், விளையாட்டுக் கேந்திரமாக ஆக வேண்டிய இந்த வாழ்க்கை, இந்த மண்ணுலக வாழ்க்கை, ஒரு சோதனையாகவும், போராட்டமாகவும் ஏன், ஒரு போராகவும் கூட அமைந்து விடுகிறது.

வாழ்க்கையோடு மனிதன் விளையாடவும், மனித னோடு வாழ்க்கை விளையாடவும் வேண்டிய நிர்ப்பந்த நியதியிலே, இவ்விளையாட்டுக்கான விதியை, வெற்றி தோல்வி என்னும் முதலும் முடிவுமான ஒரு வினைவிதியை வரம்பறுத்துக் காட்டித் தீர்ப்பை வழங்கிடும் முதல் உரிமையும் கடைசி உறவும் பூண்டவன் 'அவன்'; அலகிலா விளையாட்டுடையான் அவன். 'அவன்' இந்த மனித னுக்கு முதன் முதலாகக் காண்பிக்கிற காட்சிகள் இரண்டு! ஒன்று: தாய். அடுத்தது, மண்.

ஆமாம்; பெண்தான் தாய்!—தாய்தான் பெண்!

பெருமையும் பெருமிதமும் இரண்டறக் கலந்திட்ட அருமைமிகு தமிழ் மண்ணைத் தேடிப் பிறந்திட நற்பாக்கியம் செய்தவள் பாலா!

பாலா தமிழ்ப்பெண்; நல்லவள்; வல்லவள். தமிழ்ச் சமுதாயத்தின் நடைமுறை வாழ்க்கைக்கு அவள் மேற் கொண்ட, மேற்கொள்ள நேர்ந்த அவளுடைய வாழ்க்கையே ஒரு சோதனையாக மட்டுமல்லாமல், ஒரு சாதனையாகவும் அமைய நேர்ந்து விடுகிறது! இது, அவள் விதியல்ல!—அவள் விதித்த விதி!—இல்லை யெனில், நல்லவளான அவளுக்குப் பொல்லாதவனான ஜெகன் கணவனாக வாய்த்திருப்பானா?

பாலா சௌபாக்கியவதி.

அவள் சுகந்தத்தின் நித்திய மல்லிகை.

புனிதத்தின் பாரிஜாதம் அவள்.

அனுராதாவின் அன்புக்கும் பாசத்துக்கும் பரிவுக்கும் அனுதாபத்துக்கும் பாத்திரமாகிறாள் இந்தப் பாலா.

பாலா பட்ட பாடுகள் கொஞ்சமா, நஞ்சமா ?

பாலாவுக்கெனக் காத்திருந்த அக்கினிப் பரீட்சைகள் ஒன்றா, இரண்டா ?

பாலாவுக்கென்றே தவம் கிடந்த போராட்டங்கள் அற்பமா, சொற்பமா ?

பாலா தமிழ்ச்சாதிப் பெண் ; ஆகவேதான், அவள் தன்னை எதிர்கொண்ட சோதனைகள் எல்லாவற்றையும் சமாளித்தாள்.

பாலா ஒரு தமிழச்சி ; எனவேதான், அவள் தமிழ்ப் பண்பு என்னும் பாரம்பரிய நெறிமுறையையே தன் உயிராகவும் தனது உயிர்ப்பாகவும் கொண்டு ஒழுகினாள்.

பாலாவின் கதை சிறிது ; ஆனாலும், அவள் கதையின் சோகம் பெரிது.

உண்மைதான் ! பாலா நல்லவள் ; நல்ல பெண்மணி.

**ஒரு பறவையின் ஒரு கதை !**

உறவைத் தேடும் பறவையின் கதையை இப்போது நான் சொல்ல வேண்டும்.

கேளுங்கள் :

பாலா வானம்பாடியாகத் தான் பிறக்கிறாள் ; வளர்கிறாள் ; பருவம் அடைகிறாள் ; மண வினையும் வாய்க்கிறது. ஆனால் வாய்த்த மணவினை, மணம் இழந்து, வெறும் வினையாக மாத்திரமே அவளை வாழ்த்த வேண்டிய துர்ப்பாக்கியம் அவளுக்கு விளைகிறது ! அவளுக்குக் கணவனாக வாய்த்த ஜெகன் என்கிற பொல்லாதவன் ஒருவனால் அவளுக்கு வந்த வினைகள்—வாய்த்த கெட்ட பெயர்கள் எத்தனை எத்தனை !

பாவம், பாலா !—அவள் எல்லாப் பெண்களைப் போலவே, ஒரு குழந்தைக்காகவும் ஏங்குகிறாள்.

தெய்வம் அவளுக்கு இரங்கவில்லை.

பாலாவுக்கு மருத்துவப்பணிப்பெண் வேலை. அங்கேயும் அவளுக்கு அவப்பெயர் ஏற்படுகிறது ; வீட்டிலும் அவளுக்குக் கெட்ட பெயர் உண்டாகிறது !—எல்லாவற்றிற்குமே அவளுக்குக் கணவனாக வாய்த்த ஜெகன்தான் மூலகாரணம் ஆகிறான்.

ஒரு நாள் :

கிழவர் ஒருவருக்கு ஊசி போட வேண்டிய பொறுப்பை தலைமை டாக்டர் நர்ஸ் பாலாவிடம் ஒப்படைக்கிறார். அப்போதென்று. சனியன் மாதிரி அவளுக்குத் தாலி பூட்டிய ஜெகன் ஓடோடி வந்து நூறு ரூபாய் கேட்கிறான். பாலாவுக்குத் தன் சிநேகிதிகளிடம் கடன் கேட்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படவே, கிழவருக்கு ஊசி போட வேண்டிய பொறுப்பைத் தன் சக நர்ஸ் ஒருத்தியிடம் ஒப்படைக்க வேண்டிய சூழல் உருவாகிறது. அந்தச் சூழலில் விதி சிரிக்க, வினையும் சிரிக்கிறது !— அசல் ஊசி மருந்து

கைமாறுகிறது. பிழைக்க வேண்டிய கிழவரின் உயிர் அடங்கி விட நேர்கிறது!— இதன் எதிர்ப் பலனாகவே, பாலாவின் மருத்துவப் பணிப் பெண் பணிக்கும் சோதனை ஏற்பட்டுவிடுகிறது! — ரூபாய் பத்தாயிரம் நஷ்ட ஈடு கொடுத்தால் தான் அவளது உத்தியோகம் நிலைக்குமென்ற ஆணை மேலிடத்திலிருந்து வருகிறது. பாவம், அவள் அவ்வளவு பெரிய தொகைக்கு எங்கே போவாள்? யார் யாரையோ கெஞ்சுகிறாள்! பலன் இல்லை! —பாவம், அவள்— பாலா தடு மாறுகிறாள்; தத்தளிக்கிறாள்; உருகுகிறாள்; உருக்குலைகிறாள்!

இந்நிலையிலேதான் அந்த மருத்துவமனையில் துரைபாண்டி என்கிற முரடன் ஒருவன் சிகிச்சைப் பெற்று வருகிறான். அவனுக்கும் கண்டிப்பு நிறைந்த பாலாவைப் பிடிப்பதில்லைதான்.

அன்பு மனம் படைத்த, ஆனால், கடமையில் கண்டிப்புமிக்க பாலா கவரிமான்; மானம் பறி போக ஒப்பாமல், ஓர் இரவில் உயிரை மாய்த்துக் கொள்ளவும் தயாராகிறாள். அன்றிரவுதான் அவளுக்கு கடைசி இரவு; பணி முறையில் அதுவே அவளுக்கு இறுதி நாள்!

கடமையின் கடைசி நேரத்திலாவது, நோயாளிகள் எல்லோரிடமும் அன்போடும் பரி வோடும் நடந்து கொள்ள வேண்டுமென்ற நினைப்புடன் நோயாளிகளிடம் அன்பு பாராட்டு கிறாள் பாலா.

உடல் நோயின் தீவிரம் காரணமாக, அறுவைச் சிகிச்சையில் கைகளை இழக்க வேண்டிய அவல நிலைக்குத் தயாராகும் துரைப் பாண்டி கைகளைக் குவித்து பாலாவையும் கும்பிடு கிறான்: "நான் நிறையப் பாவம் செஞ்சவன்;

என் திமிருக்கு ஆண்டவன் கொடுக்கிற தண்டனை இது. அதான், கை இருக்கிறப்பவே, முடிஞ்ச அளவுக்குக் கும்பிட்டுடலாம்னு—" விம்முகிறான்; வெடிக்கிறான்.

பாலாவின் அன்பு அதிர்கிறது; பாசம் சிலிர்க்கிறது. இது நாள் வரையிலே, அன்பு செலுத்த ஒரு குழந்தை இல்லாத ஏக்கம், இன்று, இந்த முரட்டுக் குழந்தையின் அழுகையிலே கரைந்து விட்டதோ? அந்தக் கணத்தில், துரை பாண்டியின் பேச்சு, கண்ணீர், அவன் அவளைக் கும்பிட்ட பாவனை எல்லாம் அவள் மனத்திற்குள் புகுந்து மந்திரஜாலம் செய்கின்றன! "துரை, உணர்ச்சி மரத்துட்டா என்ன? இப்ப மனசு மரத்துப் போகாமல் பார்த்துக்கங்க. நெஞ்சிலே ஈரமும் கனிவும் இருக்கணும். பாசமும் பரிவும் இருக்கணும். அதெல்லாம் இல்லாம, மரத்துப் போயிட்டாத்தான் கஷ்டம், துரை, இனிமே நான் உங்களை வா, போன்னுதான் கூப்பிடப் போறேன். ஏன்னா, அம்மா தன் குழந்தையை மரியாதை கொடுத்துக் கூப்பிட்டதில்லை. இதுவரைக்கும் நீ என் பிள்ளை; கையில்லாத பிள்ளை. ஆனா, மனசிலே அன்பு இருக்கிற பிள்ளை!" என்கிறாள்.

பிரமிக்கிறான் துரைப்பாண்டி.

இரண்டு பெண்டாட்டிக்காரனான துரைப் பாண்டி இப்போது நர்ஸ் பாலாவின் அன்புப் பிள்ளை அல்லவா?

இனிமேல், பாலா சாவதற்குத் தயாராகவே மாட்டாள்!

ஒருநாள் ஓர் அதிசயம் நிகழ்கிறது.

பாலாவின் பணிக் கடனுக்குச் சோதனையாகவும் சவாலாகவும் அமைந்த பத்தாயிரம் ரூபாய் துரைப் பாண்டி மூலம் அவளைச் சோதிக்கவும் முனைகிறது ; பெறாத மகனின் வற்புறுத்தலால், அவன் தந்த பணத்தைக் கடனாகவே பெற்றுக் கொள்கிறாள்.

திருந்திக் கொண்டிருந்த முரடன் துரைப் பாண்டி அன்புத் தாயான பாலாவின் சொந்தக் கதை முழுவதையும் அறிவான் ; ஆகவே, திருந்தாத, திருத்த முடியாத ஜெகனைப் பற்றித் தீரத் தெளியவே அவன் அறிந்தான்.

ஆனால்...

மாறாததும் மாற்ற முடியாததுமான துல்லியமான, பரிசுத்தமான, பவித்திரமான, அன்பையும் பாசத்தையும் ஓர் உண்மையான தாயின் உயர் பீடத்தில் இருந்து துரைப் பாண்டிக்கு வாரி வாரி வழங்கிக் கொண்டிருக்கும் நர்ஸ் பாலாவுக்கு—துரைபாண்டியின் அன்னையாம் பாலாவுக்கு இவ்வகையிலும் ஏச்சுக்களும் பேச்சுக்களும் பழிகளும் அபவாதங்களும் வந்து குவிகின்றன. தாலி கட்டின புண்ணியவான் ஜெகனே நாக்கில் நரம்பின்றி, தாலி ஏந்திய ஏந்திழை பாலாவை ஏசிப் பேசவே. அவள் அவ்வீட்டிலிருந்து விடுதலை பெறத் தீர்மானிக்கிறாள். கைகளை இழந்ததால் ஆதரவற்றுப் போயிருந்த துரைப்பாண்டிக்காகச் சிறிய இடமொன்றை நர்ஸ் மேரியின் உதவியால், ஏற்பாடு செய்கிறாள்.

இப்போது துரைப்பாண்டிக்கு நிரந்தரத் தாய்த் துணை, பாலாதான்.

பாலாவிற்கு நிரந்தரமான மகன் துணை துரைப்பாண்டிதான் !

இந்நிலையிலும், அவர்கள் இருவரையும் சமூக விதியும் சமூக வீதிகளும் சும்மா விட்டு வைக்குமா, என்ன ?

பாலாவை ஜெகன் பூச்சாண்டி காட்டு கிறான் !

பாலாவிடமா இந்தச் சம்பமெல்லாம் சாயும் ?

ஒரு நாள், பாலாவின் மாமியும் ஜெகனின் தாயுமான சிவகாமு அவள் குடும்பத்தினரால் பாலாவிடம் பணம் கேட்க அனுப்பி வைக்கப்படு கிறாள். அங்கே, சிவகாமு அன்பின் மகோ தன்னதங்களைத் தரிசிக்கவே, அங்கேயே நிலைத்து விடுகிறாள்.

ஜெகன் பல காலம் கழித்து நொண்டியாகப் பாலாவின் திருச்சந்நிதியில் சரணடைகிறான். ஆனாலும், அவன் எச்சில் புத்தி அவனை விட வில்லை: பாலாவின் நிழலில் அண்டி ஒண்டும் பாக்கியத்தை விதி அவனுக்கு வழங்க மறுத்து விடு கிறது.

விதவைக் கோலம் ஏந்திய சிவகாமு தன் அருமை மருமகளிடம் சொல்கிறாள் : "இனி மேலும் அவன் ஜெகன் வந்தால், எந்த ஒரு நிலை யிலே இருந்தாலும், இரக்கம் காட்டாதே, பாலா! இப்படி ஒரு விஷப் பாம்பைப் பெத்ததுக்காக நான் ரொம்ப வெட்கப்படறேன், அடுத்த பிறவி யிலாவது, கடவுள் எனக்கு நல்ல குழந்தை களைக் கொடுக்கட்டும்..." இந்தக் கடைசி வார்த்தைகளுடன் சிவகாமுவின் உயிர் யாத்திரை யும் கடைசி முற்றுப்புள்ளி ஆகிறது !

இனிமேல், மாமி சிவகாமுவைப் போல் ஓர் உண்மையான உறவைப் பாலா தன் ஆயுசுக்கும் பெறப் போவதில்லை !

**சோதனைக்கு ஒரு நாயகி :**

கதை நிதர்சனம் நிரம்பியது; எதார்த்தம் நிறைந்தது.

சோதனைக்கு ஒரு விதியாகவும், விதிக்கு ஒரு நாயாகவும், வாழ்க்கைக்கு ஓர் அபலையெனவும், அன்பின் பாசத்துக்கு ஓர் அன்னையெனவும் வாழ்ந்த—வாழ்கின்ற பாலா அருமையானதொரு குணச் சித்திரம்.

கரு இன்றேல் தாய் இல்லை.

அது மாதிரி—

கரு இல்லையேல், கதை இல்லைதான்.

இங்கே—

அனுராதா ரமணன் சிந்தித்துப் பயனுறப் படைத்துள்ள நீள் கதையில் கருவும் இருக்கிறது. கதையும் இருக்கிறது. இரண்டும் படிப்பவர்களுக்குப் பயனளிப்பதாகவும் அமைந்துள்ளன. இப்பணியில்தான் கதாசிரியையின் சிறப்பும் அச்சிறப்பு அங்கீகரித்துப் பிரகடனப் படுத்தியுள்ள வெற்றியும் அடங்கியும் உள்ளடங்கியும் உள்ளன என்றும் சொல்லலாம். தமிழ்ச் சமுதாய மக்களுக்கு நல்வழிகாட்டவல்ல கதையின் சிறப்பும் இளைய பாரதச் சமூகத்தினருக்கு அறிவித்துள்ள போதனையின் வெற்றியும் பாலாவின் ஆளுமையில் 'ஒற்றைத் தனித் திகிரி' யெனத் தனித்து நின்று, அனுராதாவிற்கு நியாயமான நல்ல பேரைச் சம்பாதித்துக் கொடுத்திருக்கின்றதென்றும் கூறலாம். உடன் பிறவாத எழுத்துத் தங்கையான அனுராதாவின் இந்தப் படைப்பு எனும் காரியத்துக்கும் பெண்மையின் தாய்மைப் பண்புதான் காரணம் ஆகிறது. காரணம் இல்லாவிடில் காரியம் இருக்க முடியாதென்பது வாதமுறைமை அல்லவா? தாயைப் போலே பிள்ளை என்போம்!—அனுராதா முன்மாதிரியான நல்ல அம்மாவாக விளங்குவதால்தான், அனுராதாவின்

படைப்பின் குழந்தையான பாலாவும் நல்ல புதல்வியாக 'உறவைத் தேடும் பறவை'யில் பளிச்சிட முடிகிறது.

பாலாவை மனம் நெகிழ எண்ணிப் பார்க்கிறேன்!— திரும்பத் திரும்பத் திரும்பிப் பார்க்கிறேன்!— அவளுடைய தியாக நிழலிலே நெருங்கக் கூட இந்துமதியின் சஸியும் சிவசங்கரியின் மேனகாவும் அருகதை இழந்து, அதோ, 'கடலே கதி'யென்று எங்கேயோ தொலை தூரத்தில் தலை தெறிக்க ஓடிக் கொண்டேயிருக்கிறார்கள்!"...

ஐயமில்லை! - சிவசங்கரியும் இந்துமதியும் அனுராதாவைப் போலவே அசல் பெண்கள்தாம்!—ஆனால், இவ்விரண்டு பேர்களும், அதாவது, இரண்டு பேர்' என்னும் குமுதமான 'செக்ஸ்' கூட்டுறவுக் கதைத் தயாரிப்பாளர்களான இந்துமதி, சிவசங்கரி எனப்படும் இவ்விரண்டு பேர்களும் கவர்ச்சிகரமாக ஒப்பனை செய்து பொது மக்கள் மத்தியிலே பொதுவுடைமைப் பொம்மைகளாக விளையாட விட்டிருக்கின்ற சஸி மற்றும் மேனகா ஆகிய தாசிகளிடம் எஞ்சியும் மிஞ்சியும் கிடக்கின்ற குறிக்கோள் தன்மை (Ideal Self) முரண்பட்ட விபசாரத்தை நியாயப்படுத்தும் ஈனத்தனமான அநியாயமாகத் தானே அமைந்திருந்தது?—ஆனால், அனுராதாவின் கதையில் பூவின் மணமாக நிறைந்திருக்கும் குறிக்கோள் தன்மையில், உன்னதம் பெற்ற ஒரு தாயின், குழந்தைப் பாக்கியம் கிட்டாத ஓர் அபலைத் தாயின் உண்மையான பாசம் அவளது அளப்பரிய சோகங்களையெல்லாம் மீறிக் கொண்டு நுங்கும்நுரையுமாகப் புது வெள்ளமென அன்புடன் பிரவாகமெடுத்து ஓடவில்லையா?

அனுதாபத்துக்கு உகந்த பாலா சொல்வாள்: இரண்டு பெண்டாட்டிக்காரனான துரைப்பாண்டி என்கிற வளர்ப்புப் பிள்ளையைக் குறித்துச் சொல்லுவாள்; "டாக்டர் நான் துரையைக் கல்யாணம் பண்ணிக்கப்போறதில்லே. ஹி இஸ் மை ஸன்; என்ன பார்க்கிறீங்க? அவன்

என்னோட குழந்தைதான்! இப்ப அவனுக்கு ஒரு தாயோட அன்பும் அரவணைப்பும் தேவை. எனக்குப் பாசத்தைக் கொட்ட ஒரு மகன் தேவை. அதுக்கு என்ன செய்யறது? எனக்கே இன்னம் ஒரு பத்து வயது கூடுதலா இருந்து, இல்லாட்டி அவனுக்கு ஒரு பத்து வயசு குறைச்சலா இருந்தா, இந்த உறவை அசிங்கமா நினைக்க மாட்டீங்களோ, என்னவோ? கொஞ்சம் வயசான குழந்தையை யாரும் தத்து எடுத்துக்கறதில்லையா? துரை குழந்தைதான்! இந்தக் குழந்தைக்கு வேளாவேளைக்குச் சோறூட்டி குளிப்பாட்டி, தலைசீவி எல்லாமே அம்மாதான் செஞ்சாகணும். இந்தக் குழந்தைக்கு நாளாக ஆக, அம்மாவோட கவனிப்பு அதிகமாக வேண்டியிருக்குமே தவிர, குறையப் போறதில்லே. ஆமா, டாக்டர் இன்னும் நாலஞ்சு மாசத்துல இவன் காதுல ஒண்ணையும் எடுத்தாகணும்னு நீங்க தானே சொன்னீங்க? இப்படிப்பட்ட ஒருவனைக் கலியாணம் செஞ்சுக்கிட்டோ, காதலிச்சோ செய்ய முடியாத உதவியை, ஒரு தாயாலேதான் செய்ய முடியும்னு நினைக்கிறேன். இவனுக்காக நான் செய்யற ஒவ்வொரு காரியத்தையும் என் வயித்திலே பிறந்த குழந்தைக்காகச் செய்யறதாத்தான் நான் நினைக்கிறேன். எதையும் நான் பளுவா நினைக்கல்லே. நான் சம்பாதிக்கறது கூட அவனுக்காகத்தான்!..."

பாலாவின்—நர்ஸ் பாலாவின் ஆழ்ந்த தாயன்பை, உறவுக்காக ஏங்கும் உள்ளத்தின் குமுறலை முழுப் பதிவாகவும் முழுமையான பதிப்பாகவும் சமூகத்துக்கும் சமூக மக்களுக்கும் வெளிப்படுத்த, மேற்கண்ட உள்ளத்தோடு உள்ளம் ஒன்றிய—ஆத்துமார்த்தமான—புனிதமான உறவின் பாற்பட்ட பாசத்தின் மனிதாபிமானப் பரிவுமிக்க இதய ஒலி வெகுவாகவே உதவுகிறது!— இவ்வுதவி, இளைய பாரதத்தினருக்குப் பரிசுத்தமான உணர்வுகளின் தூண்டுதலாகவும் அமையக்கூடும்; இத்தூண்டுதலில் பயன் தரும் நல்லொழுக்கப் படிப்பினை

ஒப்பற்ற சமுதாயச் சேதியாகவும் ஒலிக்கும்; எதிரொலிக்கும்.

ஓர் ஆதரிசத் தாயாக மாறும் பண்பும், மாற வேண்டிய பக்குவமும் சித்திக்கப் பெற்ற இதே பாலா தானே நல்லதொரு தமிழ்க் குடும்பத்தின் நல்ல குல விளக்காகவும் விளங்கினாள்?—ஆனால், இதே பாலாவேதான் பின் ஒரு சமயத்தில் ரோஷம் மண்டிய தமிழச்சியாக உருக்காட்டவும் ஒரு படலம் விரிகிறது!—இது மாயவிதி விரித்த சிலந்தி வலையல்ல; பாலாவைக் கட்டிக்கொண்ட ஜெகன் என்ற அயோக்கியன், கொண்டவளை—உயிர் கொண்டவளை வாய்க்கு வந்தவாறு ஏசிப் பழி சுமத்தினால், தெய்வத்தின் திருவுள்ளத்திற்கு அடுக்குமா, என்ன? தெய்வம் மிரண்டால், உலகம் கொள்ளுமா?—பெண் தெய்வம், மனிதத் தன்மை மாறாமல் புயல் ஆகிறது; எரிமலை ஆகிறது.

துரோகியான தன் துணைவன் ஜெகனது கெட்ட சகவாசங்கள் அத்தனையையும் கண்ணுக்குக் கண்ணாகக் கண்டு, அவனை இனிமேல் சத்தியமாகத் திருத்தவே முடியாதென்கிற ஒரு துயர முடிவுக்கு வந்த பின், இவனால் ஒரு பிரஜையை உருவாக்குவதை விடப் பெரிய தேசத் துரோகம் எதுவுமே இல்லை என்னும் ஒரு கடைசி முடிவுக்கும் என்றைக்கோ வந்து விட்டவள் பாலா!—நிழலுக்கு அண்டும் குடும்பத்து மனையிலும், பணிக்கு ஒண்டும் மருத்துவமனையிலும் வீணான, பொய்யான, பாவமான பழிகளைச் சுமத்திய கணவனையும், கணவனைச் சார்ந்திருந்த அவனது உற்றார் உறவினர்களையும் துறக்கவும் வேண்டிய சூழலுக்கும் ஆளானாள்.

அவ்வீட்டை விட்டுத் தான் வெளியேறப் போகும் விவரத்தை வீட்டாரிடம் வெளியிடுகிறாள் பாலா: "இன்னியிலேருந்து நான் தனியா வீடு பார்த்துக்கிட்டுப் போகப் போறேன். இனிமே எனக்கும் இந்தக் குடும்பத்துக்கும் எந்தவிதச் சம்பந்தமும் கிடையாது; இதைச்

சொல்லத்தான் வந்தேன். சொல்லாமல் கொள்ளாமல் ஓடிப் போயிட்டதா எனக்குப் பேர் வரக்கூடாது, பாருங்க!"

அவ்வளவுதான்.

ராமையா குதிக்கிறார்.

ஜெகன் அவளை அறையக் கை ஓங்கியபடி அவள் பேரில் பாய்கிறான்.

பாலா குடையால் தடுத்து நிறுத்துகிறாள்: "இனிமே என்னை அடிக்கிறதுக்கு உங்களுக்கு உரிமை இல்லை. என் மேலே கை வச்சீங்கன்னா, போலீசுக்குக் கம்ப்ளெயின்ட் கொடுத்திடுவேன்," என்கிறாள்.

அதிர்ச்சி அடைகிறான் ஜெகன்: 'என்னடி சொன்னே?"

பாலா நிதானமாகவே ஆரம்பிக்கிறாள்: "உஷ், அநாவசியமாய்க் கத்தாதீங்க. எனக்கும் உங்களுக்கும் நடுவிலே என்ன பந்தம் இருக்கு? சொல்லுங்க பார்க்கலாம் நீங்க என் கழுத்திலே தாலி கட்டினதைத் தவிர, உருப்படியா என்ன காரியம் எனக்காக இதுவரைக்கும் செஞ்சிருக்கீங்க? ஒரு நாள், ஒரேயொரு நாள்கூட என்னைத் தலைநிமிர்ந்து வாழவிடலை ஆஸ்பத்திரியில் தான் ஆகட்டும்; இந்தத் தெருவில்தான் ஆகட்டும், எனக்கு எத்தனை கெட்ட பேரு! எல்லாம் யாராலே? தப்பே செய்யத நான் எதுக்காக விபச்சாரிங்கற பட்டப் பேரைச் சுமக்கணும்? உண்மையிலேயே, நீங்க என் கஷ்டத்தைப் புரிஞ்சுக்கிட்டிருந்தீங்கன்னா, இப்படி ஒரு இக்கட்டு வந்ததுக்காக நீங்க வருத்தப்பட்டிருந்தீங்கன்னா, 'பாலா, நான் செஞ்சது தப்புதான்'னு ஒரு தடவையாவது மனம் வருந்திச் சொல்லியிருந்தீங்கன்னா, அந்தப் பட்டத்தைக் கூட நான் சந்தோஷமாச் சுமப்பேன். என் புருஷனுக்கு என்னைப் பத்தித் தெரியும். ஊர் என்ன பேசினா

என்னான்னு தலைநிமிர்ந்து நடந்திருப்பேன். ஆனா, போயும் போயும் ஒரு அயோக்கியனை, ஒரு துரோகியைப் புருஷனா அடைஞ்ச நான் அனாவசியமா இப்பேர்ப்பட்ட கெட்ட பேரை வாங்கிக்க விரும்பலே! போதும். நான் என் வழியிலே போறேன். இனிமே நீங்க வெளியிலே வாங்கற கடனுக்கோ, நீங்க செய்யற அக்கிரமங்களுக்கோ, நான் பொறுப்பாளி இல்லே. என் சம்பளத்திலே ஒரு பைசாகூட இந்தக் குடும்பத்துக்கு இனிமே தரவே முடியாது!..."

மருத்துவ மனையில் கைகள் இரண்டையும் இழந்து ஒற்றைத் தனிநபராக ஆதரவற்று ஏங்கி நின்ற துரைபாண்டி என்னும் மதயானைக்கு இரண்டு பெண்டாட்டிமார்கள் இருந்தும், ஏராளமான சொத்துக்கள் இருந்தும், அவர்களால் அவன் ஒதுக்கப்பட்டுவிடும் சோகநிலை உணர்ந்த நர்ஸ் பாலா அவனுடைய முரட்டுத் தனத்தையும் மீறிய அன்பின் பாசத்தால் நெகிழ்ச்சி அடைந்து, பிள்ளைக்காகத் தவம் கிடந்த தன் கலியைப் போக்கிக் கொள்ளவும், பாசத்தின் அன்பு இல்லாத தன் கணவனிடமிருந்து விடுதலை பெறவும் துடித்து, கடைசியில், அந்தத் துரைபாண்டிக்கு அன்பின் நிழல் ஆக உருமாறத் துணிகின்ற மேற்கண்ட இருவேறு சந்தர்ப்பங்களிலும் பாலாவின் பாத்திரப் படைப்பு வெகு இயல்பாகவும் சிறப்பாகவும் அமைந்து விட்டது. மேலும் அப் பாத்திரம் முழுமை பெற்றும் ஒலி கூட்டுகிறது; ஒளி காட்டுகிறது!

அனுராதாவைப் பொறுத்தமட்டில், பாலா 'ஆகி வந்த' ஒரு படையல்!

குழந்தைப் பிரச்னைதான் 'உறவைத் தேடும் பறவை' கதையிலும் ஜீவனாக அமைகிறது. ஆனாலும், சிவசங்கரி, இந்துமதி ஆகிய இரண்டு ஆசிரியைகட்கும் இல்லாத சமூகநலப் பொறுப்பின் நல்லெண்ணம் அனுராதாவிடம் அமோகமாகவே அமைந்து விட்டது.

அனுராதாவை வாழ்த்துவோம்! 

# 8. பத்ரகாளி !

## 'மகரிஷி' :

**பண்புமிக்க மகரிஷி**

நமது அருமைத் தமிழ்ச் சமுதாயம் புனிதம் நிரம்பின கோயிலுக்குச் சமம் ; ஆகவேதான், அது வணக்கத்துக்கு உரித்தானதாகவும் விளங்குகிறது.

சமுதாயத்தில் அங்கம் வகிக்கின்ற மக்கள் அந்தச் சமுதாயத்தை வாழ வைக்கும்போது, சமுதாயத்தின் வாழ்த்துக்கள் அச்சமுதாயம் சார்ந்த மக்களுக்குக் கிடைக்கின்றன ; அதுபோலவே, சமுதாயம் தன் மக்களை வாழ்விக்கும்போது. சமுதாய மக்களின் வாழ்த்துக்கள் அச் சமுதாயத்துக்குக் கிடைக்கவும் செய்கின்றன !— ஒன்றுக்கொன்று தொடர்பானதும், ஒன்றிலொன்று தொடர்புடையதுமான இத்தகைய இணைப்பும் பிணைப்பும் சமுதாயத்திற்கு மட்டுமின்றி, சமுதாயத்தின் மக்களுக்கும் அடிப்படைச் சொந்தமாகவும் ஆதாரப் பந்தமாகவும் ஆகின்றன ; ஆக்கப்படுகின்றன !— இந்தச் சொந்தத்தையும் பந்தத்தையும் நடைமுறைப் போக்கில், பண்பியல் வழியில், மரபார்ந்த நெறிமுறையில் மனிதாபிமானத்துடனும் நாகரிகச் சிந்தனையுடனும் பிரதிபலிப்பதுதான் படைப்பு இலக்கியம் !

இந்த அளவிலும், எல்லையிலும் சமுதாயத்தைப் புனிதம் கெடாமலும், பாதை தவறாமலும், பண்பு மாறாமலும் நேர்மைத் திறத்தோடு, சீர்மைத் தெளிவோடு

பேணிப் பாதுகாத்திட வேண்டிய நியாயமான பொறுப்பும், சீரான கடமையும், அன்பான அக்கறையும், செம்மையான தர்மமும் படைப்பிலக்கியத்தின் கர்த்தர்களையே சாரும், சேரும் என்பதும் இப்போது தெளிவாகலாம்.

ஆரோக்கியமான இலக்கியம்தான் சமூகத்தை ஆரோக்கியமுடையதாக ஆக்கும் ; ஆக்கவும் முடியும் !

ஆகவே தான், ஆரோக்கியமான எழுத்துக்களே இப்போது நமது சமுதாயத்துக்குத் தேவைப்படுகின்றன !

ஆனால்—

நமது அன்பான தமிழ்ச் சமுதாயத்தில் வெளிப்படுத்தப்பட்டு வருகின்ற படைப்பு இலக்கியம், இன்றைய நிலவரத்தில் பெருமைமிகு நமது தமிழ்ச் சமுதாயத்தை எந்த அளவிற்கு வாழ வைத்து, எந்த எல்லையில் அதன் நல்வாழ்த்துதல்களைப் பெற்று வருகிறதென்னும் உண்மை நிலையை மீண்டும் ஆராயும் பொழுது, ஆரோக்கியம் நிரம்பிய மகிழ்ச்சியைக் காட்டிலும், நோய்ப்பீதி நிறைந்த கவலைதான் மேலோங்கி நிற்கிறது. படைப்பின் இலக்கியம் என்பது ஒரு சமுதாயத்தின் ஆன்மாவாகத் திகழ்வதால், அது சமூகத்தைப் பெருமையோடும் பெருமிதத்தோடும் பாதுகாக்க வேண்டியது, அப்படைப்பிலக்கியத்தின் தார்மீகக் கடமையாகவும் அமைகிறதென்றும் நாம் கொள்ளலாம். சமூகத்துக்கு நல்ல வழியைக் காட்டுவதும், காட்டவேண்டியதும் அந்த இலக்கியப் படைப்பின் சத்தியக் கடனாகவும் அமைய வேண்டுமென்றும் நாம் கொள்ள வேண்டும்.

பொதுவான, பொதுப்படையான இவ்விதியைக் கட்டிக்காத்து இலக்கியப்பணி செய்து கொண்டிருக்கும்

நல்ல பல எழுத்துச் சிந்தனையாளர்கட்கு மத்தியிலே, நிறைகுடப் பாலில் துளி விஷம் கலந்த மாதிரி, சமுதாயத்தைத் தீய வழிப்படுத்தி விடும் கெட்ட நோக்கத்தோடும் பொல்லாத எண்ணத்தோடும் 'கச்சடா' கதைகளை ஆபாசம் ஆபாசமாகக் கடந்த சில ஆண்டுகளாக எழுதிக் குவித்து, பணங் காசுகளையும் குவித்து, அந்த மமதையில் சமூகப் பொறுப்பையும் சமுதாயப் பிரக்கினையையும் இழந்து இளைய சமுதாயத்தினரைப் பாதை மாற்றி மயக்கி வருகின்ற சுஜாதா, புஷ்பா தங்கத்துரை, இந்துமதி, சிவசங்கரி ஆகிய அந்த நாலு சமூகப் புல்லுருவிகளோடு இப்போது ஹேமா ஆனந்ததீர்த்தன், ராஜேந்திரகுமார் போன்றவர்களும் கூட்டுச் சேர்ந்து வருவது வருந்தத் தக்கது!

இந்நிலை கவலைக்குரியது.

இலக்கியத்தைச் சோதிக்கலாம்.

ஆனால், சமுதாயத்தையும் சமுதாயத்தின் மக்களையும் சோதிக்க இவர்கள் யார் ?

ஆனாலும்—

பொது மக்கள் இலக்கியத்தை வாழ்த்தி வாழவைக்கும் பொறுப்பு மிகுந்த தார்மீகக் கடமையோடு செயலாற்றி வருகின்ற நல்ல எழுத்தாளர்களிலே, 'மகரிஷி' அன்றும் சரி, இன்றும் சரி, நேர்மையுடனும் நிதானத்துடனும் தமது எழுத்துப் பணிகளைத் தொடர்ந்து வருவது குறிப்பிடத்தக்க செயலாகவும் ஆகிறது.

ஆகவேதான், மகரிஷியை நான் இப்போது மீண்டும் சந்திக்கவும் தயாராகிறேன்.

**ஒரு ருக்மிணியின் சோகக்கதை !**

பத்திரகாளியை நான் வெகு காலமாகவே உணர்வேன்; அறிவேன்; பிறந்த காலந்தொட்டு, என் உள்ளம் தொட்டு நின்றவள், நிலைத்தவள் அந்தத் தாய். அவள் உலகாளும் அன்னை! 1957 காலக் கட்டத்தில் அமரர் அரு. ராமநாதன் விடுத்த அழைப்பின் பேரில், நான் 'பத்திரகாளி'யை இனம் கண்டு இனம் காணவும் செய்ய உதவியது ஆசிரியரின் 'காதல்' ஆண்டு மலர்.

இதற்குப் பின்னர்தான், 'மகரிஷி' 'பத்ரகாளி'யை அறிந்திருக்க வேண்டும்.

தெய்வங்கள் எனக்கு மட்டும் சொந்தம் அல்லதான்.

என்றாலும், தமிழ் எழுத்துலகிலே நன்கு பிரபலமடைந்த கதைகள் மற்றும் நாவல்களின் தலைப்புக்களெல்லாம் திரையில் திருட்டுத்தனமாக நிழலாடி வருவதை நீங்களும் நானும் இன்னமும்கூட வாய்பொத்தி, ஆனால், கண் பொத்தாமல் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம்.

அண்மையில் ஒரு நிகழ்ச்சி.

முன்னம் 'ஆனந்த விகடன்' போட்டியில் 'மகுடி' என்கிற என் ஓரங்க நாடகம் முதற் பரிசினைப் பெற்றது; அந்த வெற்றியில் என் இல்லற வாழ்வின் முதற் பெருஞ் சோகம் விதியாகச் சிரிக்க நேர்ந்தது. முதல் மனைவியின் பேரிழப்பில் கிட்டிய அவ்வெற்றியை நினைவூட்டும் 'மகுடி'யை மகுடியின் ஜீவ நாதத்தை நான் கேட்க மறந்து எத்தனையோ ஆண்டுகட்குப் பின்னர், மூன்று ஆண்டுகளுக்கு முந்தி 'மகுடி'யைப் படமெடுக்க வேண்டுமென்று நல்லவர் ஒருவர் படஅதிபராக என்னைத் தேடி வந்தார்.

குடும்பத்தினரின் ஆர்வத் தூண்டுதலால், நானும் இணங்கினேன். ஆரம்பப் பூஜை அமர்க்களமாகவே நடந்தது. படப்பிடிப்புக்குமுன் பாடல்கள் இரண்டும் பதிவு செய்யப்பட்டன. இடையில், மீண்டும் மகுடி சோதனைக்கு ஆட்பட நேர்ந்தது. படப்பிடிப்பு அப்புறம் நடைபெற்றதாகத் தெரியவில்லை.

இந்நிலையில், அண்மையில் 1983 ஜூன் கடைசி வாக்கில் 'மகுடி' என்ற வேறொரு தமிழ்த் திரைப் படத்திற்கான விளம்பரங்களை நாளேடுகள் அறிவித்தன!—என்னுடைய 'மகுடி'யின் அதிகார பூர்வமான விளம்பரங்களை ஏந்திய அதே பத்திரிகைகள்தாம் இந்தப் 'பதில் வெட்டு' மகுடிக்கும் விளம்பரங்கள் ஈந்தன. முறைப்படி, படத்தயாரிப்பாளர் சங்கம் போன்ற சம்பந்தப்பட்ட அமைப்புக்களில் பதிவு செய்யப்பட்டதுதான் 'மகுடி' என்னும் பெயர் !

ஆனால், தட்டிக் கேட்க யாரும் வேண்டாம். நான் ஒருவனே போதும்!—ஆனால், இந்த மகுடியை ஊதுபவர் 'வாலி'யாம்!—என்பால் மரியாதையும் மதிப்பும் கொண்டவரை நான் என்ன செய்வேன் ?—பாவம்!

ஓ!—பத்ரகாளி என்னை எங்கேயோ திசைமாற்றித் திசை திருப்பி விட்டு விட்டாள்!

சரி; மகரிஷியைச் சந்திப்போம்;

**ஓர் அபலைக்குப் பெயர் : ருக்மிணி**

நாவலாசிரியர் மகரிஷி தன்னுடைய பத்ரகாளியின் கதையைக் கீழ்க்கண்ட பாங்கிலும் பாவனையிலும் பான்மையிலும் சொல்லுகின்றார் :

அமிர்தயோகம், சித்தயோகம் கூடிய சுப யோக சுபதினத்திலேதான், ஆசார அனுஷ்

டானம் மிகுந்த தமிழ்க்குலப் பெண்ணான ருக்மிணியை அம்மி மிதித்து, அருந்ததி பார்த்து, அக்கினியையும் சாட்சி வைத்துத் திருமணம் செய்து கொண்டான் கணேசன்; அவன் ரசனை யுள்ளம் கொண்ட இளைஞன்; தனக்கு வரும் மனைவி அழகானவளாக இருக்க வேண்டு மென்று விரும்பினான்; ஓரளவுக்குப் படிப்பு வாசனை கொண்டவளாகவும் இருக்க வேண்டு மென்பதும் அவன் ஆசையாக அமைந்தது. ஆசை நிறைவேறியது.

கனவுகள் பின்னும் ரசானுபவங்கள் மண்டிய கணேசனுக்கு ருக்மிணி அன்பும் பண்பும் கொண்ட ஓர் அழகான இல்லத்தரசியாகவே வாய்த்தாள். ஆனால், பலமும் பலவீனமும் நிரம்பிய சராசரிப் பெண்ணான ருக்மிணியிடம் உடலின் பலவீனத்தைக் காட்டிலும், உள்ளத்தின் பலவீனம்தான் மேலோங்கி நின்று முனைப்படை கின்றன. ருக்மிணி பயந்த சுபாவம் உடையவள்; பெரிய சத்தம், கூட்டம் போன்ற சலசலப்புக் களும் சங்கடங்களும் அவளுடைய இயல்பான சுபாவத்திற்கு ஏற்பதில்லை. இந்த மனப்போக்கு வியாதியோடு சேர்த்தி இல்லை; சுபாவம்; பழ கினால் சரியாகிவிடும்.

ஆனால்—

கணேசன் நம்பியது பொய்த்தது.

ருக்மிணியின் மனப்பயமும் சித்தப்பிரமையும் நாளுக்கு நாள் வளர்பிறை ஆயின. இந் நிலையில், அவள் கருத்தரித்து, அழகான பெண் தெய்வம் ஒன்றையும் மகளாகப் பெற்றெடுத் தாள். பெற்றெடுத்த அலுமேலுவைச் சீராட்டிப் பாராட்டவோ, அவளுடன் கொஞ்சிக் குலா வவோ விதி அனுமதிக்காத காரணத்தால்,

ருக்மிணிக்கு அமைதியை நல்க அவள் நெஞ்சம் அனுமதிக்கவில்லை. பாவம், ருக்மிணி! எங்கேயோ, எதையோ கண்டு மருண்டு விட்டாள்; பயந்து விட்டாள்! ஒரு நாள், தலைவிரி கோலமாக அவள் தன்னுடைய குழந்தை அலுமேலு முன் வந்து நிற்க, அலமு அரண்டு மிரண்டு அலற, அவள் அலமுவைத் துரத்த, அலமு அலறிப்புடைத்து ஓட, கடைசியில் தரையோடு தரையாக இருந்த அந்தத் தண்ணீர்த் தொட்டிக்குள்ளே விழுந்து மடிய, பயங்கரமான இவ்விபத்தின் துர்ப்பாக்கிய மான எதிர் விளைவாக, ருக்மிணியின் அரைப் பைத்தியப் போக்குகள் வளர்ந்து, உச்சம் அடைய வும் நேர, முடிவிலே, ருக்மிணியைச் சட்டத்தின் விதிப்படியோ, விதியின் சட்டப் பிரகாரமோ விவாகரத்துச் செய்யவும் நேரிட்டது.

இப்போது, கணேசனுக்கு இரண்டாம் துணையாகக் கிட்டியவள் ஜெயந்தி.

சித்தம் சுவாதீனம் இழந்து தவித்த ருக்மிணி, இடையில் நிகழ்ந்த நடப்புக்களில் எதையுமே அறியாதவள் ஆனாள்.

விதியின் விளையாட்டுக்கும் ஓர் உச்சக் கட்டம் அமைந்தது.

உடல் மற்றும் உளப்பண்புகளையும் உரத் தையும் பாதிக்கும் பெண்களுக்கே உரியதான மனநோய் தீர்ந்து, குணம் அடையும் ருக்மிணி. இப்போது, சுயப்புத்தியையும் சுய உணர்வையும் சுயச் சிந்தனையையும் மீட்டுக் கொண்ட நிலை யில்தான், தன்னுடைய அலங்கோலங்களுக்கெல் லாம் காரணமாக அமைந்திட்ட தனது சித்தப் பிரமை பற்றியும் அறிந்தாள். இல்வாழ்வின் பங்காளியைச் சட்டம் பிரித்தது; உயிர்ப் பாசத்

தின் பங்குதாரியை விதி பிரித்தது. அவளுடைய நடவடிக்கைகளிலும் பேச்சுக்களிலும் மாறுதல்கள் தென்படலாயின.

மேலும், 'ப' வடிவிலான பாழ் அடைந்த பங்களாவில் யாரோ ஒருவன் எவளோ ஒருத்தியைக் கழுத்தை நெரித்துக் கொல்ல, அவளது இரண்டு வாய்ப் பகுதிகளிலிருந்து ரத்தம் வழிந்த அந்தப் பயங்கரக் காட்சிதான் தன்னுடைய அவலங்களுக்கெல்லாம் காரணமென்ற உண்மையையும் புரிந்து கொண்டாள்; அந்த 'யாரோ ஒருவன்' பெயர் கந்தப்பன் என்பதும் தெரிந்தது.

இதற்கிடையில்—

ருக்மிணி வேலைக்கும் போய் வரத் தொடங்கினாள். ஆகவே, மாஜி கணவனின் ஜீவனாம்சப் பணத்தை ஏற்கவும் அவள் விரும்பவில்லை.

காலம் ஓடியது!

ருக்மிணியும் ஓடினாள். எங்கே, தெரியுமா? ஏன், தெரியுமோ?— அவளுடைய மனம் பயத்தால் பேதலித்துத் தட்டுத் தடுமாறிப் போவதற்கு முழுமுதற் காரணமாக அமைந்த கந்தப்பன் என்கிற படித்த போக்கிரியைத் தேடி, தன் முன்னாளையக் கணவன் கணேசனுக்கும் இரண்டாவது மனைவி ஜெயந்திக்கும் பிறந்த ரமா என்னும் பெண் குழந்தையை அவனிடமிருந்து மீட்கவே அவள் அப்படி ஓடினாள். குழந்தையை அழைத்துக் கொண்டு போக ஜெயந்தியே நேரில் வந்தாக வேண்டுமென்று விதிக்கப்பட்டிருந்த பயங்கரமான நிபந்தனையையும் மீறிக்கொண்டு, ஜெயந்தியைப் பழிக்குப் பழிவாங்கக் காத்திருந்த

அயோக்கியன் கந்தப்பனைத் தேடி ருக்மிணியே ஓடினாள். கந்தப்பன் முன்னே காளியைப் போலே நின்றாள். அவன் இரத்தத்தைக் குடித்து விட்டு, தான் சுமக்க வாய்த்திட்ட பழி பாவங் களுக்கெல்லாம் பரிகாரமாகத் தன் கணவனின் இரண்டாவது மனைவியின் குழந்தையை மீட்க வேண்டுமென்ற வெறியுடன், தன் கற்பைப் பணயம் வைத்தவளாகப் பத்ர காளி மாதிரி அவன் எதிரிலே நின்றாள்; அவனைக் கடித்துக் குதறி அவனது குரல் வளையைப் பிடித்துத் தன் வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ள வேளை பார்த் தாள்.

கந்தப்பன் பேச்சு மூச்சின்றி, அடிபட்ட வேங்கையாக மண்ணில் சாய்ந்தான்.

போலீஸ் வந்தது.

குழந்தை திரும்பியத .

ஜெயந்தி, "உன்னுடன் எனது வாழ்வின் சௌபாக்கியத்தைப் பகிர்ந்து கொண்டு வாழ் வதில் எனக்கு இனி எவ்வித ஆட்சேபணையும் இல்லை!" என்பதாக ருக்மிணியிடம் உணர்ச்சி வயப்பட்ட நிலையில் கெஞ்சினாள்.

ருக்மிணி மறுத்து விட்டாள்.

விதி மறுபடி சிரித்தது.

அதோ, சமயபுரத்தாளை முத்துப் பல்லக்கில் தரிசிக்கப் புறப்பட்டுவிட்டாள் ருக்மிணி!...

**ருக்மிணியின் மனித லீலை !**

மகாகவியின் நூற்றாண்டு விழா நிறைந்துவிட்ட போதிலும், பாரதியை நன்றியறிவு கொண்ட எந்தப்

பாரதக் குடி குடிமகனும் எளிதிலே மறந்துவிட முடியாது. 'அவன்' காலத்தை வென்றவன்; 'அவன்', ஆண்ட வனுக்குச் சமதை. ஊகூம், அவனுக்கும் ஒருபடி மேம் பட்டவன். ஆண்டவனுக்கு பாரதி மாதிரி அவ்வளவு நாட்டுப் பாசத்தோடு கவிபாடத் தெரிந்திருக்குமா?— யார், சிரிப்பது?—'அவன்' தான் சிரிக்கிறானா?— இல்லை!— ஓ! நீங்கள் தானே? உங்கள் சிரிப்பும் எனக்குத் தெரியும்!...

**''யாதுமாகி நின்றாய், காளி,**
**எங்கும் நீ நிறைந்தாய் !**
**தீது நன்மை யெல்லாம், காளி,**
**தெய்வ லீலை யன்றோ ?**
**பூதமைந்தும் ஆனாய், காளி,**
**பொறி களைந்தும் ஆனாய் !**
**போதமாகி நின்றாய், காளி,**
**பொறியை விஞ்சி நின்றாய் !**
**இன்பமாகி விட்டாய் காளி,**
**என்னுள்ளே நீ புகுந்தாய் !**
**பின்பு நின்னை யல்லால், காளி !**
**பிறிது நானும் உண்டோ ?**
**அன்ப ளித்து விட்டாய், காளி !**
**ஆண்மை தந்து விட்டாய் !**
**துன்பம் நீக்கி விட்டாய், காளி !**
**தொல்லை போக்கி விட்டாய் !''**

மனதுக்கு மனம்தான் சாட்சியாக ஆக முடியும்; ஆகவும் வேண்டும் !

மனித இனத்திலே, தமிழச் சாதியினைச் சார்ந்த ருக்மிணி, சராசரியான மனிதப் பிறப்புக்குரிய பலங்களை யும் பலவீனங்களையும் ஒருங்கே கொண்டு, சராசரிப் பெண்ணாக விளங்கினாள்; ஆதலாலேதான், வாழ்க்கை யின் சுகதுக்கங்களும், லாப நஷ்டங்களும், ஆசாபாசங் களும், தாகத்தாபங்களும் மனித விதியின் ஆணையின்

கீழே அவளையும் எதிர்கொள்ளுகின்றன. நேர் கொண்ட பார்வையால் அனைத்தையும் வரவேற்கிறாள்; எதிர்க்கவும் செய்கிறாள். அவள் தன் வாழ்க்கையில் அடைந்த இனிப்பை விடவும், அனுபவித்த கசப்புத் தான் தீவிரமடைய நேர்ந்தது; ‘தெளிந்தபின் மனமே, துயரம் கொள்ளாதே!’ என்று சித்தர் பராமரிப்பில் பாடப்படும் பாடலைக் கேட்டிருந்தாலும், மனத் தெளிவிலே தான் அவள் துயரங்களைச் சீரணிக்கவும் வாய்க்கிறது. விதிக்கு மருந்து இல்லை என்பார்கள் பெரியார்கள்; அதாவது, பெரியவர்கள். அதொப்பவே, மனத்தின் நோய்க்கும் மருந்து இல்லையென்று சொல்லிவிட முடிகிறதா; முடிவதில்லை. மனத்திற்கு மனமே சாட்சியம் ஆவது மாதிரி, மனத்துக்கு மனமே மருந்தாகவும் ஆகிறது; ஆகவும் வேண்டும்! மனம் கொண்டதும் மாளிகை; மனம் கண்டதும் மாளிகை தானே?—பின், மனமே மனத்திற்கு அருமருந்தாக ஆவதும் இயல்புதான்; ஆக வேண்டியதும் நியதி! எங்கேயோ காண நேர்ந்த அச்சுறுத்தக் கூடிய காட்சி ஒன்றில், அவளுடைய நல்ல. அமைதி பூத்த இதயம் பீதியால் அலைபாய்ந்தது. அலைக்கழிக்கப்படுகிறது. அப்பயமும் பிரமையும் அவளை ஆட்டிப்படைப்பதால், அவளுடைய பூலோக வாழ்க்கையும் சின்னபின்னம் அடைகிறது. ஆட்டுவித்தால், ஆடாதார் யாரே உளர்?—ஆகவே தான், அவளும் ஆட்டுவிக்கப்படுகிறாள்; ஆட்டிப்படைக்கவும் படுகிறாள்! — மகரிஷிக்கு மாத்திரமல்ல உங்களுக்கும் எனக்கும், ஏன்; நமது நல்ல தமிழ்த் திரைப்படத் தயாரிப்பாளருக்கும்கூட, ஒரு நல்ல கதை கிடைத்தது!

**ஓர் ஆச்சரியக் குறியில் ஒரு கேள்விக்குறி :**

மஞ்சள் இலக்கியத்தின் முடிசூடாத மன்னர்களுக்கும் முடிசூடிய—முடிசூட்டிய ‘மன்னி’களுக்கும் மத்தியிலே தான் மகரிஷியும் ஆரோக்கியமான எழுத்துப் பணிகளைத் தொடர்த்து வருகிறார். மின்னும் பொன்

எனவும், அணையாத ஒளி ஆகவும் அவரது பணிகள் தொடர்வதும், தொடர் சேர்ப்பதும் சமூகநல வாழ்வுக்கு இன்றியமையாதது.

ஆச்சரியக் குறியிலே புவனாவை விளையாடச் செய்த புனை கதை ஆசிரியர், இங்கே, கேள்விக் குறியில் ருக்மிணியை விளையாட்டுக் காட்டச் செய்துள்ளார்.

திருச்சியில் திருவானைக் கோயிலின் முன் கோபுர வாசலைத் தாண்டியுள்ள பரந்த புல்வெளியில் வழி பாட்டை முடித்துக் கொண்டு ருக்மிணியும் ஜெயந்தியும் பேசியபடி அமர்ந்திருக்கையில், ஜெயந்தி ஆரம்பிக் கிறாள் :

"உன்னைப் பற்றிப் பலவாறு நான் வெளியே பேசினது உண்டு. அலமுவை நீதான் கொன்னேன்னு கூடச் சொன்னேன். ஏதோ ஒரு வேகம். எங்கே என் வாழ்வை உன்னுடைய குறுக்கீடு பாதிக்குமோ என்கிற பயம். எல்லாப் பெண்களுக்கும் உண்டான இயல்பான கோபம் தானே? உனக்குப் பைத்தியம் ஏன் தெளிந்தது என்று கூடப் பொறாமைப்பட்டதும் வாஸ்தவம்தான். தயவு செய்து எல்லாவற்றையும் மறந்துவிட்டு, எங் களுடன் நீயும் வரவேண்டும். உன்னைப் பற்றிப் பரிபூரணமாக அறியாமல், நான் உன் மேல் கொண் டிருந்த அனுமானங்கள் எல்லாவற்றையும் உன் சிறந்த குணங்கள், செயல்கள் போக்கி விட்டன. உன்னுடன் என் வாழ்வின் சௌபாக்கியத்தைப் பகிர்ந்து கொண்டு வாழ்வதில் எனக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லை. நான் ஒருத்திதான் இது நாள் வரை தடையாக நின் றேன். இப்பொழுது, இதே ஜம்புலிங்கேசுவரரின் கோபுர நிழலில் உட்கார்ந்து கொண்டு கூறுகிறேன். இனி நானும் தடையாக இருக்க மாட்டேன். என் வேண்டு கோளைத் தயவு செய்து ஏற்க வேண்டும்!"

ருக்மிணி வானளாவி நின்ற கோபுரத்தை நிமிர்ந்து பார்க்கிறாள். "உன்னுடைய தெளிவைப் பார்த்து நான்

மனம் சந்தோஷப்படுகிறேன். ஜெயந்தி, எது என் உள்ளத்தில் பெரும் சுமையாக இது நாள் வரை அழுத்திக் கொண்டிருந்ததோ, அந்தப் பாரம் இறங்கி விட்டது. இப்பொழுது என் மனம் ரொம்ப லேசான மாதிரி இருக்கு. இதுவே எனக்குப் போதும்! இதற்கு மேல் வேறு எதுவும் உங்களிடமிருந்து எதிர்பார்க்கவில்லை. இதோ ஐம்புலிங்கேஸ்வரரின் கோபுர நிழலடியில் நின்றுகொண்டு நானும் சொல்கிறேன். இனி, என்னால் அங்கே வந்து உங்களுடன் இருக்க முடியாது. அந்த இடத்திற்கு இனி நான் முற்றிலும் தகுதியற்றவள்!"

பேசிக்கொண்டே வந்த ருக்மிணி ஓர் இடத்தில் நின்று விட்டாள்.

'ஜெயந்தி, இன்னைக்குத் தேதி வைகாசி எட்டு இல்லியோ? சமயபுரம் முத்துப் பல்லாக்கு ஞாபகமில்லே. நான் போய்ட்டு வரேன். ராத்திரி எந்நேரமானாலும் பல்லக்கு பார்த்துவிட்டுத்தான் வருவேன்.'

ஜெயந்தியின் மறுமொழிக்குக் காத்திராமல், ருக்மிணி சமயபுரம் நோக்கிப் புறப்பட்டு விடுகிறாள்.

**வாழ்க்கை வீதியில் நவீனம் :**

**வா**ழ்க்கையைச் சொல்வதும், சொல்லிக் காட்டுவதும் நாவல்.

ஒரு நவீனத்துக்கு ஒரு வாழ்க்கை போதும்; தாராள மாகவே போதும்.

வாழ்க்கையில் ஒரு பாத்திரமே, உயிரும் உயிர்ப்பும், உள்ளமும் உணர்வும் பூண்டு, முனைப்படைந்து, வாழ்க்கையை விதியின் பகைப் புலனில் நடத்திச் செல்லும்; அப்பாத்திரம் ஆணானாலும் சரி, பெண்ணா னாலும் சரி, இல்லை, குழந்தையானாலும் சரி, குறிப்

பிடத்தக்க அந்தப் பாத்திரமே குறிப்பிட்ட அந்த வாழ்க்கைக்கு ஜீவன் ஆகிறது ; நாயகனாகவோ, நாயகியாகவோ ஆகிறது. சம்பந்தப்பட்ட அப்பாத்திரம், குறை நிறையோடு சீரடையவும் செம்மைப்படவும் தூண்டுகிற, இன்றேல், தூண்டப்படுகின்ற எந்த ஒரு நிகழ்ச்சியானாலும். எந்த ஒரு பேச்சானாலும், அது உயிரோட்டத்துடன் அமைந்திருக்கும் பட்சத்தில், அந்த நிகழ்ச்சி, அல்லது, அந்தப் பேச்சு அந்தப் பாத்திரத்தின் குணச் சித்திரத்தை விரிவாகவும் முழுமையாகவும் படம் பிடித்துக் காட்டவும் உதவி விடும். பின், அப்பாத்திரம் தனித்து நின்று ஒளிகாட்டவும், தனித் தன்மையுடன் வழிகாட்டவும் கேட்கவேண்டியதே இல்லை !

நவீன இலக்கியத்தின் மிக நவீனமான விதிமுறைகள் இங்ஙனமாகவே அமைநதிடல் வேண்டும் !— இதுவே என்னுடைய திறனாய்வு நெறியின் நியாயமான முறையாகவும் அமையும் !

இவ்விதியின்படி. பத்ரகாளி ருக்மிணி, என் இலக்கிய மனத்திடைப் புனையா ஓவியமாகவே காட்சி தருகிறாள்!

ருக்மிணி ஒரு சித்திரப்பெண் ; விசித்திரப் பெண்ணும் அவளே! அவள் என்னென்னவோ கனவுகளைக் கண்டாள். ஆனால், அக்கனவுகளில் ஒன்று கூட மருந்துக்கோ, அல்லது. சாஸ்திரத்துக்கோ கூட, பலிக்கவில்லை !— கொண்டவன் அவளை ரத்துச் செய்தான் ; பெற்ற குழந்தையை விதி அவளிடமிருந்து ரத்துச் செய்தது. மனம் அவளை அரைப் பைத்திய நிலையில் அல்லாடித் தள்ளாடி அலைக்கழிக்கவும் தப்பி விடவில்லை ! எல்லா வினைகளும் தீர்ந்து, அவள் மனம் அவளுக்கு நல்ல நிலையை உண்டாக்கிக் கொடுத்தபோது, அவள் தன் நிலையையும் தன் சோகத்தையும் சோதித்து உணர்கிறாள் அப்போது, தன் இடத்தைப் பற்றியிருந்த ஜெயந்தியின் மூலம் ஓர் அதிர்ஷ்டம் தன்னைத் தேடி வருகையில், அப்பாக்கியத்தை உரிமையுடன் ஏற்கவோ, உறவுடன்

அங்கீக்கரிக்கவோ அவளுடைய பெண்மை மறுத்து விடுகின்றது ; அவளது பெண்மை ஆண்மையுடன் மறுத் தளித்து விடுகிறது !—'அந்த இடத்திற்கு இனிமேல் நான் முற்றிலும் தகுதியற்றவள்'... இங்கேதான், ருக்மணியின் பெண்மனத்தின் இயற்பண்பு வாய்மையியல் (Naturalism) துலாம்பரமான பரிசுத்தத்தோடு பொலிவடையவும் செய் கிறது ; இப்பொலிவிலேதான், ருக்மிணியின் பொலிவும் சிறப்பும், சீர்மையும் ஒரு சமூக ஆவணமாக விளங்கக் கூடிய வாய்ப்பும் வசதியும் ஏற்படுகின்றன ; ஏற்படுத்தப் படுகின்றன !

சாகித்ய அகாதெமியின் (Sakitga Academg) உயர் அங்கீகாரத்தைப் பெற்ற திறனாய்வாளர் டாக்டர் மா. இராமலிங்கம் (எழில் முதல்வன்) பரிசில் பெற்ற தமது 'நாவல் இலக்கியம்' என்னும் திறனாய்வு நூலில் பேசுகிறார்.

''மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் நடக்கும் போராட்டம் நிரந்தரமானது. வெவ்வேறு வடிவத்தில் என்றென்றும் அழியாமல் இருந்து கொண்டே இருப்பது. தனி மனிதச் சிந்தனையும் கூட்டுச் சிந்தனையும் எதிரெதி ராக முரண்படுவதையே உலக வரலாற்றில் காண் கின்றோம். இம் முரண்பாட்டில் மனிதனுக்குச் சமுதாயம் ஒடுங்கிப் போவதையும், சமுதாயக் கட்டுக் கோப்பிற்கு மனிதன் இணங்கிப் போவதையும் மாறி மாறி அறியலாம். மனித—சமூகப் போராட்டம் நீதிமன்ற விசாரணைகள் மூலம் பழைய நாடகங்களிலும் புதிய திரைப்படங் களிலும்கூட காட்டப்பட்டு வந்தன. இப்போது அங்கே யும் வழக்குமன்றக் காட்சிகளுக்கு வரவேற்பில்லாமல் போய் விட்டது! போராட்டத்தை அதன் நேரிடை வளர்ச் சியை ஒட்டிச் சித்திரிக்கும் போக்குத்தான் இந்த நவீன யுகத்தின் பாற்பட்ட நவீனங்களிலும் காணப்படுகிறது, இந்நிலையிலே, மனிதனுக்கும் சமூகத்துக்கும் இடையில் நிகழும் பாதிப்புக்களைச் சித்தரிப்பதிலேதான் சமுதாயப்

பின்னணி நாவலின் சிறப்பு மரியாதை பெற முடியும்; மதிப்பும் பெற இயலும் அல்லவா?"

**பத்ரகாளி ருக்மிணி !**

இப்போது, 'பத்ரகாளி'யின் கதை நாயகியான ருக்மிணியைப் பண்பு நிறைந்த தமிழ்ச் சமுதாயத்தின் வீரம் நிறைந்த தமிழச்சியாகவும் நாம் தரிசிக்கிறோம்!— அவள் இப்போது ஒரு காளிபோலவே சமூக விரோதியான சமூகத் துரோகியான கந்தப்பனின், முன்னிலையில் தோன்றுகிறாள்! சமுதாயத்தின் சீர்கேடுகளைச் சாடும் சமூகப் பிரக்ஞை பூண்ட சமுதாயப் பிரதிநிதியான அவள் அநீதியைச் சாடுவதற்கு நீதி வடிவான காளியாக உருக் கொள்வதில் அதிசயம் இருக்க முடியாது!

படித்த அயோக்கியனான கந்தப்பன், அடிநாளில் தன் முதலாளியின் மகள் ஜெயந்தியிடம் தகாத முறையில் நடக்க முயற்சி செய்ததற்குத் தண்டனை அனுபவிக்கிறான்; ஆனால், அத் தண்டனைக்குப் பழிக்குப் பழி வாங்க, பழி பாவத்துக்கு அஞ்சாமல் வெறி கொண்டு திரிகிறான். கணேசனின் இரண்டாவது மனையாட்டியான ஜெயந்தியின் குழந்தை ரமாவைக் கடத்திச் செல்கிறான்; ஜெயந்தி மட்டுமே நேரில் வந்து குழந்தையை அழைத்துக் கொண்டு செல்லலாம் என்பதாகச் சேதியும் அனுப்புகிறான். இந்நிலையில்தான், எல்லாக் கதையையும் அறியும் ருக்மிணி; ஒரு தியாக நிலையில் ஜெயந்தியின் சார்பிலே கந்தப்பனைத் தேடிச் செல்கிறாள்! அவளுடைய அழகான நெஞ்சம் இடை நடுவில் அலங்கோலம் அடைய நேர்ந்ததற்கே, கந்தப்பன் யாரோ அபலை ஒருத்தியைக் கழுத்தை நெரித்துக் கொன்ற காட்சியை அவள் நேருக்கு நேராகப் பார்க்க நேர்ந்தது தானே முழு முதற் காரணமாக அமைந்தது?— தீவர்த்தியுடன் கந்தப்பனை இருளிடை நெருங்கினாள். தீவர்த்தியால் அவன் உடலைச் சுட்டாள். அவன் மேல் பாய்ந்தாள்.

ஆவேசம் பிறந்தவள் போல், அவனைக் கீழே தள்ளி அவனுடைய குரல்வளையைக் கடிக்கத் தொடங்கினாள் ருக்மிணி !... அவன் — கந்தப்பன் மரண வாயிலில் நின்று அலறுகிறான் !— அந்நேரத்தில் தான், கணேசன் போலீஸ் உதவியுடன் அங்கே தோன்று கிறான் !— ருக்மிணி, குழந்தை ரமாவைத் தேடிக் கண்டு பிடித்துக் கணேசனிடம் கண்ணீர்க் கோலத்தோடும் காளிக்கோலத்தோடும் ஒப்படைக்கின்றாள் !

"...அலமுவை நான் கொல்லலை ; அதனால் ஏற்பட்ட அபவாதம் இதனால் மறையணும் ! ரமாவைக் காப்பாத் துற வேகமே, அலமுவினால் நான் ஏற்ற அவப் பேரைத் துடைத்துக் கொள்ளத் துடித்த துடிப்பினாலே எனக்கு உண்டானதுதான் !..."

"அன்பளித்து விட்டாய் காளி !
ஆண்மை தந்து விட்டாய் !"

பெண்மைக்கு வாழ்த்துப் பாடிய பாரதி இங்கே பெண்மையில் ஆண்மை சிறக்கவும் நிறக்கவும் வாழ்த்துப் பாடிவிடவில்லையா ?

உண்மைதான் ! ருக்மிணி தமிழச்சிதான் !...

உண்மைதான் !— மகரிஷி நல்ல தமிழ் நாவலாசிரியர் தான் !

தமிழ்ச் சமுதாயம் மகரிஷியையும் ருக்மிணியையும் மனிதாபிமானத்துடனும் சமூகப்பிரச்சினையுடனும் மனப் பூர்வமாக வாழ்த்தும் ! ○

# 9. கல்யாண முருங்கை!

'பாலகுமாரன்' :

**சமுதாயம் ஒரு சைனா பஜார்!...**

நீண்ட நாட்களுக்கு முன்னர், 'கலைமகள்' பத்திரிகையில் 'நாவல் பிறந்த கதை' நீண்டு, தொடர்ந்து, முடிந்தது. என்னையும் கேட்டிருந்தார்கள். 'சமுதாயம் ஒரு சைனா பஜார்' என்கிற என்னுடைய நாவல் பிறந்த கதையை எழுதினேன். சிந்தனையைத் தூண்டக் கூடிய இந் நவீனம்,முன்நாளைய அமைச்சர் பூவராகன் அவர்கள் முன் நாளிலே நடத்தி முடித்த 'மணிக் கொடி' நாளேட்டுக்கென்று பிரத்தியேகமாக எழுதப் பட்டது; பின்னர், அது நூல் வடிவெடுத்து நாவலாகவும் வெளி வந்தது.

அதில் நான் சிந்தித்த எண்ணங்களை உங்கள் முன்னிலையில் படைக்க வேண்டிய சூழ்நிலை மீண்டும் இப்போது உருவாகியிருக்கிறது :

"...சமூகம் என்பது எது? நானும் நீங்களும் சேர்ந்தது சமூகந்தான்; நம்மோடு மற்றவர்களும் சேர்த்தி. சமுதாயத்தை மனிதர்கள் உருவாக்குகிறார்கள்; மனிதர்களைச் சமுதாயம் உருவாக்குகிறது!... சமூகமும் சமூகத்தின் மனிதர்களும் இப்படியாக, ஒன்றில் ஒன்றாகப் பின்னி, ஒன்றுக்கு ஒன்று ஆதாரமாகிப் பிணைந்தும் பிணைக்கப்பட்டும், உயிரும் உயிர்ப்புமாக நிலவுகிற, நிலவக்கூடிய, நிலவ வேண்டிய இந்த ஒட்டுறவு சமூகத்

தின் விதியாக மட்டுமல்லாமல், சமூகத்தின் மனிதர்களின் விதியாகவும் விளங்கும்!— இவ்விதியின் விதியிலும் இவ் விதியின் வினையிலும்தான், சமுதாய அமைப்பின் பாதிப்புக்களாகச் சிந்தியும் சிதறியும் ஒளிந்தும் ஒளியாமலும் இதே சமுதாய வீதிகளிலேயே விளையாடிக் கொண்டும், விளையாட்டுக் காட்டிக் கொண்டும் இருந்து வருகின்ற சீர்கேடுகள் களைந்தெறியப்பட்டு ஒழுங்குபட முடியும்; ஒழுக்கம் பெறவும் இயலும்!— இந்த விடியலில் தான் சமுதாயத்தின் மறுமலர்ச்சிப் · புது வாழ்வே அடங்கியிருக்கிறது! தமிழ்ச் சமுதாயத்தின் மரபு வழுவாத பண்பாட்டின் அடிப்படையிலான சீர்திருத்தத்தில்தானே தமிழ்ச் சமுதாய மக்களின் மேன்மையும் சீர்மையும் அடங்கியிருக்கின்றன! ஆகவே, இன்றைய நடப்பில், சமூக நல வாழ்வுக்குக் கைக்கு மெய்யாகத் தேவைப்படுபவை ஆக்கப் பூர்வமான சிந்தனைகளும் ஊக்கப் பூர்வமான செயல்களும்தான்!...

'...தொல் காப்பியம் பொருளோடு புணர்ந்த நகை மொழி' என்பதாகவே புதினத்திற்கு ஓர் எல்லையைச் சுட்டும்; புனைகதைப் புதினம் சமூகத்திற்குக் கண்ணாடி; சமூகத்தின் 'கண் ஆடி'யும் அதுவே!— ஆதலால்தானே, அது சமூகத்தின் ஆன்மாவாகவும் ஆகிறது?— ஆகவும் முடிகிறது!— ஆன்மா, நினைவிருக்கட்டும். ஆன்மா வேறு; உள்ளம் வேறு இல்லையா? ஆன்மாவுக்கு மரணம் கிடையாது!— கீதைக் கண்ணன் கீதம் இசைத்திடவில்லையா, என்ன?...

"...உயிரைப் படைப்பவன் ஆண்டவன். உள்ளத்தைப் படைப்பவனோ மனிதன். உயிரும் உள்ளமும் இரண்டறக் கலந்து, பக்குவமும் பண்பாடும் கொண்டு வளர்ந்து வாழத் தொடங்கும்போது, ஆன்மா சிறக்கும்; நிறக்கும். ஆன்மாவின் வளத்தை, வனப்பை, வாழ்வை, வரலாற்றைப் பிரதிபலிக்கக் கூடியதும், பிரதிபலிக்க வேண்டியதும் சமுதாயம் அல்லவா?— மெய்தான்! மெய்யும் பொய்யு

மாக— மெய்மையும் பொய்மையும் கலந்த நிலையற்றதும் நிரந்தரமற்றதுமான மண்ணுலக வாழ்க்கையைத் தவிர்க்க முடியாத ஒரு விதியாகவும் தப்பிக்க இயலாததொரு வினையாகவும் மேற்கொண்டு விடுகிற இந்த மனிதர்களுக்கு இந்தச் சமுதாயத்தில் அருளப்படும் இடம் என்ன? பங்கு என்ன ? பணி என்ன ?

"சமுதாயம்தான் மனிதன் மனிதன்தான் சமுதாயம்!— மனிதன் தவறு இழைத்தால், அது சமுதாயத்தை பாதிப்பதும், சமுதாயம் பாதிக்கப்பட்டால், மனிதன் பாதிக்கப்படுவதும் சகஜம் !— எனவேதான், வாழ்க்கை என்னும் விளையாடலில் மனிதனும் மனிதச் சமுதாயமும் ஒன்றில் ஒன்றாகப் பிணையவும் ஒன்றோடு ஒன்றாக இணையவும் நேருகிறது. இந்நிலையில், மனிதன், தான் தவறு செய்துவிட்டு, அந்தப் பாவத்தை— பழியைச் சமூகத்தின் பேரில் போட்டுவிட்டு, 'ஏ, தாழ்ந்த சமூகமே !' என்று வசனம் பேசிவிட்டுத் தான் தப்பிக்க முயலுவது, அம்மனிதனின் சார்புடைய சமுதாயத்துக்கு அவன் இழைக்கின்ற துரோகமாகவும் அமைந்து விடாதா ? ஆகவே, சமூகம் பண்போடும் நெறியோடும் முறையோடும் மேன்மையும் மேம்பாடும் அடைந்திடவேண்டுமேயானால், சமூகத்தின் மனிதனும் அவ்வாறே பண்புடனும், முறையுடனும் நெறியுடனும் வாழ்வதும், வாழ வேண்டியதும் அவனது சமுதாயக் கடமையாகவும் ஆகிறது !— சமூகத்திலே மனிதன் ஓர் அங்கம் தான் என்றாலும், மனிதன் சொந்த முறையில் செய்கிற அநியாயத்துக்கும் பாவத்துக்கும் குற்றங்களுக்கும் அம்மனிதன் சார்ந்த சமூகம் அம்மனிதனுக்காகவோ, அல்லது, அவனது சார்பாகவோ எவ்வகையிலும் பொறுப்பேற்க முடியாதுதான்!— அது நியாயமும் இல்லை ! ஏன், சமூக விதியோ அல்லது நியதியோ இல்லையே ? சமுதாயத்தின் நடைமுறை அமைப்பில் சிதறி விழுந்து ஆழப் பதிந்து விடுகிற கீறல்களால் சமூகத்தின் பாற்பட்ட மாந்தர்கள் பாதிக்கப்பட்டு விடுவதாகக்

கலைஞர் போன்றோர் எழுதி வருவது தருமம் ஆகாது; அவ்வாறு, சமுதாயத்தின் கட்டமைப்பில், கட்டுக்கோப்பற்ற முறையில், முறைதவறிய கீறல்கள் விழுந்து பதிவதற்கே மூலகாரணமான குற்றவாளிகள், அந்தச் சமுதாயத்தில் உயிர் வாழ்கிற மனிதர்களே அல்லவா? வெகு சாதாரணமான, வெகு நியாயமான இந்த நியாயம் ஏனோ, இன்னமும்கூட வெகுபேர்களுக்குப் புலனாகவே இல்லை!— புரியவும் இல்லை!— மறந்துவிடப் போகிறீர்கள்: சமுதாயம் என்பதெல்லாம் மனிதன்தான்; மனிதனேதான்... மனிதன் இல்லையேல், சமுதாயம் எங்ஙனம் உருவாக முடியும்?...

'எழுத்தாளன்தான் சமூகத்தின் காவலனாக விளங்குவான்; விளங்குகிறான்; விளங்கவும் வேண்டும். ஆகவே, தான், சமூகத்தின் ஆரோக்கியமான வாழ்விலும் பண்பான வளர்ச்சியிலும் எழுத்தாளனுக்குரிய பங்குப்பணி கூடுகிறது; கூடுதல் அடைகிறது. அப்படியென்றால், கணத்துக்குக் கணம் முன்னேறிக் கொண்டேயிருக்கின்ற இந்த விஞ்ஞானயுகத்தின் சந்தியிலே, மாற்றமுடியாத இந்த ஜனநாயக சோஷலிஸ யுகத்தின் பின்னணிச் சூழலோடு மாறிவருகிற இந்தத் தமிழ்ச் சமுதாயத்தின் அங்கமெனத் திகழும் உண்மையான எழுத்தாளனின், அதாவது, உண்மையாகவே எழுத்தை ஆளுகின்ற அந்தச் சமூக மனிதனின் பொறுப்பு என்ன?— சிந்தித்தேன்: அப்படிச் சிந்தித்ததன் நல்ல விளைவாகவோ, அல்லது எதிர் விளைவாகவேதான், சமுதாயத்துக்கு உவமை சொல்லச் சைனாபஜார்— சீனத்துக் கடைவீதி ஓடோடி வந்ததோ?— சைனா பஜார் ஒய்யாரக் கொண்டையாக அழகு காட்டித் தொலையட்டும்; உள்ளே, ஈரும் பேனும் மொய்த்துப் பிடுங்கித் தீர்க்கட்டும்; நமக்கு அக்கறை இல்லை; அனுதாபமும் கிடையாது! ஆனால், சமுதாயம் அவ்வாறு, சைனாபஜாராக விளங்கலாமா? சமுதாயத்தை அப்படி வெறும் ஒய்யாரக் கொண்டையாக போலித்

தன்மையுடன் விளங்கச் செய்யலாமா? அவ்வாறு விளங்கும் பட்சத்திலே, அது சமுதாயத்தின் குற்றமாகுமா? எய்தவன் இருக்க, அம்பை நோவது தர்மமாகுமா?— சமுதாயம் ஒய்யாரக் கொண்டையான சைனா பஜாராக விளங்குகிறதென்றால், அந்தப் பழிபாவத்துக்கு அச் சமுதாயத்தின் அங்கமெனத் திகழும் மனிதன்தானே பொறுப்பாளி ஆகவும் வேண்டும்? இதுதானே சமூக தர்மமாகவும் விளங்கவும் முடியும்?

"... ஆகவே, சமூகத்துக்கு உருவைக் கொடுத்து, உள்ளத்தையும் கொடுக்கும் இலக்கியம், கலாச்சாரம், அரசியல் பொருளாதாரம், நாகரிகம், பண்பாடு போன்ற உலகரீதியான நடைமுறை வாழ்வியலின் அறிவு பூர்வமானதும் உணர்வு பூர்வமானதுமான பல்வேறு அரங்கங்களினின்றும் புற்றீசல்களாகப் பரவிச் சமூகத்தில் ஊடுருவிச் சமூகத்தின் நலவாழ்வைச் சிதைத்துச் சோதித்துவிட்டு, கடைசியில், தாங்கள் செய்த பாவங்களையும் அநியாயங்களையும் அதர்மங்களையும் அட்டூழியங்களையும் ஒட்டு மொத்தமாகச் சமூகத்தின் தலையிலே போட்டுவிட்டுத் தப்பித் திரியும் வேடிக்கை மனிதர்களான சமூகத் துரோகிகளுக்கு— சமூக விரோதிகளுக்குச் சமூகப் பொறுப்பை உணர்த்திட வேண்டியது, பொறுப்புமிக்க எழுத்தாளர்களின் பொற்பு மிகுந்த கடன் ஆகிறது அல்லவா?..."

கலைமகளுக்காக அன்று சிந்தித்தவன், இன்று 'கலைமகள்' சார்ந்த சமுதாயத்துக்காகவும் சிந்திக்கிறேன்.

சமூகப் பொதுவாழ்வில் விதிக்கும் சட்டத்துக்கும் 'டிமிக்கி' கொடுத்துப் பெரிய மனிதர்களாக வேடம் புனைந்து சமூகத் துரோகிகளும் சமூக விரோதிகளும் சமுதாயத்தின் வீதிகளிலே சுற்றித் திரிகின்றமாதிரி, இப்போது எழுத்துத் துறையிலும் சமூக எதிரிகள் புற்றீசல்களாகக் கிளம்பத் தொடங்கிவிட்டனர்!— நச்சுக்காற்றுப் படும்போது, நல்ல மனமும் நோய்வாய்ப் படுவது இயல்புதான்! இயல்பு மாறிய, பண்பாடு தாண்டிய, மரபு மீறிய,

நெறிமுறை தவறிய முரண்பாடுகொண்ட ஆபாசமான எழுத்துக்களின் வாயிலாக இளந்தலைமுறையினரைத் திருப்பிவிட முயன்ற எழுத்துத் துரோகிகளின் கூட்டம் இன்னமும் வேரறுக்கப்படவில்லை! குற்றவாளிகளைத் தண்டிக்கச் சட்டமும் விதியும் இனியாகிலும் விழித்துக் கொண்டால்தான், சமூகப் பொது வாழ்வின் துரோகிகள் தண்டிக்கப்படுவது மாதிரி, எழுத்துச் சமூகத்தின் எதிரிகளும் தண்டிக்கப்பட முடியும்!— அந்த விடியல் வெகு தூரத்தில் இல்லையென ஆறுதல்சொல்ல அன்று ஒரு பூவை முன் வந்த மாதிரி, இன்று ஒரு துர்வாசரும் முன் வந்திருப்பது வரவேற்புக்குரிய நடப்புதான்!...

○ குற்றவாளிகள், நீதிபதிகளாக ஆக வேண்டுமா? ஊஹூம்; கூடாது! கூடவே கூடாது!

○ பாவிகளை ரட்சிக்கச் சிலுவையைச் சுமக்கும் இயேசு நாதர்கள் இன்று நமது அருமைத் தமிழ்ச் சாதிக்குத் தேவை இல்லை; தேவையே இல்லை!

○ நல்ல எழுத்தாளர்கள் வாழ்ந்தார்கள்; வாழ்கிறார்கள்; வாழ்வார்கள்!

○ இது நான்மறைத் தீர்ப்பு.

○ இதுவே சமூகப் பொதுமக்களின் தீர்ப்புங்கூட!...

**விஜி என்கிற விஜயலக்ஷ்மி!**

தமிழ் மனம், தமிழ் மணம் கமழ்ந்திடச் சிலிர்க்கிறது.

அங்கே, தமிழ்க் கடவுள் முருகு எனும் அழகு பொலிந்திடச் சிரிக்கிறார்.

எனக்கும் சிரிக்கத் தெரிகிறது.

'தமிழோடு விளையாட ஓடோடி வா !' என்று சக்தி உமைபாலனை அழைத்த எடைக்குச் சிரிக்கத் தெரிவதில் நியாயம் இருக்கிறது ; நியாயப்படுத்தத் தேவையில்லாத நியாயம் இது ! —ஏன், புரிகிறதோ ?— நானும்தான் சக்தி உமைபாலன் !

சுயப்பிரக்கினை திரும்புகிறது.

திரும்பிப் பார்க்கிறேன் :

அதோ, பாலகுமாரன் !

இப்போது, என்னுள், கீதாஞ்சலி தரிசனம் தருகிறது : "இந்த வாழ்க்கையின் வாசற்படியை நான் எப்பொழுது தாண்டி வந்தேன் என்பது எனக்குத் தெரியாது. நடுக்காட்டிலே, நள்ளிருளிலே மலரும் பூ முகை போல, எல்லையற்ற இந்த மாயையின் நடுவே, என்னை விகசிக்கச் செய்த சக்தி எது ? காலை ஒளியினைக் கண்ட போது, இவ்வுலகிற்கு நான் அந்நியன் அல்லன் என்பதையும், நாம ரூபமற்ற மர்மமான சக்தியே எனது அன்னையின் உருவத்திலே என்னை ஏந்திக் கொண்டிருப்பதாக ஒரு கணத்தில் உணர்ந்தேன். அதே போல்; நான் அறியாத அதே சக்தி என்றுமே எனக்கு அறிமுகமான உருவத்தில் மீண்டும் தோன்றும். நான் இந்த வாழ்க்கையை விரும்பும் காரணத்தாலேயே, மரணத்தையும் நேசிக்கிறேன். குழந்தைக்குப் பால் கொடுக்கும் தாய், அதை வலது ஸ்தனத்திலிருந்து எடுத்தவுடன், குழந்தை வீரிட்டு அழுகிறது : மறுகணத்தில், இடது ஸ்தனத்தில் ஆருயிருக்கு அமிழ்தம் கிடைக்கும் என்பதை அது உணர்வதில்லை !..." காட்சி மாறுகிறது.

இப்போது—

ரத்தச் சிகப்பாகப் பூப்பூத்து, இரண்டு உள்ளங்கை அகலத்திற்கு இலையோடு கூடி, மரமும் இல்லாமல், செடியும் இல்லாமல், இயற்கையின் படைப்பில் வித்தியாச மாக வளர்ந்து விட்ட தாவரம் ஒன்று, ஒடித்து விறகு ஆக்கவும் முடியாமல், இழைத்துப் பொருளாக ஆக்கவும் இயலாமல், சின்னஞ் சிறிய புயலுக்குக் கூட சரிந்து விடக் கூடிய மனப்பான்மையோடு, பச்சைப் பசேலென்று குடை விரித்து, தீயில் ஓர் அழகாகவும், தீயே ஓர் ஒப்பற்ற அழகாகவும் விளங்கும் நந்தலாலாவை நினைவு கூர்ந்து, நினைவூட்டுகிற பாவனையில், காற்றை எதிர்கொள்ளச் சக்தி இழந்து, காற்றிலே அசைந்தாடிக் கொண்டிருக் கிறது.

அதுதான், கல்யாண முருங்கை !

நான் கேட்டது உண்டு.

கண்டது கிடையாது.

ஆனால் ;

பாலகுமாரனின் கலியாண முருங்கையை நான் கண்டிருக்கிறேன் ; கேட்டிருக்கிறேன்.

ஆகவே, விஜி எனப்படும் விஜயலஷ்மியைப் பூரண மாகவும் பரிபூரணமாகவும் நான் அறிந்தவன் என்பதும் வெளிப்படை ஆகிறது.

இப்போது நீங்கள் விஜயலஷ்மியின் வித்தியாசமான, ஆனால், முரண்பாடில்லாத, உண்மையான கதையையும் கேட்டு வையுங்கள்:

ரிஷி மூலம் பார்க்கக் கூடாதாம் ; கேட்கவும் கூடாதாம்,

ஆனாலும், விஜயலஷ்மியின் முன் கதை, பின் கதையில் அபாயம் இருந்தாலும்,அபாய அறிவிப்புக் கிடையவே கிடையாது.

காரணம் : விஜி நூறு பேருக்குத் தெரிந்தவள். ஆகவே, அவள் எப்படியோ இருந்தாளென்றும், அப்படி ஏனோ இருந்தாளென்றும் நீங்கள் நம்பினால், அந்நம்பிக்கை அவளை மோசம் செய்யாதது போலவே உங்களையும் மோசம் செய்து விடாதென்றும் நீங்கள் நம்பலாம் ; நம்பவும் வேண்டும்.

புது மாதிரியான, புதுப் புதுத் தத்து விசாரங்களிலும், விசாரணைகளிலும், விவேகங்களிலும் விதரணைகளிலும் பட்டுப்பழகிப் போன,பட்டும் படாமலும் பழகிப்போன, முப்பத்தாறு வயதுடைய விடுகதைக் கன்னியான விஜி என்கிற விஜயலஷ்மிக்கு எழில் வேங்கடமலை மேலே திருப்பூட்டும் பாக்கியம் பெறுகிறவன்(ர்) பெயர் தான் ரங்கா என்பது. இப்போது விஜியால் நாற்பது வயதான ரங்காவை மறக்க முடியாது ; விதியை அதாவது, கலியாண விதியை மீறியோ, மீறிக் கொண்டோ ரங்காவையும் அவளால் மறக்க முடியாது.

உங்கட்குப் புரிந்திருக்கும்; தெரிந்திருக்கும்!—விஜயலஷ்மிக்குப் பிச்சையைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. பிச்சை: ‘‘எங்க அம்மாவுக்குப் பகவான் போட்ட பிச்சை நான்!” அவன் குளித்து ஈரத்துண்டோடு ‘மாத்ரு பஞ்சகம்’ சொல்லியிருக்கிறான் ; அவளுடைய தங்கமான கழுத்தைக் கட்டிக் கொண்டு சல்லாபமாகத் தூங்கியிருக்கிறான்.

நடுவிலே—

வில்லிங்ஸ்டன் என்ற கனவான் ஒருவர் : அமெரிக்கப் பிரஜை ; கர்நாடகச் சங்கீதத்தில் பித்தன் ; பித்தர். "நான் விரும்பின ஒரே ஆள் ஜான்ஃப்ரெட்ரிக் வில்லிங்க்ஸ்டன் !' என்று விஜியே மனத்தைத் திறந்து ஒப்புக் கொள்ளும் அவளுடைய மனதான மனத்தில் வலுவான ஓர் அருமையான—பெருமையான இடத்தை ஆக்கிர மித்துக் கொண்ட பாக்கியசாலிப் புள்ளி.

அப்பால், ராம் மனோகர் என்கிற வாத்ஸல்யமான பேரைச் சூட்டிக் கொண்ட பித்துக்குள்ளி ஒன்று.

கடைசியாக, நாகப்பன், அசலான காதல் பைத்தியம். கிறுக்குக்குப் பட்டம் ஒரு கேடாக் கும் ! பட்டம் அறுகிறது ; அறுக்கப்படுகிறது. ''கடைக்கு அனுட்பிச்சு வியாபாரம் கத்துக் குடுத்தா, கயவாளித்தனமா பண்றே ? செட்டிப் பிள்ளை வட்டம் தாண்டப்படாதுடா' அடுக்குச் சீரும் அறுபது பவுனுமாய்ப் பொண்ணு வளர்ந் துக்கிணு இருக்கு; **பாப்பாத்தி** பின்னாடி சுத்த றீயே ?" கடைசிவரை, காதலுக்குப் பொருள் என்னவென்று பொருள் பொதிந்த நாகப்பனுக் குச் சொல்லிக் கொடுக்கவில்லை விஜி.

அப்புறம்...?

ஊம் ! ரங்கா நல்லவர் ; குழந்தை மாதிரி, ஆகவே, அந்த மனிதருக்குக் குழந்தை ஆசை உண் டானதில் தவறு இருப்பதற்கில்லை. ஆனால், விஜிக்கு 'உண்டாக வேண்டு'மென்று ஓர் ஆசை, சட்டென்று உண்டாகக் கூடாதோ ? காலங் கடந்த அவளது, அவர்களது திருமணத்தைப் போலவே, குழந்தை ஆசையும் அவளுக்கு உண் டானது ; உண்டாக்கப்பட்டது.

அத்தையின் சொற்படி, குத்துவிளக்குப் பூஜை நடக்கிறது.

பூஜைக்கு நாயகி பரமேஸ்வரி அல்லள்; விஜி தான் நாயகி. அவள் தானே கதைக்கு நாயகி? தன் எதிரே எரியும் தீபத்தை உற்று நோக்குகிறாள். ஒவ்வொரு வினாடியும் ஒவ்வொரு சுடர் மாறிக் கொண்டே இருக்கிறது; மனிதர்களைப் போல், உலகத்தைப் போல், பிரபஞ்சத்தைப் போல் மாறிக் கொண்டேயிருக்கிறது. ஒவ்வொரு வினாடியும் உடலும் மனமும் மாறுகின்றன. நேற்றைய விஜி வேறு; இன்றைய விஜி வேறு. இதில், உண்மையான விஜி—விஜியலக்ஷ்மி யாராம்?

கல்பாவுக்குச் 'சாமி' வருகிறது.

வினையே விதி ஆகிறது.

பூஜைக்குத் தடை.

"குழந்தை வேண்டாம், ரங்கா. எங்காவது பிறந்த குழந்தையைத் 'தத்து' எடுத்துக்கலாம்!"

திடீரென்று கிழவி ஆகிவிடுகிறாள் விஜி என்னும் படியான விஜயலக்ஷ்மி. கண்களை மூடிக் கொள்கிறாள்.

கல்யாண முருங்கை மரங்கள் வரிசை வரிசையாகத் தோன்றுகின்றன!

**விஜி ஓர் அதிசய ராகம்!**

**உ**ங்களில் சிலருக்கோ, அல்லது, பலருக்கோ இந்தக் கதையிலே ஒன்றுமே இல்லையென்று, அதாவது, கதையென்று ஒன்றுமே இல்லையென்று தோன்றக் கூடும்.

ஆனால், என்னைப் பொறுத்தவரை, 'கல்யாண முருங்கை' கதையில் எல்லாமே இருக்கின்றன; தவிரவும், கதை என்ற ஒன்றும் தேவைக்கேற்பச் சற்றுத் தாராள மாகவே அடங்கியிருக்கிறது; உள்ளடங்கியும் உள்ளது.

விஜி!...

அவள் அதிசயமான ராகம்; ஆச்சரியமான ரகமும் கூட.

கலியாணச் சத்திரத்தில், திருமணப் பெண்ணின் கோலத்தில், தன்னை அறிமுகம் செய்து கொள்ளும் விஜய லக்ஷ்மி என்னும் பெயரைப் பெற்ற விஜி, தனக்குத் தானே சுயப் பரிசோதனை செய்து கொள்ளும் நேரத்தில், அவளுடைய மனத்தின் உணர்ச்சிகள் அவளது மனச் சான்றின் நெருடலோடு இப்படி அமைகின்றன :

"நான் பெட்டியைத் திறந்து சற்று நேரம் படிக்க லாம்னு பாசுரத்தை எடுத்தேன்; நேற்று அத்தை இதைத் தூசி துடைத்துக் கொடுத்தாள். 'மனசுக்குக் கஷ்டமா இருந்தா ஸ்வாமி பேரா படிச்சிண்டு போ; கொஞ்சம் விட்டாப்லே இருக்கும்' கஷ்டப்பட்டுக் கொண்டிருப்ப தாக அத்தை ஏன் நினைக்கிறாளென்று புரியவில்லை. முப்பத்தாறு வயசுப் பொண்ணு, நாற்பது வயசு ஆணைக் கல்யாணம் பண்ணிக்கிறது மகா கஷ்டம் தான் என்று அத்தை நினைத்திருப்பாள் போலிருக்கிறது. 'இப்பவா னும் பகவான் கண் திறந்தாரே' என்று அத்தை சொன் னாள். நாலஞ்சு தடவை தொறந்துட்டார்னு பதில் சொல்லத் தோன்றிற்று. ஆனால், அத்தை தாங்கமாட் டாள். அவளையும் கடவுளையும் ஒன்றாக இழிவுபடுத்தி னால் பொறுத்துக் கொள்ளவே மாட்டாள். **'அடி அவுசாரி'** என்று உடனே வைவாள்! இந்த முப்பத்தாறு வயசிலே நான் முன் பின்னாக இருந்தது அத்தைக்கு ஜாடை மாடை யாய்த் தெரியும். 'இப்பவாவது பகவான் கண்திறந்தாரே'

என்பதற்கு அர்த்தம், 'இனிமேயாவது ஒழுங்கா இரு!' என்பதுதான்! நான் அதற்குத் துடுக்காப் பதில் சொன்னால், கல்யாணம் பண்ணியும் அவுசாரி என்கிற வசவு தான் கிடைக்கும்!"

விஜி இப்போது பாசுரத்தைப் பிரித்து ஆண்டாளைத் தேடுகிறாள். 'வாரணமாயிரம்' படித்துக் கொண்டே போனால், சகலமும் நல்லபடியாகவே முடியுமென்பது அத்தையின் வாக்கு. ஆனாலும், அவளுக்கு ஆண்டாளின் 'குயில் பத்து' தான் நிரம்பப் பிடிக்கும். ஆகவேதான், அவளுடைய நெஞ்சின் அலைகள், நினைவின் அலைகளாக அலைமோதி ஆர்ப்பரித்து ஆடம்பரமாக ஆரவாரம் செய்யத் தொடங்கிவிடுகின்றன; மனமே மனச்சாட்சியாகிச் சிலிர்க்கவும் ஆரம்பித்து விடுகின்றது:

'...அடர்த்தியான தோப்புக்குள்ளே கோவிந்தனைக் கூட்டிக் கொண்டு வரச் சொல்லி, ஆண்டாள் குயிலைத் தூது விடுகிறாள்...சின்னப் பெண்ணின் ஏக்கம் பத்துப் பாட்டிலும் பொங்கி வழிந்து கொண்டிருக்கிறது. பதிமூணு வயசுப் பொண்ணா...?—இன்றைக்குள்ள பெண்ணாயிருந்தால், எட்டாவது படித்துக் கொண்டிருக்கும். உடம்பும், கண்ணும், வயசும், மனசும் மலரப் புதிதாய் விழிக்கிற பருவம். தனித்திருக்கப் பிறக்கவில்லை. யாருடனோ சேர்ந்திருக்கவே பிறந்திருக்கிறோம். அப்படிச் சேர்ந்திருப்பது ஆணாய், அழகனாய் கட்டிக் காபந்து செய்கிறவனாய், 'என்ன வந்தாலும் கவலை வேண்டாம், நான் இருக்கிறேன்' என்று சொல்லுபவனாய், தயை நிரம்பியவனாய், புருஷனாய் ஒரு நபரைத் தேடத் துவங்கிவிட்ட சமயம்; துணை என்பது இதுவேயென்று கற்பிதம் செய்து கொள்ளும் பருவம். உறவும் உலகமும் இதைச் சொல்லிக் கொடுப்பதற்கு முன்னால், உடம்பிலுள்ள 'ஹார்மோன்'களும் இந்தத் தேடலை அறிவிக்க ஆரம்பித்து விடுகின்றன. ஆண்டாள் அதீதமாய்க் கவலைப்பட்டிருக்கிறாள். 'என் துணை, என்

துணை, என் துணை' என்று புலம்பியிருக்கிறாள்; பிச்சியாய் அலைந்திருக்கிறாள். அந்த வயசு அப்படிப் பட்டது! தேடல் என்கிற விஷயமே நம்பிக்கையை அடிப் படையாகக் கொண்டதுதானே? கிடைக்கும் என்பதால் தானே தேடுகிறோம்?... என் பதிமூணு வயசும் ஆண்டாள் மனசு மாதிரி ரம்மியமாகத்தான் இருந்தது. 'நான் அவனைச் செய்வனே காணே!' என்று என் மனசும் ஆசைப்பட்டது!...

அப்புறம், விஜயலக்ஷ்மியைப் பொறுத்த மட்டில், மட்டில்லாமல் என்னவெல்லாமோ நடந்து, அவளும் எப்படியெல்லாமோ, நடந்து இப்போது இந்த முப்பத் தாறாவது வயசில் நாற்பது வயதுடைய ரங்கா என்கிற ஆண்பிள்ளையின் துணைவி என்னும் பதவியை ஏற்றுக் கொள்ளத் தயாராகி, தன்னைத் தயார் நிலைக்கு ஆளாக்கிக் கொண்டவளாய், கல்யாணச் சத்திரத்தில் கல்யாணப் பெண்ணாகக் காட்சித் தருகின்ற இந்நேரத் திலும் அவளது உள் மனம் உள்வட்டச் சுழிப்பினின்றும் இன்னமும் விடுதலை பெறமுடியாமல் தத்தளித்துக் கொண்டேயிருக்கிறது. அவள் உணர்வுகள் மேலும் கீழு மாகப் பதறியும் சிதறியும் தவிக்கின்றன. உடம்பில், ரத்தத்தில் கலந்து, அங்கங்கள் வளர்ச்சியடையத் தூண்டும் உட்சுரப்பி நீரின் உதவியால் வளர்ச்சியடைந்த உடலின் உணர்வுகள் தூண்டுதல் அடைந்து, சலனமும் அடைந்து, ஆடி ஓடி அலைந்து திரிந்து ஓய்ந்து விடக்கூடிய நெருக்கடி நிலையின் பாதிப்பில் அவளது உணர்ச்சிகள் கன்றிச் சிவந்து கதறவும் தொடங்கி விடுகின்றன:

'...நான் கயிறு கட்டிக் கொள்ளுவது, என்னுள்ளே பொங்கி விட்ட சந்நியாசப் புயலுக்குப் பயந்துதான்!... உத்தியோகம், உறவு, ஊர் அத்தனையும் விட்டு விட்டு, தெருவோடு எங்கேயாவது நடந்து போய் விடுமோ என்கிற பயத்தை உத்தேசித்துத்தான்! இன்னும் பத்து வருஷம் கழிஞ்சு, நாப்பத்தாறு வயசானாலும் இப்படி

நடந்து விடலாம். இந்த முப்பத்தாறு ஓர் இரண்டுங் கெட்டான் பருவம். செடியும் இல்லாமல், மரமும் இல்லாமல்; கல்யாண முருங்கை மரம்!...தெருவோடு நடந்து போக வயசும் உடம்பும் தடை சொல்கிறது; திரட்சியான மாரும், குழையும் வயிறும், திமிறி நிற்கும் பிருஷ்டமும் இடைஞ்சலைத்தான் சேர்க்கின்றன... எனக்குத் தெரிஞ்சி, கிழத்தனத்தை வரமாகக் கேட்ட பெண் ஔவைதான். எனக்கும் அப்படிக் கேட்க ஆசை தான்! கொடுக்கத்தான் ஆள் இல்லை !—இந்த முருங்கைப் பயணத்தைக் கடக்க வேறு வழி இல்லாமலே, கல்யாண ஏற்பாடு செய்திருக்கிறேன். தேவைகளற்று, ஒரு துணையைத் தேடிக் கொள்கிறேன். ஆசைகள் பூர்த்தியான பிறகு, ஆதரவுக்காக ஒண்டிக் கொள்கிறேன்...எனக்குப் புருஷனாய், யார் வேண்டுமானாலும் இருக்கலாம்! இதிலே சிரமம் ஏதும் இல்லை! 'இவர்' எனக்கு வாய்த்திருப்பது பற்றி மகிழ்ச்சியோ, துக்கமோ இல்லை. இவருக்கு ஏதாவது தேவைப்படலாம், முடிந்தவரை என்னாலும் கொடுக்க முடியும்; முடியாதபோது, 'இல்லை'யென்று குழந்தையாய்க் கை விரிக்கவும் முடியும். இப்படி நிதானமாய், வெட்க விசாரணைகளின்றி, குறு குறுப்பின்றிக் கல்யாணம் பண்ணிக் கொள்வது எனக்குப் பிடித்திருக்கிறது!...

நூதனமானதொரு சமுதாயப் பார்வை சித்திக்கப் பெற்ற பால குமாரன் என்னும் நல்ல கதாசிரியர் படைத்த 'கல்யாணமுருங்கை' கதையில் எல்லாமே இருக்கின்றன வென்று நான் சற்று முன் சொன்னேன் அல்லவா?—என் சொல்லுக்கு முத்திரையும் முத்தாய்ப்பும் இட்டுச் சாட்சி சொல்வதற்குத் தயாராகும் விஜயலக்ஷ்மி என்கிற விஜி, சுயச் சோதனையின் முறை வழியில் விளைந்த சுய தரிசனத்தின் வழி முறையில், முறைகேடான தன்னுடைய கதையை முறையாகவே நமக்கு தெளிவு படுத்திக் காண் பித்து விடுகிறாள். அவளுடைய மனத்தை அவளது மனச் சாட்சி விழிப்புக் கொள்ளச் செய்யவே அவள் மனம்,

உள் மனம் உள்ளது உள்ளபடி பேசவும் தலைப்படுகிறது. மன உணர்வுகளின் ஆட்டத்தில், அவளுடைய கதையின் அந்தரங்கமான முன்பின் கதைச் சிதறல்கள் சிந்திச் சிதறவும் ஆரம்பித்து விடுகின்றன!—ஆகவேதான் விஜியின் குணச்சித்திரப் படையலும் படப்பிடிப்பும் இயற்கையாகவும் தத்ரூபமாகவும் அமைந்து விடவும் செய்கின்றன!—பால குமாரனின் புதுமையான சமுதாயப் பார்வையில் புரட்சிகரமான விழிப்புணர்வை ஏற்படுத் தவும் இந்த விஜிதான் ஆதி காரணமாக ஆகிவிடுகிறாள் என்னும் யதார்த்தமான நடப்பை நாம் மறப்பதற் கில்லை; மறுப்பதற்கில்லை !

விஜயலக்ஷ்மி புதுமையான பெண்தான் ! புரட்சிமிக்க தமிழ்ப் பெண்தான் !—ஆனாலும், பலமும் பலவீனமும் கொண்ட சராசரியான பெண்! ஆகவேதான், அவளையும் ஆசாபாசங்கள் ஆட்டிப் படைத்து அலைக்கழிக்கவும் செய்து விடுகின்றன!—நெஞ்சை ஒளித்து வஞ்சகமில்லை என்போம்: அவள் தன் சம்பந்தப்பட்ட எதையும் ஒளிக்க வில்லை, மறைக்கவில்லை. ஆகவேதான், அவளால் புதுமையான, அதிசயமான, வேடிக்கையான பெண்ணாக நம் முன்னே அழகு காட்டி. ஆடிப்பாடி ஆரவாரம் செய்யவும், சிரித்து மகிழ்ந்து சீரழியவும், அழுது புலம்பி உருக்குலையவும், முடிந்திருக்கிறது! 'ஒளிந்து கொள்ளத் தான் இந்த மார்பும் மனிதரும்!'—எவ்வளவு துணிச்சல் காரியாக இருக்கிறாள், பொல்லாத்தனம் கொண்ட இந்த விஜி ! பாவம் !

பாவங்கள் இல்லையேல். புண்ணியம் இல்லை !

அமரகவி வரம்புறுத்த புதுமைப் பெண்ணாக விளங்கக்கூடிய புண்ணியத்தைச் செய்திடவில்லை இந்த விஜயலக்ஷ்மி என்பது அங்கீகரிக்கப்பட்டதும் பிரகடனப் படுத்தப்பட்டதுமான உண்மைதான் !—ஆனாலுங்கூட, அவளும் இந்தத் தமிழ்ச் சாதி சமூகத்தின் ஓர் அங்கமாகி, ஒரு சமூகப் பொறுப்பின் உந்துதலின் பேரில், தன்னைத்

தானே சோதனை செய்து பார்க்கவும் அதன் பலனாகத் தான் செய்த பாவங்களுக்காக மனம் வருந்தவும் தயாராகும்போது, அவளுடைய பாவங்கள் மன்னிக்கப்படவும், அம்மன்னிப்பில் ஒரு புண்ணியம் கிட்டவும், ஒரு நல்ல விடியல் ஏற்படுவதும், ஏற்படுத்தப்படுவதும் தானே தருமமாக அமைய முடியும்?

இதுவே உச்சக்கட்டம்:

குத்து விளக்குப் பூஜைக்கு உயிரும் உயிர்ப்பும் கொண்ட, உணர்வும் உறவும் பூண்ட நாயகி வேடம் புனைந்து, குத்து விளக்கின் திருச் சந்நிதானத்தில் வந்தமர்கிறாள், புனை கதையின் நாயகி விஜயலக்ஷ்மி!

புனிதமான குத்து விளக்கினின்றும் சுடர் தெறிக்கின்ற சுடர்கள் வினாடிக்கு வினாடி மாறுகின்றன; மாறி வருகின்றன!

**பார்வையின் நூதனமான கோணம்!**

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் தமது 'இலக்கிய வரலாறு' நூலில், வரவேற்கத்தக்க சமுதாய மாற்றத்தை நல் வழிப்படுத்திக் காட்டிப் புரட்சி செய்த சிந்தனை மேதை வ. ரா. மூதறிஞர் ராஜாஜி, பேராசிரியர் கல்கி, அறிஞர் அண்ணா, டாக்டர் மு. வ., போன்ற சிலரை நினைவு கூர்ந்து, பின், தமிழ்ப்படைப்பிலக்கியத் துறையில் பயனுள்ள புதிய சோதனையாளர்களாக விளங்கும் அகிலன், புதுமைப் பித்தன், விந்தன், எஸ். ஏ. பி. ஜெயகாந்தன், பூவை ஆறுமுகம், கோவி. மணி சேகரன், நா. பார்த்தசாரதி, தி. ஜானகிராமன், நீல. பத்மநாபன், அனுராதாரமணன், பாலகுமாரன் முதலான பலரையும் நினைவுப்படுத்தியுள்ளார்.

[பதினைந்தாம் பதிப்பு ; 1981

இதோ மீண்டும் விஜி!

பவித்திரமானதும் ஆதரிசனமானதும், நிதர்சன மானதும் ஆத்மார்த்தமானதுமான உயிர்ச்சாட்சியமாக விளங்கிக் கொண்டிருக்கின்ற அந்தக் குத்து விளக்கின் தீபச்சுடர் உலகத்தைப் போலவும், மனிதர்களைப் போலவும் மாற மாற, விஜியின் நிலையான உடம்பும் நிலையற்ற மனமும் மாறுகின்றன; மாறிக் கொண்டிருக்கின்றன. நேற்றைய விஜி வேறு; இன்றைய விஜி வேறு! இதில், நிஜமான விஜய லக்ஷ்மி எது?... தெரியாது!—மனத்தின் மனம் சட்டை உரித்துக் கொண்ட நாகமெனச் சீறத் தலைப்படுகிறது: 'நேத்திக்கு நாலு பேரோடே படுத்திண்டியே? இன்னிக்குக் குத்து விளக்குப் பூஜை பண்றயே?' என்று என்னை நானே கேட்டுக் கொள்ள முடியாது. இன்று உள்ளபடியே, என்றைக்கும் இருப்பேனென்று சொல்லவும் முடியாது. மாறுதல் இயற்கை; மாறுதல்தான் உலகம். ஆனால், மாறாமல் இரு என்றுதான் எல்லோரும் சொல்கிறார்கள். பொருள் என்று ஏதுமில்லை... மாறுதலே பொருள் என்றால்- ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்...மாறுதலே சாசுவதமென்றால், எதிர்காலப் பயம் போய் விடாதா?... நேற்றையத் தினத்துடன் இன்றைத் தினத்தை ஒப்பிட்டுப் பார்க்கையில் தானே நல்லதும் கெட்டதும் புரிகின்றன?...' 'நமஹ ...நமஹ' என்கிற சொல் வரும்போதெல்லாம் குங்குமம் போட்டவள், கல்பாவுக்குச் சாமி வரவே, அவள் செய்கைகள் தடைப்படுகின்றன.— 'மாறும் மனிதர் மீது, உலகம் மீது நம்பிக்கையோ, அவநம்பிக்கையோ இல்லாத நிலையிலே, கடவுள் வழிபாடு, குத்துவிளக்குப் பூஜை எதற்கு?'...

"நீ கல்யாணத்துக்குச் சரின்னு சொன்னவுடனே, எனக்குத் தூக்கம் வந்துடுத்து; எனக்குச் சந்தோஷமா இருந்தாக் கூட தூக்கம் வந்துடும்," என்று விஜியிடம் வெள்ளை மனத்துடன் அறிவித்த ரங்கா, "என்ன, பூஜை முடிச்சாச்சா?" என்று கேட்டபடி, கதவைத் திறக்கிறார்:

'மனசு நிம்மதியா இருக்குமே ?...வெத்து நம்பிக்கை தான்; ஆனா, ரொம்ப ஆரோக்கியம்...!' தனக்குத் தானே சொல்லிக் கொள்கிறார்.

"கல்பாவுக்குச் சாமி வந்தது."

"அப்படி என்ன சொன்னா?"

"எல்லோரும் க்ஷேமமா இருப்பாளாம்!"

"ஏன், அது நல்ல வார்த்தைதானே?"

"நல்ல வார்த்தைதான்!— எப்படிச் சாத்தியம்? எல்லாரும் எப்படிச் சௌக்கியமா இருக்க முடியும்? இயல்புக்கு விரோதமில்லையா? வெறும் ஆசை வார்த்தை தானே?... சாமிக்கு ஆசை உண்டோ? புலி சௌக்கியமா இருக்க, மான் சாக வேண்டாமா? பாம்பு உயிர் வாழ தவளை சாக வேண்டாமா?...ச்சே...சகலமும் பொய்யாய் இருக்கு; பெரிய பெரிய பொய்யா, வெட்கமில்லாம சொல்லிண்டு... பொய்யை ஏத்துண்டு..."

"என்ன ஆச்சு உனக்கு, விஜி?"

"இனிமே இந்தப் பூஜையெல்லாம் வேண்டாம், ரங்கா!"

"சரி, பூஜை வேண்டாம்; வேறென்னென்ன வேண்டாம்? லிஸ்ட் போடு!"

"குழந்தை கூட வேண்டாம், ரங்கா!"

"விஜி, நெஜமாத்தானா?"

"எதையெடு, குழப்பம்; எதையெடு, சந்தேகம். ச்சே... வெறுப்பா இருக்கு; இவ்வளவு குழப்பமா இருக்கிற உலகத்துக்கு இன்னொரு ஜீவன் வந்து, நம்மை மாதிரியே அலைக்கழியணுமா? நெஜமாகவே குழந்தைகள் மேலே பிரியம் இருந்தா, குழந்தை பெத்துக்கக் கூடாது, ரங்கா!"

"என்ன குழப்பம் உனக்கு, விஜி?"

"குழப்பம் இல்லை, ரங்கா; ஒரு தெளிவு!... ஒரே குடும்பம், ஒரே வித்து, ஒரே வளர்ப்பு...நாங்க சகோதரிங்க

மூன்று பேரும் மூணு விதம்... இங்கே ரூல்ஸ்ணு ஒண்ணு போட்டிருக்கு. அதை மீறிட்டு, மறுபடி மரபுக்குள்ளே எட்டிப் பார்க்கிற நான்; மரபுக்குள் சௌக்கியம் கருதி, உள்ளே பூந்துண்டு, வெளியே மீற முடியலையேன்னு தவிக்கிற கல்பா; மீறுவது, மீறாம இருக்கிறது இரண்டையும் யோசனை பண்ணாம, இழுத்த இழுப்புக்குப் போய், அப்பப்ப செய்ற காரியத்துக்குச் சமாதானம் சொல்ற சரோ இப்படி இந்த மூணு பேர் புத்தியும் உங்க புத்தியும் உலக புத்தியும் என் நினைவைத் தாக்காதா, குழப்பாதா? ஸோ... குழந்தை வேண்டாம், ரங்கா!... வேணும்னா எங்காவது பிறந்த குழந்தையைத் தத்து எடுத்துக்கலாம். சாப்பாட்டுக்கு இல்லேன்னு தவிக்கறதைக் கூட்டிண்டு வந்து சாப்பாடு போடலாம். சாதம் போட்டு வளர்க்கலாம். அது பிறந்தாச்சு; இனி, வளர்ச்சியைத் தடுக்க முடியாது. வளர, ஜலம் ஊத்துவோம். வெப்பமோ, விஷக்காத்தோ, அது உறிஞ்சி, அதை ஏத்துண்டு வளரட்டும்!'

"அவ்வளவு வெறுப்பா வாழ்க்கை மேல... விஜி ?"

"வெறுப்பு எங்கானும் 'தத்து' எடுத்துக்குமா? இது 'லவ் ரங்கா... நிஜமான நேசம்!... குழந்தை கேள்வி கேட்டா, பளிச்சின்னு பதில் சொல்லத் தெரியுமா உங்களுக்கு ? தீர்மானமா ஏதும் தெரியுமா ? தெளிவுபடுத்த வலிவுண்டா ? சோற்றுப்பாடே கதியென்றால், ஞானமும் தெளிவும் என்னிக்கு வரும்? எந்தப் புராணம், எந்தக் கடவுள் உசத்தி? எல்லாமே குறைப்பட்டிருக்கு! இன்னும் தேடறதா சொல்றது, மறுபிறவி வேண்டாம்னு கதறிக் கதறிச் சொல்றது... இந்தக் கதறலுக்கு என்ன அர்த்தம்? இது தப்பான இடம். இது 'பனிஷ்மென்ட் ஏரியா!' அப்படித்தானே ?... 'பனிஷ்' பண்ண, குழந்தை பெத்துக்கவா ?... அது பாவம் இல்லையா, ரங்கா ?"

"சரியான கோழை நீ. விஜி !"

"அப்ப, வீரம் எதுன்னு சொல்லணும்! கோழைத் தனத்தையே வீரம்னு லேபிள் ஒட்டிக் காட்டக் கூடாது. ஏன், உங்களுக்குப் பிறந்த குழந்தையைத்தான் நீங்க 'லவ்' பண்ண முடியுமா? வளர்க்க முடியுமா ? உண்மையான குழந்தை ஆசை இப்படித் தானா ?... அந்த மாதிரி வளர்க்கிற ரெஸ்பான்ஸ்பிலிட்டி கூட எதுக்கு ?... சும்மா இருக்கலாமே !"

"எப்படிச் சும்மா இருக்க முடியும் ? வாடின பயிருக்கு ஜலம் ஊத்தற காரியம்தான் அது. மத்தப்படி, மண் குணம் தாவர இயல்பு. ஜலம் ஊத்தி மாத்த முடியாது. ஜலம் ஊத்தாம வளரவும் வளராது!"

"டக்குன்னு கிழவியாய்ட்டா விஜி !"...

"எப்பவோ ஆய்ட்டேன், ரங்கா! கிழத்தனம் மனசுலே விழுந்தாச்சு. இருக்கறதைச் சரி பண்ணலாம்னுதான் ஔவையார் கிளம்பினா; கிழவி வரம் கேட்டா !... இங்கே, வரம் கேட்க சாமியில்லை; உங்களைக் கேட்கறேன்... நமக்குக் குழந்தை வேண்டாம், ரங்கா!"

ரங்கா மௌனமாகப் போய் நாற்காலியில் சரிந்து உட்காருகிறார்.

விஜி குத்திட்டுச் சுவரோரம் அமர்கிறாள்.

எதிர் வீட்டுக்குப் 'பெயிண்ட்' பூச்சு நடந்து கொண் டிருக்கிறது.

ஓட்டை வீட்டுக்குப் 'பெயிண்ட்' பூசி என்ன பயன் ?

விஜி எனப்படும் விஜயலக்ஷ்மி கண்களை மூடிக் கொள் கிறாள் :

மறுபடி மலைப்பாதை, சுனைநீர், குளிர்காற்று; வரிசை வரிசையாய் நகர்ந்த கல்யாண முருங்கை மரங்கள் தோன்றுகின்றன !

சிவந்த பூ, பச்சை இலைகள், தொலைவிலிருந்து பெரும் பசுமையையும், மலர்ச்சியையும் காட்டும் மரம்...

இழைக்கத் தாங்காது; காற்றை எதிர்த்து நிற்காது; காய் தராது; கனியாது...பசேலென்று நிற்கும் மனித வாழ்க்கை மாதிரி...!

**வாழ்வு : ஓர் ஆய்வுக் கூடம் !**

வாழ்க்கை ஒரு சோதனை.

வாழ்க்கை ஒரு சாதனை.

வாழ்க்கை ஒரு யாத்திரை.

வாழ்க்கை ஒரு விளையாட்டு.

வாழ்க்கை ஒரு யோகம்.

வாழ்க்கை ஒரு விதி.

வாழ்க்கை ஒரு வினை.

வாழ்க்கை ஓர் ஆரம்பம்.

வாழ்க்கை ஒரு முடிவு.

இவ்வாறு பல்வேறு நிலைகளில் நிர்ணயம் ஆகின்ற, நிர்ணயப்படுத்தப்படுகின்ற வாழ்க்கைக்கு ஓர் ஆரம்பம் இருப்பது போலவே, அதற்கு ஒரு முடிவும் உண்டு என்பது தான் தத்துவஞானிகளின் கணிப்பு. சிந்தனையாளர்களின் கருத்தும் இவ்வாறாகவே அமைவதில், கருத்து வேறு பாடுகள் இருக்க முடியாதுதான். இது வாழ்க்கையின் நியதி மட்டுமல்ல ; உலக வாழ்க்கையின் இயல்பும் இதுவே தான்.

ஆனால், ஒன்று :

ஆரம்பத்தைத் தொடுகின்ற முடிவின் விதி இயற்கையானது.

சரி.

முடிவைத் தொடுகின்ற ஆரம்பத்திற்கு என்ன பெயர்?

அதுதான் விஜி !

அவள்தான் விஜயலக்ஷ்மி.

நான் சொல்லவில்லையா ?

விஜி ஓர் அதிசயமான ராகம் !

பாலகுமாரன் விளம்பவில்லையா ?

விஜயலக்ஷ்மி அதிசயமான ரகம் !

உண்மையும் அதுதான் !— விஜி என்கிற / விஜயலக்ஷ்மி மேற்கொண்ட வாழ்க்கையின் முடிவிலேதான் அவளுடைய மேற்கண்ட வாழ்க்கை ஆரம்பமாகிறது, ஆடத்தான் ஒரு வாழ்க்கையென்றால், அடங்கவும் ஒரு வாழ்க்கை வேண்டாமா ? ஓடக் காண்பது பூம்புனல் உள்ளம் ; ஒடுங்கக் காண்பது யோகியர் உள்ளம்' என்பது குறவஞ்சித்திரு மந்திரம் இல்லையா ? ஆடும் வாழ்க்கையை மட்டிலுமே படமெடுத்துப் பார்த்துப் படமெடுத்துக் காட்டிக் கொண்டிருக்கிற சமூகப் பொறுப்பற்ற எழுத்துத் துரோகிகள் ஒரு சிலருக்கு மத்தியில், அடங்கும் வாழ்க்கையைத் துணிந்து சித்திரித்துச் சொல்ல ஒரு விஜய லக்ஷ்மி அசல் தமிழ்ச் சாதியின் அசல் தமிழச்சியாகவே முன் வந்தது தமிழ்ப் படைப்பிலக்கிய வரலாற்றில் ஒரு பசுமைப் புரட்சியாகவே அமைகிறது.

விஜியின் வாழ்க்கை இயற்கையோடு இணைந்தது ; பிணைந்தது ; ஆகவேதான், மாறுகின்ற இயற்கையைப் போலவே, அவளும் மாறுகிறாள் ; அவளுடைய வாழ்க்கையும் மாறுகிறது. இயற்கையோடு இணங்கியும் பிணங்கியும் அவள் வாழ்க்கை மாறும்போது, மாறுபடும் போது, அவள் தன் வாழ்க்கையில் ஒத்துப்போகவும் செய்கிறாள். ஒத்துப்போக மறுக்கும் சமயங்களில் அவள் நடப்பு வாழ்க்கையினின்றும், அதாவது, நமது தமிழ் மரபு எல்லை காட்டியும் வகுத்துத் தொகுத்தும் தருளியுள்ள பண்பாட்டு நெறிமுறை விதிகளின்றும் அவள் வினையாக மாறும் போது, அவள் மனத்தால் அவள் மாற்றப்படும்போது, அவள் சகஜமான, யதார்த்த வாழ்விலிருந்துமுரண்படவும் துணிகிறாள் ; ஆனால், அந்த முரண்பாட்டையே தனது வாழ்க்கையாக ஆக்கிக் கொள்ளத் துணியவில்லை !—

இந்தப் பரிபக்குவத்திலேதான் அவளுடைய பாவப் பரிசோதனைகள் பாவமன்னிப்புப் பெறவும் ஏதுவாகின்றன. அவள் தன்னுடைய வாழ்க்கையில் தேடிப் போய்ச் சந்தித்த, அல்லது, அவளது வாழ்க்கையில் தேடாமலே குறுக்கிட்ட பிச்சை, ராம்குமார், வில்லிங்ஸடன், நாகப்பன் போன்ற விளையாட்டு வீரர்கள், ஆட்டம் முடிந்ததும், விளையாட்டு மைதானத்திலிருந்து நாகரிகமாகவும் நாணயமாகவும் நியாயமாகவும் விலகி விடுவதன் மூலம், அவளுடைய களங்கப்பட்ட பெண்மை, புனர் ஜன்மம் எடுக்கவும் வாய்ப்பு வசதி ஏற்படுகிறது. முன் பின் பழக்கப்பட்ட ரங்கா, முற்றிலும் பழக்கப்படத் துணிந்து, அவளுடைய தங்கக் கழுத்தில் துணிந்து தங்கத் தாலியைக் கட்டவும், அவளைக் கட்டி அணைக்கவும் துணிகிறார் !

**முரண்பாடுகள் மட்டுமே வாழ்க்கையல்ல !**

சபலமும் சலனமும் அடைகின்ற நேரங்களில், மனித மனம் இயற்கையின் இலட்சுமணன் கோட்டிலிருந்து விதியாகவும் வினையாகவும் விலகி முரண்படுவது தவிர்க்கப்படமுடியாத விபத்து மாதிரி. விபத்துக்களுக்கு இடம், பொருள், ஏவல் தெரியாதல்லவா ?— ஆனால், வெறும் முரண்பாடுகள் மட்டிலுமே வாழ்க்கையாக ஆகி விட்டால், அப்பால் பகுத்தறியும் மனிதர்களுக்கும் பகுத்தறியாத மிருகங்களுக்கும் என்ன வித்தியாசம் இருக்கக் கூடும் ?

விஜயலக்ஷ்மி பெண் மிருகமல்ல !

விஜி மனிதப் பெண்.

அவள் முரண்பட்டாள்.

அவள் வாழ்க்கையும் முரண்படத் தவற வில்லை.

ஆனாலும், முரண்பாட்டின் நிமித்தம் அவள் தன்னுடைய வாழ்க்கையை வேசித்தனமாகத் தவறவிட்டு விடவில்லை.

எதிர்பார்த்து ஏற்பட்ட அல்லது, எதிர்பாராமல் ஏற்படுத்திக் கொண்ட விபத்துக்களிலெல்லாம் விஜி உயிர் தப்பிவிடுகிறாள்! ஆனாலும், அவள் அடிபடாமல் தப்பிப் பிழைக்க முடியவில்லைதான்! அது அவள் சொந்த விஷயம், விவகாரம்!

விவகாரம் என்றால், அது முச்சந்திக்கும் நாற் சந்திக்கும் வரத்தான் செய்யும்! சமூக விதியின் நிர்த் தாட்சண்யமான இயல்பு இது. ஆகவே, அவள் கற்பு விமர்சிக்கவும் படுகிறது! ஏன், அவளே சோதிக்கப்பட்ட தன் கற்பு நிலையை விமர்சிக்கவும் துணிந்து விட வில்லையா?

அதோ, விஜி திரும்பிப் பார்க்கிறாள்:

நீங்களும் திரும்பிப் பாருங்கள்:

**பரிசோதனைச்சாலை:**

## Shot No: *1*

இனிய சிநேகிதி (ஸ்நேகிதி என்பது தான் பால குமாரனுக்கு கைவந்த ஸ்நேகமான சொல்!)

விஜயலக்ஷ்மியின் நினைவாகி, அவளுடைய திருமணத் திற்கென ஒரு பரிசுகொண்டு வருகிறார் அமெரிக்க நாட்டு வில்விங்ஸ்டன். அவர் எழுதின தமிழ்ப்பாடலே பரிசுப் பொருள். பாடுகிறார்.

'காற்று அசைவினிலே மரங்கள்
உன் கண்விழி போலாடும்
காலைக் குளிரிலே உன் குரல்
மீண்டும் தாலாட்டும்.
பச்சை வயல் மனது எல்லாம் நீ

பாதம் பதித்த இடம்.
இயற்கை வளர்த்தவளே, என்னுள்
இச்சை அறுத்தவளே !...''

வில்லிங்ஸ்டன் பாடி முடித்துக் கைகூப்புகிறார்.

விஜி பரிசு தாளாமல் தள்ளாடுகிறாள். கீழ் உத(ட்)டை அழுத்திக் கடித்துக் கொள்ளுகிறாள். கண்ணில் நீர் பொங்குகிறது. அவளுக்கு வலது புறத்தில் உட்கார்ந்திருந்த ரங்காவின் கையை இறுகப்பற்றிக் கொள்கிறாள்.

அவள் அலமந்து போனது ரங்காவுக்குப்புரிந்து போகிறது "யேசு மாதிரி இருக்கான் விஜி. யூத முகம் இவனுக்கு !"

விஜி என்கிற பெண் மனத்திற்குள் மகதலேனாவின் குணம் தோன்றுகிறது ! அவன் காலில் வாசனைத் தைலம் தடவிச் சரிய வேண்டும் போலிருந்தது. அவிழ்த்துப் போட்டுப் படுத்துக் கொள்வதை விட, மனசுக்குப்பிடித்த ஆணின் பாதங்களை பிடித்து விடுவதே சுகம் என்பது மகதலேனாவுக்குத் தெரிந்திருக்க வேண்டும் ! மாறாத காதலை, மரியாதையை இதைவிட எப்படி வெளிப்படுத்த முடியும் ?'—அவள் மெல்ல நகர்கிறாள், வில்லிங்ஸ்டன் மடியில் தலையைப் பதித்துக் கொள்கிறாள், விஜி.

விலிங்க்ஸ்டன் அவளுடைய தலையை தடவிக்கொடுக்கிறார். "சந்தோஷமாய் இரு, விஜி...சந்தோஷமாய் இரு...'' மெல்ல விஜியை விலக்குகிறார். கை கூப்புகிறார். சிரிக்கிறார், படி இறங்கிச் சத்தம் எழாமல் விடை பெறுகிறார்.

விஜி ; 'மதுவின் போதையோடு, நாலு ஆண்களுடன் கூடிய அயர்ச்சி நிறைவு !—' 'அம்மா, இது போதும் !

என்கிற சுகம் என்னுள் படர்ந்தது. 'நான் பிறந்தது அர்த்தமுள்ளது தான்!

விஜிக்குப் பொய்ப் பேசிப் பழக்கம் கிடையாது!
**So, Fine Mr. Balakumaran!**

இதோ :

## Shot No:2 :

ரிங்கா : "சொல்லேன்: நான் எப்படி ?"

"உங்க மனசுக்குப் பிடிச்ச பதிலா எதிர்பார்த்துக் கேக்கறேன் : பதில் சொல்றதும் சிரமம், கேட்டுக்கறதும் கஷ்டம் !" விஜி :

"எப்பச் சொல்லுவே ?"

"சொல்லவே மாட்டேன் !"

"ஏன் ?"

"நீங்க எப்படி இருந்தா என்ன ? எனக்கு இது முக்கிய மில்லை. என்னால் எதையும் அனுசரிச்சுப் போக முடியும் !"

"அது உன் இயல்பா ?"

"ஆமாம் !"

"கஷ்டமான இயல்பில்லையா ?"

"எனக்குன்னு ஒரு குறிக்கோளும் இல்லை ; அதனாலே அனுசரிச்சுப் போறதிலே கஷ்டம் இல்லை. 'எய்ம்' இருந்

தால்தானே தொலைவும், நடக்கிற கஷ்டமும்? வழியிலே வர்ற சிரமமும் பெரிசாய்த் தெரியும்?"

"சரி! அது முன்னாடிச் சமாச்சாரம். இன்னம் கூட 'எய்ம்' இல்லேங்கறது நல்லதா?"

"இன்னம் கூடன்னா?"

"கல்யாணத்துக்குப் பிறகு கூட!"

"கல்யாணத்துக்குப் பிறகு என்ன 'எய்ம்?"

"குழந்தை பெத்துக்கறது..."

"ஆசையா இருக்கா! 'ரங்கா' குழந்தைக்கு?"

"உனக்கு இல்லையா. விஜி?"

"இல்லை, ரங்கா!"

"அப்ப, வேண்டாம்னே வச்சுடுவோம்!"

"ச்சேச்சே...வந்ததுன்னா சரி; வரல்லேன்னாலும் சரி!..."

"புடவை ரவிக்கைக்கு ஆசைப்படாமல் இருந்தது சரி; எப்படி குழந்தை குடும்பம்கூட ஆசையற்றுப் போகும்? தெரியலையே?"

"ஆசையைப் பிரிச்சுப் பிரிச்சு 'இதில வேண்டாம்... அதுல வேண்டாம்'னு வச்சுக்க முடியுமா? பிரிச்சு வச்சுண்டா போலி ஆகிடாதா?"

"மனுஷா மேலே நம்பிக்கை போயிடுத்து இல்ல உனக்கு?"

"தோ!...ஒரு நாளும் இல்லை!"

விஜி தனக்குத்தானே கேட்டுக் கொள்கிறாள் இப்போது : 'என்னை மாற்றியது யார் ? நாகப்பனா ? வில்லிங்ஸ்டனா ? ராம் குமாரா ? பிச்சையா ? ரங்காவா ? இல்லை, என்னுள் கிளர்ந்த நானேதானா ? இது ஒட்டு மொத்தமும் சேர்ந்து இன்றைய எச்சமா ...?'

விஜியின் சுயப்பரிசோதனை தொடர்கிறது ; தொடர் சேர்க்கிறது: 'அப்படியென்றால், 'நாகப்பனே நமஹ' என்று தானே சொல்ல வேண்டும்? சொல்லுவோமா ?— 'நாகப்பனே நமஹ !... என் விரல்களை மெல்ல முத்தமிட்டுக் குளிர்வாய் பேசின இளைஞனே, என்னால் உந்தப்பட்டு என்னிலும் உயர்வானவனே, போற்றி !... வில்லிங்ஸ்டனே நமஹ !...இசையில் நரைந்து மீண்டு, இசையை விலக்கி, 'எதுவரினும் சரி' என்ற தன்மைக்கு நகர்ந்து, அன்பைச் சொல்வது மட்டும் வேலையாகிப் போன நண்பனே, போற்றி!... ராம்குமாராய நமஹ !— கரைந்தொழுகிப் பெண் உடம்பைக் காதலென்று கனவு கண்டு, என் நிர்வாணம் தெரிந்து...'

அப்போது:

ரங்கா குறுக்கிடுகிறார்: "இங்க எல்லா விஷயமும் குட்டிச் சுவர்னு நினைக்கறதினாலேதான் இப்படித் தோண்றதா "

"நான் அப்படி ஒண்ணும் 'கமெண்ட் அடிச்ச இல்லையே ?"

"ஆசையிருந்தா, ஆசை வந்ததுன்னா, பொறுப்பு சுமக்கணும். பொறுப்புச் சுமக்காமல் இருக்கறதுதான் ஆசையாயிடுத்து இல்லையா ?"

"என்ன, திடீர்னு எம்மேலே கோபம் ?"

"கோபமில்லை, விஜி. குழந்தை வந்ததுன்னா வரட்டும், வராட்டி சரின்னு சொல்றது நியாய மில்லையே?"

"விவரணையாச் சொல்லட்டுமா? ஆசைப்பட்டா, பொறுப்பு ஏத்துக்கணும்; பொறுப்பு ஏத்துக்கப் பயந்து ஆசைப்படாம இருக்கேன் என்பது விதண்டா வாதம். பொறுப்பு இல்லாமலா, இரண்டு தங்கைகளுக்குக் கலியாணம் பண்ணினேன்? ஆசைப்பட்டா, வளைக்கத் தோணும்; வளைக்க முடியாத ஆசையாயிருந்தா, மனசு அல்லல்படும். மனுஷாளாலே முடியாத காரியமாய்ப் போய், கடவுள் — ப்ரேயர்னு வரும் கேட்டது கிடைக்க லேன்னா, இடிஞ்சு போகும்படி வரும் இடிஞ்சிபோனா, அமைதி இருக்காது. யாரையாவது குத்தம் சொல்லத் தோணும். அதுக்கும் ஆள் கிடைக்கலேன்னா, தன் தலை யிலே தானே அடிச்சுக்க ஆத்திரம் வரும் ரிலேஷன்ஷிப் கெட்டுப் போகும். யாருமே சரியான உறவு இல்லைன்னு கோபம் வரும். கோபம் மறுபடி மறுபடி உறவைக் கொடுக்கும். நல்ல உறவு வேணும்னா, ஆசைப்படாம இருக்கிறது முக்கியம், சரியா?"

"நான் உன்னைக் கல்யாணம் பண்ணிண்டது குழந்தைக்கு ஆசைப்பட்டுன்னு சொன்னா?"

"சரி!"

"அப்போ உறவு சரியாதா? அனுசரிச்சுப்போறது அலுப்பாயிடாதா? எத்தனை நாளைக்குப் பணிஞ்சு இருக் கறது?... போறும்னு தோணாதா?"

"இது நியதி. ரோடு போட்டாச்சுன்னா, நடுவுல கோடு போட்டு, வலப்பக்கம், இடப்பக்கம்னு பிரிச்சுத் தான் இருக்கும். நான் வலப்பக்கம் போவேன்னு முரண்டு பிடிக்கலையே? இடப்பக்கம் தனியே நடந்தேன். இப்ப உங்களோடு நடக்கிறேன். ஸ்பீடா போன்னா. ஸ்பீடா

போறேன். மெள்ளப் போன்னா, மெள்ளப் போறேன். எனக்கு 'எய்ம்' இல்லைன்னு சொன்னது இது பத்தித் தான் !"

"குழந்தை பெத்துக்கறது ஆள் வளைச்சுப் பண்ற காரியமில்லையே ?"

"இல்லை !"

"அத்தை சொன்ன குத்து விளக்குப் பூஜை பண்ணேன் !"

விஜி வியப்புடன் ரங்காவை, அவளுடைய அகத்துக் காரரான ரங்காவைப் பார்த்து, அருகே நகர்ந்து அவரைத் தடவி கொடுத்து, "இத்தனை ஆசையா குழந்தைக்கு !" என்கிறாள்.

ரங்கா விழிகளை உயர்த்தி விஜியை, தன்னுடைய இனியவளான, 'இனிய பாதி' ஆன விஜி என்கிற விஜய லக்ஷ்மியைப் பார்க்கிறார்.

"சரி. பண்ணினாப் போச்சு; இதுக்கு இத்தனை சக்தி வளைக்கணுமா?"

"தாங்க் யூ, விஜி!"

'நன்றி சொல்வதை மற, என் புருஷனே!'—விஜி;

பாவம் ரங்கா ...!

**Poor Soul !... Sorry, Vijayalakshmi !**

**நிர்வாண உண்மைகள் :**

**பே**சாத நிர்வாணமான உண்மைக்குப் பேசுகின்ற நிதர்சனமான வடிவமைப்பாக அமைவதுதான் வாழ்க்கை!

ஆகவே, வாழ்க்கையில் நிர்வாணங்களும் நிதர்சனங்களும் கூடி முயங்குவதும் கூடிப் பிரிவதும் இயல்பு ஆகிறது. ஆகவே தான், வாழ்க்கை வாழ்க்கையாகவும் ஆகிறது; ஆக முடிகிறது. இந் நிலையில்தான், வாழ்க்கை பாவ புண்ணியங்களின் ஐந்தொகைக் கணக்காகவும் ஆகிறது; ஆக்கப்படுகிறது.

ஆலம் தோன்றிய திருப்பாற்கடலிலேதான் அமிழ்தமும் பிறந்தது.

பாவங்கள் தோன்றும் மனத்திலேதானே புண்ணியங்களும் தோன்ற முடியும்?

உதாரணம்: விஜி—விஜயலக்ஷ்மி.

விஜியை மறுபடி ஆராய்கிறேன்.

பாடல் வரிகள் சில கண்ணீரில் கரைகின்றன.

''காமன் வழங்கும் கவலைகள் ஒன்றா?
தரத்தைக் குலைத்துத் தன்மையைக் குலைத்து,
நிறத்தைக் கெடுத்து நினைவையும் அழித்து,
செய்யும் தொழிலையும் செய்யா தாக்கி,
காமக் குரங்கெனக் கண்டோர் இகழ,
மாமணி வாழ்வை மண்ணில் வீழ்த்தும்!''

அன்றும் இன்றும் என்றென்றுமே நம்முடனேயே உயிர் வாழ்ந்து கொண்டிருக்கின்ற மாண்புயர் அரசவைக் கவிஞர் தந்த 'காமசூத்திரம்' நமது விஜிப் பெண்ணின் கண்களையும் கவர்ந்திருக்கும் போலும்! அதன் விளைவாகவே முரண்பட்ட வாழ்க்கை இருட்டில் முரண்படாத விடியல் ஒளியைத் தரிசிக்கக் கூடிய நல்வாய்ப்பினைப் பெற்றிருப்பாளோ ரங்காவின் ஆசை-விஜி ?

தமிழ் எழுத்துச் சமூகத்தில் மஞ்சள் புல்லுருவி களாகவும், தமிழ் மக்கள் சமுதாயத்தில் சிவப்புத் துரோகி களாகவும் அபாய அறிவிப்புச் செய்யப்பட்டுவிட்டவர்கள் இனியாகிலும் அற்பமான குறுக்குவழிப் புகழையும் அநியாயமான வயிற்றுப் பிழைப்பையும் துறந்து, பாவ மன்னிப்புப் பெற்ற பரிசுத்தமான சமூக நலப் பார்வை பெற்று, விழிப்புப் பெற்ற இளைய தலைமுறையினருக்கு மத்தியில் தலை நிமிர்ந்து நடக்க விரும்பினால், அவர்கள் விஜியிடம் பாடம் படித்துக் கொள்வது நலம் பயக்கும் பணியாகவே அமையும்

உள்ளது உள்ளபடி வாழ்ந்த, வாழ்ந்து காட்டிய அதிசயமானதொரு வாழ்க்கைக்குச் சூட்டப்பெற்ற புனை பெயர்தான், விஜி, விஜயலக்ஷ்மி!

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள் சொல்வார்கள்; 'எண்ணங்கள் இல்லாமல் எந்த ஒரு செயலும் ஏற்படாது!'

விஜியின் எண்ணங்களே விஜிக்கு வாழ்க்கை ஆகிறது; ஆக்கவும் படுகிறது.

நல்ல எண்ணங்கள் சோதிக்கவும், கெட்ட எண்ணங்கள் சோதிக்கப் படவும் நேர்கின்றன.

அக்கினிப் பரீட்சைகள் தொடர்கின்றன.

அக்கினிப் பிரவேசங்கள் தொடர் சேர்க்கின்றன.

**விளை பலன்**

''டக்குன்னு கிழவியாய்ட்டா விஜி ?''

"எப்பவோ ஆய்ட்டேன், ரங்கா !"

அண்ணலின் அனுபவபூர்வமான, அனுபவரீதியான வாக்கு இது : 'மனைவி என்பாள் கணவனது ஒப்பந்த அடிமை அல்லள் ; அவள் அவனது தோழி ; அவனுக்கு உதவுபவள் ; அவனுடைய இன்ப துன்பங்கள் அனைத்தையும் சமமாகப் பகிர்ந்து கொள்பவள் ; அவனைப்போலவே அவளும் தன் வாழ்க்கையின் முறையைத் தீர்மானித்துக் கொள்ள உரிமை உடையவள் !"

இப்போது, அகல்யாவை விடவும் உண்மையானவளாகத் தரிசனம் கொடுக்கிறாள் நமது விஜயலக்ஷ்மி : ஆகவேதான், அவளே, பண்பு நிறைந்த நமது சமுதாயத்திற்கு ஒரு சத்தியச் சேதியாகவும் ஆகிறாள்.

பழம்பெரும் இலக்கிய விமரிசகரெனப் பழம் பெருமை படைத்திட்ட 'க. நா.சு.' எனப் பழக்கப்பட்டுப் பழகிவிட்ட க. நா. சுப்(பி)ரமணியம் 'விமரிசனக் கலை' என்னும் செறிவுப் பயன் தரும் தமது நூலில் "இலக்கிய மரபு இல்லாவிட்டால், சோதனை சாத்தியமில்லை—கடவுள் இல்லாவிட்டால், கடவுளை மறுக்கும் நாத்திகன் சாத்தியம் இல்லை என்கிற அடிப்படையிலே !''... என்பார்.

உண்மை ; விஜயலக்ஷ்மி சர்வ நிச்சயமாய்ப் பொருந்துவாள் !

நிலையாத மண் வாழ்க்கையின் நிலைத்த நிர்வாண நிலை, இப்போது 'கல்யாண முருங்கை' மரத்துக்கும் சொந்தமாகிறது !...

**All the best, my dear Brother... !** 

# 10 : ஒரு சிங்கம் முயல் ஆகிறது

**சிவசங்கரி**

**சிவசங்கரி : ஏன் ?**

என்னுடைய அன்பிற்குகந்த எழுத்துச் சகோதரி சிவசங்கரியை எனக்குப் பிடித்திருந்த காலம் ஒன்று இருக்கத்தான் இருந்தது— ! அப்பொழுது நான் தமிழ் மண்ணை மறந்தும் துறந்தும், கேரளத்தின் அழகான மண்ணிலே கால் பதித்திருந்த ஆனந்தமான சமயம் அது. அப்போதுதான், நான் 'சிவசங்கரி'யை ஆதியோடந்தமாக, இனம் கண்டேன். சகோதரி என் 'இனம்' அல்லவா? சிவசங்கரியை இனம் காண உதவியது என்ன, தெரியுமா ! ஏன் ?— ஆமாம் ; 'ஏன் ?' என்னும் கேள்விக்குறி !— கேள்விக் குறிப்பில், ஆச்சரியக் குறிப்பை உணர்த்தினாள், 'ஏன் ?' நாயகி ப்ரியா !— அப்பா ரகுவின் கழுத்தில் அன்பு மாலையாகி, கன்னத்தோடு கன்னம் வைக்கும் ப்ரியா அவள் !

ப்ரியாவில் நான் சிவசங்கரியைத் தரிசித்தேன். உயர்வான ஓர் எண்ணம் அப்போது சகோதரியின் பால் எனக்கு ஏற்பட்டதில் வியப்பிற்கு இடம் இல்லைதான். ஏனென்றால், நல்ல எழுத்துக்களென்றால், தேடிப் பிடித்து, ஏன் ஓடிப் பிடித்துங்கூட, 'உமா' இதழில் வெளியிட்டுப் பழகியவன் நான். மேலும், ஞானபீடப்பரிசிலைப்

பெற்ற 'ஓடக்குழல்' ஆசிரியரான கவி சங்கர குருப் அவர்களோடு ஏர்ணாகுளத்தில் அவரது வீட்டில் ஏலக்காய் மணம் கமழ்ந்திட உரையாடிய சமயத்திலும் சிவசங்கரியின் எழுத்தாற்றல் பற்றிப் பற்றோடும் பாசத்தோடும் உரைத்ததும் உண்டு.

ஆனால், நாட்கள் ஓட ஓட, சிவசங்கரி மிதிலைச் செல்வியாம் கற்பின் கனலி சீதாப் பிராட்டிக்கு விதிக்கப்பட்ட இலட்சுமணன் கோட்டை மறந்தும் துறந்தும் எங்கோ, எங்கேயோ, ஓடிக் கொண்டிருந்த ஓர் அவலத்தையும் அதே கேரளத்து மண்ணில் இருந்தபடியே உணர வேண்டிய துர்ப்பாக்கியமும் ஏற்படாமல் தப்பவில்லை.

தப்புச்செய்து விட்டாள் என் அன்புத் தங்கை !

அருமைமிகு தமிழ் மண்ணுக்குத் திரும்புகிறேன்.

அலங்கோலமாகக் கிடக்கிறது, 'பால் வாய்ப் பசுந் தமிழின்' பண்பு சார்ந்த படைப்பு இலக்கியம்.

பெருமைமிகு தமிழச் சாதியின் பீடுயர்த் தமிழ்ப் பண்பாட்டினை ஈவிரக்கமின்றிச் சோதித்த நய வஞ்சகர்களை நானும் சோதிக்கத் தலைப்படுகிறேன். 'இலக்கிய வட்டம்' க.நா. சு.வோ அல்லது, 'எழுத்து' சி.சு. செல்லப்பாவோ, அல்லது, சமுதாயப் பிரக்ஞை கொண்ட யாருமே தட்டிக் கேட்கத் துணியாத நெருக்கடியான நேரத்தில், நான் தனித்ததொரு— தனிப்பட்டதொரு சோதனையாளனாக ஆகிறேன்.

உளவு கிடைக்கிறது.

முதற் குற்றவாளியாகக் கையும் களவுமாகப் பிடிபடுகிறார் சுஜாதா !— சுஜாதா என்றால் கேரளத்துப் பூங்குயில் நட்சத்திரம் குமாரி சுஜாதாவா ? அதுதான் இல்லை !— 'இது, ஸ்ரீரங்கம் ரங்கராஜன் எனப்பட்ட சுஜாதாவாம் ! பணி புரியும் பங்களூரிலும் ஒரு

மூர்மார்க்கெட் இருக்கக் கண்டு வயிற்றுப் பிழைப்பை மர்மமான நாகரிகப் பாணியில் நடத்திக் கொண்டிருப்ப வராம் !

என் புலனாய்வு மேலும் தொடர்ந்த சமயத்தில், புஷ்பா தங்க(த்)துரை பிடிப்பட்டார் ; அப்புறம், இந்து மதி. அந்தச் சமுகக் குற்றவாளிப் பட்டியலில் சகோதரி சிவசங்கரியும் ஏன் இடம் பெற்றார், எப்படி இடம் பெற்றார் என்னும் ஆய்வில் நான் அக்கறையுடன் ஈடு படவும் நேர்ந்தது !

**இலக்கிய நீதிக்கு ஒரு விசாரணை !**

**நா**ன் எண்ணிப் பார்க்கிறேன் ;

தமிழ்ச் சமுதாயத்தின் பொது வீதிகளிலே, பொது மக்களின் நல்லாரோக்கியம் பாதிக்கப்படக்கூடிய சூழ் நிலை உருவாகும் பட்சத்தில்— உருவாக்கப்படும் பட்சத் தில், ஆளுகின்ற அரசு, தேவையான நேரங்களில் தேவைப் படும் நடவடிக்கைகளை எடுத்துச் சமுதாயத்தின் பொது வான, பொதுப்படையான ஆரோக்கியத்தை நல்ல தன மாக ஒரு நிலைப்படுத்தவே முனையும். மக்களின் வாக் குரிமைப் பலத்தில் ஆட்சியை அமைத்துக் கொள்ளுகின்ற அரசு தார்மீகப் பண்பின் கட்டமைப்பில் மேற் கொள்ளு கிற, மேற் கொள்ளத்தக்க ஜன நாயகக் கடன் இது ; கடமை இது !— ஆளுகின்ற சிறுபான்மையினருக்கும் ஆளப்படுகின்ற பெரும்பான்மையினருக்கும் ஊடாக ஊடும் பாவுமாகவும், உயிரும் உயிர்ப்புமாகவும் அமை கின்ற, அமைக்கப்படுகின்ற இந்தச் 'சேதுப் பால'த்தின் ஜீவாதாரத்திலே தான், பொது மக்களின் ஒளிமிக்க எதிர் காலமும், அப்பொது மக்களை ஆட்சி செலுத்துகின்ற அரசின் நல்லெண்ணம் மிகுந்த நல்ல காலமும் விதியாக அமைகின்றன.

உண்மைதான்; இவ்விதி, தமிழ்ச் சாதிச் சமுதாயத் திற்கு மட்டுமல்லாமல்; தமிழ்ச்சாதி சமுதாயத்தின்

மக்களுக்கும் பரவலாகவும் பான்மையுடனும் பொருந்தும்; பொருந்தவும் வேண்டும். இந்தப் பொருத்தத்தில்தான், சீரும் சிறப்பும் செல்வாக்கும் செம்மையும் பெற்றிலங்கும் தமிழ்ப் பண்பாட்டின் தலை எழுத்தே அடங்கியிருக்கிற தெனவும் சொல்லலாம், கொள்ளலாம்!— தமிழ்ப் பண் பாட்டை, அதாவது தமிழர் பண்பாட்டைப் பேணிக்காப் பதிலும் காத்துப் பராமரிப்பதிலும் சமுதாயத்திற்கு எந்த அளவு வீதத்திலே உறவும் உரிமையும் கடமையும் கட்டுப் பாடும் இருக்கின்றனவோ அதே வீத அளவிலான உறவும் உரிமையும் கடமையும் கட்டுப்பாடும் தமிழ்ப் பண் பாட்டை—தமிழர் நலப் பண்பாட்டைப் பிரதிபலித்துக் காட்டுகிற தமிழ்ப் படைப்பின் இலக்கியத்திற்கும் உண்டு என்பது நியாயமான, நேர்மையான, நீதியான ஏன் சத்தியமான உண்மையாகவும், ஆகிறது அல்லவா ?

ஆனால், 'தமிழுக்கும் அமுதென்று பேர்' எனப் பாவேந்தரால் புகழ்ப் பாமாலை சூட்டப் பெற்ற அமுதத் தமிழ் மொழியின் படைப்பிலக்கியப் பூங்காவின் இன்றைய நடப்பு என்ன ? நிலை என்ன ? நிர்ணயம்தான் என்ன ?

ஆராயப்பட வேண்டிய கேள்விக்கு உரித்தான, உரிய தான பதிலை ஆராயப் புகுந்தால், அழகு மணம் வீசிய படைப்பிலக்கியப் பூங்காவனத்தில் இன்று பரவிவிட்ட நச்சு நோய்க் காற்றின் ஆரோக்கியமற்ற நெடியின் விளை வாக, நம் தமிழ் மூச்சு நின்றுவிடுவது போன்றதோர் அபாயமான உணர்வுதான் தார்மீக அடிப்படையில் மிஞ்சு கிறது: எஞ்சுகிறது.

ஆகவேதான் இத்தகைய துரதிர்ஷ்டவசமான அவல நிலைக்கு, நெருக்கடி நிலைக்கு நமது தமிழ்ப்பண்பாட்டை யும் தமிழ்ப் பண்பாடு மேவிய தமிழ்ப் படைப்பிலக்கியத் தையும் ஆளாக்கி ஆட்படுத்திக் குற்றுயிரும் குலை உயிரு மாகத் துடிதுடிக்கச் செய்துவிட்ட சமுதாயப் பொது விரோதிகளான எழுத்துச் சமுதாயப் புல்லுருவிகளைச் சமுதாயத்தின் பொது வீதிகளிலே, சமுதாய மக்களின் முன்னிலையில் குற்றக் கூண்டுகளில் ஏற்றி நீதி

விசாரணை செய்து, இளைய பாரதத்தினருக்குப் புது ரத்தம் செலுத்திப் புது மலர்ச்சியை உண்டு பண்ணும் வகையில் தமிழ்ப் படைப்பிலக்கியத்தை நெறி முறையோடும் சத்தியத் தருமத்தோடும் கட்டிக் காத்திட வேண்டிய சமுதாயப் பிரக்ஞையோடு கூடிய சமுதாய நல்லெண்ணப் பொறுப்பும் எனக்கு ஏற்படலாயிற்று; எனக்கு மட்டுந்தான் ஏற்படலாயிற்று. அக்கறையோடு சிந்திக்கத் தொடங்கினேன். என் சிந்தனைகளைச் சுதந்திரம், அன்று அஞ்சல் செய்தது!

நான் பொறுப்புடனும் அக்கறையுடனும் மேற்கொண்ட மேற்கண்ட சமூக நலப் பொதுப்பணி பலன் பெற்றது, பயன் சொன்னது!—இளைய பாரதச் சமுதாயம் விழிப்படைந்து வருகிறது என்கிற நடைமுறை உண்மையில் என்னுடைய இலக்கியத் திறனாய்வு மனம் ஆறுதலடையவும் வழி பிறந்து விட்டது !

மீண்டும் எண்ணிப் பார்க்கிறேன் :

எண்ணங்கள் மீண்டும் சிலிர்க்கின்றன. சிலிர்ப்படைகின்றன; சில்லிட்டுப் போகின்றன!...

**மஞ்சளின் மகிமைக்கும் ஒரு மானப் பிரச்னை !**

நடைமுறை வாழ்க்கையில், மஞ்சளுக்கும் மகிமை உண்டு; மஞ்சள் நிறத்துக்கும் மகிமை உண்டுதான்!— ஆனால், இலக்கியத்தில் மஞ்சள் சேர்ந்து விட்டால், அது மஞ்சள் இலக்கியம் ஆகிவிடும்; அதற்கும் சிவப்பு விளக்கிற்கும் ஒரே அந்தஸ்து தானே கிட்டும்? ஆகவேதான், வாழ்க்கை நடைமுறைக்கு அபாய அறிவிப்பாக விளங்குகிற மஞ்சள் இலக்கியத்துக்குச் சட்டத்தின் விதியும் அபாய அறிவிப்பாக அமைகிறது, அல்லவா?

'செக்ஸ்' எனப்படுகின்ற தூய்மையான இனக்கவர்ச்சி அல்லது, பால் உணர்வுக்கு ஆசாபாசங்கள் விதிமுறை யாக அமையும். ஆனால், ஆபாசங்கள் விதி விலக்காகவே அமைய வேண்டும்.

விலக்கு விதியாக அமையத் தக்க ஆபாசங்களுக்கு வாசனைத் திரவியங்களைப் பூசிவிட்டாலும் கூட, அவை நாற்றமெடுக்கக் கூடிய அருவருப்பூட்டும் 'கச்சடா' களஞ்சியமான மஞ்சள் இலக்கியத்துக்கு உலகத்தின் எந்த நாட்டிலுமே சட்டபூர்வமாகவோ அல்லது, சமூக ரீதியாக வோ அல்லது, அரசியல், அடிப்படையிலோ வரவேற்புக் கிடையாது; கிடையவே கிடையாது!

அப்படிப்பட்ட நச்சு இலக்கியத்துக்கு 'பாரா உஷார்' போடும் அளவுக்கு, தடையை மீறி, விதியையும் மீறித் தோள்கொடுத்து வருகிற நாசக்காரக் கும்பலொன்று நமது அருமைத் தமிழகத்திலே நாளும், பொழுதும் வளர்ந்து வருகிறது; வளர்க்கப்பட்டு வருகிறதென்றும் சொல்லலாம். இவ்வாறாக, வளர்ந்து வருகிற அல்லது, வளர்க்கப்பட்டு வருகிற இந்தச் சமூகத் துரோகக் கும்பலில் தற்போது அல்லி தர்பார் மாத்திரம் நடக்க வில்லை; அர்ஜுனன் தர்பாரும் நடக்கிறது; இந்தச் சமுதாய விரோதச் சக்திக்கு இரண்டு நாயகர்கள் உண்டு; இரண்டு நாயகிகளும் இருக்கின்றனர். இவர்களின் சர்வாதிகாரச் சாம்ராஜ்யத்திலே முரண்பாடுதான் பொது விதி.

நீங்கள் சந்தித்த அந்த நாலு பேர்களையும் இப்போது திரும்பவும் திரும்பிப் பார்க்கிறீர்களா ?

1. சுஜாதா.

2. புஷ்பா தங்க(த்)துரை.

3. இந்துமதி.

4. சிவசங்கரி.

இப்போது, கதையொன்று சொல்வேன், கேட்பீர்களா ?

விசித்திரமான கதையாக்கும் !—ஒரு சிங்கம் ஒரு முயலாக ஆகிறதென்றால்,வேடிக்கை இல்லையா ? விநோதம் இல்லையா ?

வேடிக்கையையும் விநோதத்தையும் செய்து காட்டுவது யார், தெரிகிறதா?— சிவசங்கரி!— ஒரு காலத்தில் என் நல்லெண்ணத்துக்குப் பாத்திரமாக விளங்கிய என் எழுத்துச் சகோதரியான சிவசங்கரி !

சிவசங்கரி தயாரித்து எழுதிய கதைதான்: 'ஒரு சிங்கம் முயலாகிறது !"

சிங்கத்தை, அசிங்கத்தையல்ல, சிங்கத்தை எண்ணுகிறேன்; முயலும் என் எண்ணங்களில் குதித்துக் கலக்க முயலுகிறது! இப்படிப்பட்ட சோதனையான கட்டத்தில், நான் எழுத்துச் சமுதாயத்தின் தீய சக்திகளைச் சாடி, அவர்களுடைய 'செக்ஸ்' கண்களைத் திறக்க முயன்று பாடின புதுக் கவிதையும் இந்தக் கூட்டுக் கும்மாளத்தில் கூட்டுச் சேர்கிறது. கல்கி ராஜேந்திரன் பாராட்டி வெளியிட்ட பாடல் அது.

நீங்களும் கேளுங்கள்:

"அந்தரங்கப் பாலுணர்வின்
அர்த்த ஜாம முரண்களைத்
தேடிச் சரணடைந்து,
மேலைக் காற்று வாங்கி,
மேல் மூச்சும் வாங்கி,
மோகக் காம வெறியுடனே
முரண்பாட்டின் உச்சி நின்று,
கூடுவிட்டுக் கூடு பாய்ந்து,

முறை பிசகி.
நெறி தவறி,
படி தாண்டி,
பக்தியையும் தாண்டி,
தமிழ் மண்ணை மறந்து,
தமிழ்ப் பண்பையும் மறந்து,
மாதவம் செய்திட்ட
மங்கையர் தம் கற்பைச்
சிவப்பு விளக்கடியில்
சிவப்பு விளக்கேந்திக்
கூறு கட்டி,
ஏலம் போட்டு,
'பொன்னகரம்' தொடர்ந்து
திருட்டுக் கதை சொல்லி
எழுத்து விபச்சாரம் செய்து.
இன்னாதன கூறிடும்
சமுதாயத் துரோகிகளின்
மஞ்சள் எழுத்திலே தான்
சொர்க்கம் இருக்கிறதா ?
அல்லது —
பாவப்பட்ட எழுத்துக்களைப்
பரவசமாய் ரசித்துப்
பரவசமாய்க் கெட்டலையும்
அப்பாவிகளின்
அப் பாவிகளின்
ஆபாச ரசனையில்தான்
இருக்கிறதோ சொர்க்கம் ?
ஊஹூம்;
இல்லை.
இல்லவே இல்லை! ...''

சரி; இப்பொழுது சிங்கம் எப்படி முயலாக முடிந்தது என்கிற கதையைப் பார்க்கலாம். முன்னர், தமிழ்த்

திரைப்படம் ஒன்றிற்கு விளம்பரம் செய்யப்பட்டிருந்த மாதிரி, சிவசங்கரி கதைக்கு, அதாவது, சிவசங்கரி தயார் செய்த கதைக்குப் பெயர்தான் 'ஒரு சிங்கம் முயல் ஆகிறது!'—இதுவேதான், 'அவன், அவள், அது!' என்கிற 'புரட்சி' கரமான பெயரில் தமிழ்த் திரைப்படமாக வெளி வந்து, உங்களையும் என்னையும் சோதித்துவிட்டு, அந்த வயிற்றெரிச்சல் தாளாமல் தோல்வியோடு பிறந்த வீட்டி லேயே புகுந்தும் விட்டது அல்லவா ?

**பேனாக்கள் : 3— கரு : 1**

**ம**றுமுறையும் நினைவுப்படுத்திக் கொள்ளுங்கள்:

'லக்ஷ்மி' — ''அவள் தாயாகிறாள்!''

சிவசங்கரி — ''ஒரு சிங்கம் முயலாகிறது!''

இந்துமதி — ''மணல் வீடுகள்!''

இந்த மூன்று கதைகளும் சுற்றி வளைத்தும், சுற்றாமல் வளைத்தும், சுற்றிச் சுற்றியும் வருகின்ற ஒரு பிரச்சினை, ஒரே பிரச்சினை, குழந்தை பிரச்சினை தான் எனவும், இந்தக் குழந்தைப் பிரச்சினைக்குத் தமிழ் நெறிமுறை சார்ந்த பண்பட்ட நாவலாசிரியை லக்ஷ்மி டாக்டர் திரிபுரசுந்தரிதான் சத்தியமான முன் னோடி எனவும் எழுத்துத் தங்கையாம் இந்துமதியை இலக்கிய நீதி விசாரணை செய்தபோது, முன்னமேயே குறிப்பிட்டிருந்தேன்! — நினைவிருக்கட்டும்; நினைவிருக் கவும் வேண்டும் அல்லவா ?

சரி.

'அவள் தாயாகிறாள்!' என்ற மகுடம் தரித்தாற் போன்ற ஓர் அருமையான, பண்பாடு நிரவிய தமிழ்க் குடும்பக் கதையைச் சிந்தித்துப் படைத்த 'லக்ஷ்மி' ஓர்

அருமையான, தமிழ்ப் பண்பாடு மேவிய தமிழ் நாவலா சிரியை என்பதையும் நாம் நெஞ்சில் இருத்திக் கொள்வது நலம்.

லக்ஷ்மியின் மேற்கண்ட நவீனத்திலே மணியன் 'லக்ஷ்மி'யை இவ்வாறாக நமக்குப் பழக்கப்படுத்துகிறார்: ''அமரர் வாசன் அவர்கள் கண்டுபிடித்து அறிமுகப் படுத்திய மருத்துவக் கல்லூரி மாணவி லக்ஷ்மி. மருந்துகள் கசக்கும்: ஆனால்; லக்ஷ்மியின் நாவல்களில் சோகம்கூட சுவையாக இனிக்கும் !"

'அவள் தாயாகிறாள் !" கதையை நாம் இப்போது எண்ணிப் பார்க்க வேண்டும்.

> மனோகர் தம்பிரானின் ஆசை மனைவி திலகா. அவளுக்குக் குழந்தை என்றால் ஆசை; பிராமணன். ஆனால், அவளுக்குக் குழந்தைப் பாக்கியம் கிட்டவில்லை. இந்த துர்ப்பாக்கியத் திற்குக் காரணம், உண்மையில் அவள் அல்ல தான்; அவளுடைய அன்புக் கணவனின் உடற் கோளாறுதான், குழந்தைப் பேற்றுக்குக் குறுக்கே விதியாகச் சிரிக்கிறது! இவ்வுண்மை நிலைமையை அறிந்த மனோகர், அதாவது, திலகாவின் அன்பு சால் கணவனான மனோகர், தன் அருமையான மனைவியிடம் சோதனையான யோசனை ஒன்றை வெளியிடுகிறான். (கதை, தென் ஆப் பிரிக்காவில் நடக்கிறது) ''திலகா, டாக்டர் மில்லர் இன்னொரு யோசனையைச் சொன் னாரே, அதைப் பத்தியும் நீ எங்கிட்டே மறைச்சே!... எங்க அண்ணன் ஒப்புதல் கொடுத்தா, அவர் உதவியோடு செயற்கைக் கருத் தரிப்பு முறையைப் பரீட்சை செய்து பார்க் கலாம்னு சொன்னாரே, டாக்டர்?'' என்கிறான் மனோகர்.
>
> ''உங்களுக்கு இதைப் பேசக்கூட அசிங்கமா இல்லே? என்னதான் வெள்ளைக்காரன் நடு

விலே நாம் வந்து வாழ்ந்துட்டாலும், அவர் களாட்டம் உடுத்துக் கொண்டு, இங்கிலீஷ் பேசிக் கொண்டிருந்தாலும், நாம வெள்ளைக் காரர்கள் ஆகி விடமாட்டோமே! அவர்களுக்குச் சரின்னு படுற சில கொள்கைகள் நம்ம மனசுக்கு இயற்கைக்கு மீறின, இயற்கைக்கு ஒவ்வாத முரணாக, தப்பாகவே தோணும். பல காலமாய் நம்ப ரத்தத்திலேயே ஊறிப் போன சில பழக்க வழக்கங்கள், கொள்கைகளை எப்படிங்க நாம மாற்றிக்க முடியும்?''—திலகா.

“உனக்குச் செயற்கைக் கருத்தரிப்பு முறையிலே நம்பிக்கை இல்லையா ? வெளியிலே யாருக்கும் தெரியாமல் இதை டாக்டர் ரகசியமாக முடிச்சுக் கொடுப்பார்!''—மனோகர்.

மறுபடி திலகா அசல் தமிழச்சியாகிச் சீறுகிறாள்; “மறுபடியும் அதைப் பேசாதீங்க. எனக்கு ரொம்ப அருவருப்பாய் இருக்குது. இன்னிக்கு ‘லிப்ஃடி’லே டாக்டரைப் பார்க்கப் போனபோது, பக்கத்திலே நின்ற வெள்ளைக்காரன் கழுத்திலேருந்து வழிஞ்ச வேர்வைத் துளி ஒண்ணு என்னோட கையில்லே விழுந்திடுச்சு. அந்த அசிங்கத்தையே என்னாலே தாள முடியலை. வீட்டுக்கு வந்ததும், கையை ‘டெட்டால்’ போட்டுக் தேய்ச்சு தேய்ச்சுக் கழுவினேன். அப்படி இருக்கிறச்சே, செயற்கை முறைப்படி, இன்னொருத்தனுடைய... சே உங்க அண்ணன் எனக்கும் அண்ணன் உறவுபோல... அதுக்கப்புறம் அவர் முகத்திலே நான் எப்படி முழிப்பேன்?... இத்தனை அவமானமும் அசிங்கமும் பட்டு, ஒரு குழந்தையைப் பெற்றுக் கொள்ள வேண்டியது நமக்கு அவசியந்தானா?' என்று பூ நாகமாகச் சீறிப் புலியாகப் பாய்ந்து, ஜாதிப் பூவாக உயர்கிறாள் திலகா!

திருமதி லக்ஷ்மி அவர்கள் நேர்மைத் திறம் கொண்டு சமூகப் பிரக்ஞையுடன் படைத்து உருவாக்கிய திலகா !

ஆனால், இந்துமதியின் கதையை அதாவது, இதே குழந்தை அடிப்படையில் இந்துமதி சேகரித்து எழுதிய ''மணல் வீடுகள்' கதையை நீங்கள் அறிவீர்களே ?— புவனா...க்ருபா: ஜோடித் தம்பதி. ஜோடிக்குப் பொருள் சொல்ல. இங்கேயும் பிள்ளை இல்லை. ஆனாலும், இவர்களுக்குக் குழந்தை வேண்டும்.க்ருபா மூலம் குழந்தையைப் பெற்றுக் கொடுத்து விட்டுத் திரும்பிக் கூடப் பார்க்காமல் சினிமாவில் வருகிற மேனகை மாதிரி மறைந்து விடக் கூடிய பெண் ஒருத்தியும் இப்போது அவர்களுக்குத் தேவைப்பட்டது ; கிடைத்தாள் ஸஸி என்னும்படியான தாசி !— ஆமாம், தாசியேதான் ; இல்லையென்றால், அவள்—ஸஸி, ''மனசிலே க்ருபாவுக்கு இடம் கொடுத்த பின், வெறும் உடம்பு என்ன பெரிய விஷயம், சாந்தி?" என்பாளா ? தமிழகத்துப் பண்பாட்டின் மரபார்ந்த நெறிமுறைகளினின்றும் முரண்படுவதுதான் வாழ்க்கை என்பதாக நியாயப்படுத்திப் பேசத் துணிந்த இந்துமதியின் சஸி பாவம், பரிதாபத்துக்குரியவள் ! ஆடி நாளிலே பண்புச் சிறகடித்துப் பறக்க முயன்று. உயரப் பறக்கவும் முயன்று கொண்டிருந்த அழகான வானம்பாடி, ஊர்க் குருவியாகி, உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாக ஆகிவிடமுடியாது என்கிற நல்ல பாடத்தை இந்தத் தமிழ்ச்சாதியிடமிருந்து கற்றுக் கொள்ள பொன்னான சந்தர்ப்பம் கிட்டியும் கூட, அந்தப் பொன்னான சந்தர்ப்பத்தைப் பண்போடு பயன்படுத்திக் கொள்ளாமல் அந்த அழகான வானம்பாடி தட்டித் தடுமாறி வருகிறது !— இந்துமதி திருந்தினாலும் சரி, திருந்தாவிட்டாலும் சரி ! தமிழ்ச் சமூகத்தின் இளந்தலைமுறை, இப்போது பொறுப்புடன் விழிப்புப் பெற்று விட்டது !

**என்** மதிப்பில் உயர்ந்த கலைஞர் மு. கருணாநிதி எழுதிய 'வெள்ளிக்கிழமை' என்னும் நவீனம் குறித்த

திறனாய்வில் நான் குறித்திருந்தது இப்போது சகோதரி சிவசங்கரிக்குக் 'குறிப்பு' ஆகவேண்டும். 'சமுதாயத்தில் அங்கங்கே இலைமறை காய்களாக நிலவி வருகின்ற சீர்கேடுகளையும் அவலங்களையும் அநியாயங்களையும் அநீதிகளையும் சித்திரித்துக்காட்ட முனையும் சிந்தனைச் சிற்பிகள், மேற்கண்ட குறைகள் களைந்தெறியப்பட்டுச் சீர்திருத்தம் பெறுவதற்கான நல்ல வழியையும் காட்டத் தவறிவிடக் கூடாது!— ஆக்கப்பாடுடைய எழுத்துக்கள் தாம் சமூகத்தை வாழவைக்க முடியும்!'

ஆனால் சிவசங்கரி! சாதித்தது என்ன? "தாமு! சிங்கம்னு நினைச்சது முயல்னு இப்பத்தான் புரிஞ்சுது. நான் சிங்கக்குட்டிக்குத்தான் ஆசைப்பட்டேன்; எனக்கு முயல் குட்டி வேண்டாம். எனக்கு முயலும் வேண்டாம்; முயல்குட்டியும் வேண்டாம். லாயர் லக்ஷ்மணனைக் கூட்டிண்டு உடனே வா; எனக்கு இப்பவே, இந்த நிமிஷமே, டைவோர்ஸ் கேஸ் ஃபைல்பண்ணணும்!" லாவண்யாவுக்கு இரவல் குரல் கொடுத்துப் புலம்பகிறார் பாவம்!

சமூகப் பாவங்கட்குப் புண்ணியம் தேடினாரா சகோதரி? Boldtheme இதுதானா?— தமிழ்க் குடும்பங்கள் ஏற்றுக் கொள்ளவில்லையே?

லக்ஷ்மியின் திலகா எங்கே?

இந்துமதியின் சஸி எங்கே?

சிவசங்கரியின் மேனகா எங்கே?

சிவசங்கரியும் இந்துமதியும் காணாமலே போய் விட்டார்கள்!...

ஆனால், வணக்கத்துக்குகந்த லக்ஷ்மி, பண்பு காக்கும் தமிழ்க் குடும்பங்களில் நிரந்தரமாகவே வாழ்வார்!

**சிவசங்கரியின் குழந்தைப் பிரச்னை**

இனி, சிவசங்கரியின் குழந்தைப் பிரச்னைதான் மிச்சம்!

சிங்கம்—முயல் கதையைச் சொல்லட்டுமா?

லாவண்யா பணக்காரி; 'லிப்ஸ்டிக்' 'சார்லி செண்ட்' என்று ஒப்பனைப் பொருட்களை ஒய்யாரமாகத் துணைக்குச் சேர்த்துக் கொள்பவள் சாமான்யமானவளாக இருக்கமுடியுமா?—அவளுக்கு ராம் என்றொரு கணவன்; ஒரேயொரு கணவன் தான்; அவனும் பணக்காரன் தான். ஆனால், அவனால், அவளுக்கு அவள் ஆசைப்பட்ட மாதிரி குழந்தை ஒன்றைக் கொடுக்க இயலவில்லை!—அதாவது. லாவண்யாவுக்கு அவளது கணவனான ராம் மூலம் குழந்தையைப் பெறக்கூட பாக்கியம் இல்லை!—ஆனாலும், அவளுக்கு எப்படியும் ஒரு பாப்பா வேண்டும்!—அவளுடைய ஆசையை நிறைவேற்ற தாமு கிடைக்கிறான்! இப்பணியை நிறைவேற்றிக் கொடுக்க அவனுக்கு மேனகா என்ற தமிழ் வேசி ஒருத்தி, அழகுச் சிலை கிடைக்கிறாள். லாவண்யாவின் மூளை வெகு சுறுசுறுப்பானது; இயங்குகிறது, இயக்கவும் செய்கிறது. இப்போது, 'டெஸ்ட் ட்யூப் பேபி' சிக்கலாக அமையவில்லை. 'ஆர்டிஃபிஷியல் இன்ஸெமினேஷன்!' (Artificial Insemination) தான் பிரச்சினை!— அதாவது, கணவனின் விந்து மேனகாவுக்கு ஊசி மருந்தாகச் செலுத்தப்பட்டு, அதன் விளைவாக, அவள் கருத்தரித்து, தன் கணவன் ராமின் குழந்தையைப் பெற்றுத் தனக்குக் கொடுத்து விட்டு, அப்போதே பிரிந்து விடுவாள் மேனகா என்பது, லாவண்யாவின் அதிதமான செயல் ஏற்பாடாகவும் அமைகிறது; அவள் கனவும் அதுவேதான்!

லாவண்யா சமர்த்தாகக் கணவன் ராமிடம் பேசுவதைக் கேளுங்கள் : "...மேல் நாட்டிலே ரொம்ப சகஜமாய் நடக்கிற இந்த முறைக்கு ஏனோ நம்ம நாட்டிலே வரவேற்பே இல்லே. இதிலே என்ன தப்பு ராம்... சோரம் போறோமா ? இல்லை, கெட்டுப் போறோமா ? ஒண்ணுமில்லே. உயிரைக் காப்பாத்த ரத்தம் ஏத்திக்கிற மாதிரி, நொந்த மனசைக் காப்பாத்த ஒரு தாம்பத்தியம் உடைஞ்சி போயிடாமல் காப்பாத்த, ஒரு இன்செக்ஷன் மூலம் குழந்தையை உண்டு பண்ணுகிற சக்தியை ஏத்துக்கிறோம் ! ஜஸ்ட் ஒன் இஞ்செக்ஷன் !— அவ்வளவுதான் ! உங்களைப் பொறுத்தவரைக் கும் இதிலே. நீங்க வேறு எந்தப் பொறுப்பையும் ஏத்துக்க வேண்டாம். ஒரு நாள் அஞ்சி நிமிஷம் டாக்டரைப் பார்த்துட்டு வந்துடறதோட உங்க வேலை முடிஞ்சுடும். அந்தப் பொண்ணு யாரு. எப்படிப்பட்டவ, கறுப்பா — சிகப்பாங்கிற விவரங்கள் உங்களுக்குத் தெரிய வேண்டிய அவசியம் இல்லே. பத்து மாசம் கழிச்சு, நம்ம குழந்தை ஒண்ணை உங்க கண்ணிலே நான் காட்டறேன். தட் இஸ் ஆல் ! — உங்களுக்கு வேதனையோ, கஷ்டமோ, சங்கடமோ இல்லாமப் பார்த்துக்கறது என்பொறுப்பு. நான் இந்தனை வருஷங்கள்லே உங்ககிட்ட எதுக்குமே இப்படிக் கெஞ்சினதில்லே, ராம் !... இப்ப கெஞ்சறேன். என் இந்த ஆசையை மட்டும் நிறைவேற்றித் தந்திருங்கோ !...ப்ளீஸ்... நீங்க ப்ராமிஸ் பண்ணி இருக்கேள்... ஞாபகம் இருக்கட்டும், ராம் !"

தமிழ்ப் பெண்ணாம் லாவண்யா மூலம் தமிழ்ப் பெண்ணாம் தங்கை சிவசங்கரி எப்படிப் பேசுகிறாள், கேட்டீர்களா ?

நல்லகாலம் !

கதை முடிந்து விட்டது !

கடவுளே !!— தமிழ்க்கடவுளே ! தமிழ்த் தாயே !...

இந்தத தமிழ்ச் சமுதாயத்திற்கு இன்றைய நிலையில் இம் மாதிரியான மேனகைத் தாசிகள் தேவையில்லை யென்னும் தார்மீக உண்மை நிலையை, அப்போதே சாங் கோபங்கமாகவும் தீரத்தெளியவும் அடித்துச் சொல்லி எடுத்துக் காட்டி, வேசி மேனகாவை 'ஓடு. ஓடு !' என்று துரத்தி விரட்டியடித்த நமது அருமைத் தமிழ்ச் சமுதாயத் திற்கு. அதாவது, நல்ல மனிதர்களே நல்லதொரு சமுதாய மாக ஆகி வரும் பெருமை மிக்க நமது தமிழ்ச் சமுதாயத் திற்கு என் நன்றியறிவை இந்நேரத்திலும் மீண்டும் தெரிவித்துக் கொள்வேன் !

நம்முடைய வழி வழி வந்த பாரம்பரியப் பண்புக்கும் பண்பாட்டுக்கும் பொருந்தாத, பொருந்த முடியாத, பொருந்தக் கூடாத விபசாரத்தை சமர்த்தாகவே நியாயப் படுத்திச் சகோதரிகள் சிவசங்கரியும் இந்துமதியும் கூடிக் குலவித் தயாரித்த 'இரண்டு பேர்' என்கிற குமுதமான தொடர்கதைக்கு இப்படியும் ஒரு விமரிசனம் வந்ததைச் சோதரிகள் மறந்திருக்க மாட்டார்கள் : ''இரண்டு விலை மாதர்கள் சேர்ந்து ஒரு கதை எழுதினால் எப்படி இருக்கும் ?— 'இரண்டு பேர்' தொடர் மாதிரி இருக்கும் !''

சிவசங்கரி இப்போதாவது ஆற அமரச் சிந்தித்துப் பார்ப்பது நலம்.

ஒரு வேளை, இந்துமதிக்கும் இனக்கவர்ச்சி முரண் களின் பாற்பட்ட அசிங்கமான வெறி தணியத் தொடங்கக் கூடும் !

தலை நகர்த் தம்பதி டாக்டர் சாலை இளந்திரையன் —டாக்டர் சாலினி இளந்திரையன் அண்மையில் பேசிய வற்றையும் நான் எடுத்துக் காட்ட வேண்டிய நல்ல நேரம் இது :

''இன்றைய எழுத்தாளர்களில் 'சிலர் ஆபாசத்தையும் பெண்ணின் கவர்ச்சியையும் குறிக்கோளாகக் கொண்டே கதைகள் எழுதுகிறார்கள். அதுதான் வயிற்றுப் பிழைப்புக்குக் குறுக்குவழி என்கிற நிலைமையும் உருவாகி விட்டது. இதனால் எழுத்துத் துறையிலே நச்சிலக்கியங்கள் தாம் மலிந்தனவே தவிர, நல்ல இலக்கியம் வளரவில்லை. எழுத்தை வைத்துத்தான் பிழைக்க வேண்டுமென்ற நிலை இல்லாத, நல்ல வருவாய் கொண்ட புகழ் பெற்ற கதை ஆசிரியர்களும் ஆசிரியைகளும் தங்கள் தரத்திலிருந்து இறங்கி, எழுத்து விபச்சாரம் புரிவது வருந்தத் தக்கது !"

'சாகித்ய அகாதெமி' பரிசு பெற்ற சமூகநலப் புரட்சி எழுத்தரசர் பி. எஸ். ராமையா அவர்கட்கு நடந்த பாராட்டு விழாவில் தலைமையேற்று உரையாற்றிய பாரதத்தின் அந்நாள் நிதி அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்களும் இவ்வாறு வருந்தினார் :

"இலக்கியம், இலக்கியமாக இல்லாமல் வியாபாரப் படுத்தப்படுகிறது ! இதை நாம் ஒரு நல்ல முடிவுக்குக் கொண்டு வரவேண்டும், தங்கள் தன்மானம் காப்பாற்றப் பட, நமது பெண்கள் போராட வேண்டும் !''

— 'தாய்' : ஜூன் 1983 :

முடிவாகக் கூறுவேன் :

நியாயங்களை நியாயப்படுத்த வேண்டியது கிடையாது.

ஏனென்றால், நியாயங்கள் தாம் வாழ்க்கையாகப் பரிமளிக்க வேண்டும் '—இதுவே, தமிழ்ப் பண்பாடு, பண்பாடுகின்ற வேத விதி !

அன்பிற்குகந்த என்னுடைய அருமைத் தங்கை சிவசங்கரி இனியேனும் மனம் திருந்தி, என்னுடைய பாச நெஞ்சில் பால் வார்க்கட்டும்!

'மணியன்' ஆசிரியர் மணியன் வழங்கிய அணிந்துரையைச் சகோதரியின் மேலான கவனத்துக்கு மீண்டும் வைக்க வேண்டிய சமூக நலப் பொறுப்பும் எனக்கு இப்போது ஏற்படுகிறது.

"இன்றைய எழுத்தாளர் பட்டியலில் முதல் வரிசையில் சிவசங்கரியின் பெயர் இருக்கிறது. அந்தப் பெருமையில் எனக்கும் பங்கு உண்டு!"

*1979* காலக் கட்டத்தில் 'ஏன் ?' என்னும் கதைமூலம் சாந்தி என்கிற உயிரோவியத்தை உணர்ந்து படைத்துத் தமிழ்ப் பண்பு மணம் பரப்பிய சிவசங்கரியை நான் திரும்பவும் சந்திக்க ஆசைப்படுகிறேன்!...

ஆகவேதான், நான் மீண்டும் நினைவூட்டுகிறேன்: அக்கினிப் பிரவேசம் விதியின் நாயகிக்கு மட்டிலும் சொந்த பந்தம் கொண்டதாக அமைந்திட வேண்டாம்!—சகோதரி சிவசங்கரியும் அக்கினிப் பரிட்சைக்குத் தயாராகட்டுமே!— "**O. K. Sivasangari ?**" ○

# மீண்டும் சந்திப்போம் !

## ஜெயகாந்தன் முதல் சிவசங்கரி வரை :

**தமிழ்ப் படைப்பிலக்கியத்தில் :**

தமிழ் இனம் பழமை மிக்கது ; தொன்மை மிகுந்தது. 'கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு முன் தோன்றி மூத்த குடி' தமிழ் இனம்.

'சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே ! என்பது அமர கவியின் அமர வாக்கு.

டபிள்யு. எச். ஹட்ஸன், (W.H. Hudson) சொல்வார் "வாழ்க்கையை மொழி வாயிலாக உணர்த்துவதே இலக்கியம்".

சங்கம் வளர்த்த தேன் தமிழ் வாயிலாகச் சீர்மைமிகு தமிழ்ச் சாதி சமூகத்தின் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் ஆன்மாவாக விளங்குகிறது, தமிழின் படைப்பு இலக்கியம்.

இடையிலே, சோதிப்பு நடந்தது.

தமிழ்ப்படைப்பிலக்கியத் துறையிலும் ஜனநாயக தர்மம் அனுமதிக்கப்பட வேண்டுமென்று நியாயமாகவே கவலைப் பட்டவர் என் அன்பின் தோழர் திரு த.ஜெயகாந்தன். அந்த

நம்பிக்கையில், ஓர் அக்கினிப் பரிட்சையாக, அருமை மிகு கங்காவைப் படைத்தார்!— கங்கா பேர் எடுத்து விட்டாள்; பேர் சொல்லி விட்டாள்!

விளைவு :

படைப்பின் இலக்கியத் துறையிலும் அனுமதிக்கப்பட வேண்டிய ஜனநாயக தருமத்தையும் சூது கவ்வ நேர்ந்தது!— நமது தமிழ்ச் சமூகத்தைச் சார்ந்த தமிழ்க் கதாசிரியர்கள் பலரும் தமிழ்க் கதாசிரியைகள் சிலரும் ஜெயகாந்தனைத் தழுவ நினைத்து, கங்காவைத் தழுவினார்கள்.

பலன் :

பிள்ளையார் பிடிக்கக் குரங்காக முடிந்தது கதை!

கங்காவை இனம் காண முடியாமல் அவர்கள் தோற்றுப் போனார்கள்!— அத்தோல்வியில் விளைந்தது தான், மஞ்சள் இலக்கியம்.

எழுத்துச் சமூகத்தின் புல்லுருவிகளாக உருமாறி, உருக்காட்டுப் படலம் நடத்தத் தொடங்கியது நாசகாரக் கும்பல் ஒன்று!

சிவப்புக் கதைகளும் மஞ்சள் கதைகளும் வெளிப் படுத்தப்பட்டு, நல்ல மக்களின் வெள்ளை உள்ளங்கள் பாழ்படவும் சீரழியவும் தொடங்கின.

ஆனால், சமூக நல வாழ்வுக்கு அச்சுறுத்தலாக அமைந்த எழுத்துச் சமுதாயப் புல்லுருவிகளின் புகழ் குறுக்கு வழியில் கொடிகட்டிப் பறக்கத் தொடங்கியது!...

வரலாற்றில் பெருமை கண்ட அருமை மிகு தமிழ்ச் சமுதாயத்தின் பெருமை மிக்க தமிழ்ப் பண்பாட்டைச் சோதித்த தமிழ் எழுத்துத் துரோகிகளை—எதிரிகளைத் தமிழ்ச் சமுதாயத்தின் குற்றவாளிக் கூண்டிலேயே நிறுத்தி வைத்து, சோதனை செய்தேன்.

விசாரணை செய்தேன்.

சத்தியம் வென்றது.

தருமம் வாகை சூடியது.

உடன் பிறந்தே கொல்லும் வியாதியாகப் பீடித்த தீய சக்திகளை இப்போது தமிழ்ச் சாதி புரிந்து கொள்ளத் தொடங்கிவிட்டது; சமூகத்தின் நாசகாரக் கும்பலாக விளங்கி இன்னமும் நாறிக் கொண்டிருக்கிற எழுத்துத் துரோகிகளையும் அத்துரோகிகளுக்குப் பால் வார்க்கும், ஊக்கும், பாலுணர்வை வார்க்கும் பத்திரிகையாளர் களையும் இளைய பாரதத்தினர் இனம் காணத்தொடங்கி நாட்கள் பல ஆகி விடவில்லையா ?

திறனாய்வு வகையில் முதல் நூல், 'கல்கி முதல் அகிலன் வரை'.

அடுத்தது,இது: 'ஜெயகாந்தன் முதல் சிவசங்கரி வரை'

இதையடுத்துவரும் 'சாண்டில்யன் முதல் வாஸந்தி வரை' என்ற நூலில், உண்மையான தமிழ்ப் படைப் பிலக்கியப் பணியாளர்கள் இன்னும் சிலரையும் நாம் சந்திப்போம் :

**மீண்டும் சொல்வேன் !**

○ தமிழ்ப் படைப்பு இலக்கியம் மறுபடி புத்துயிர் பெறத் தொடங்கிவிட்டது !

○ சமூகப் பிரச்சினையும் சமூகப் பார்வையும் அர்த்தமுள்ள தருமமாகவும் பக்திமிக்க சத்தியமாகவும் ஆகி வரத்தொடங்கி விட்டன.

○ இனி, வாழ்க்கை; தமிழ் வாழ்க்கை, தமிழ் வாழ்க்கையாகவே அமையும்.

○ ஆமாம்; ஆபாச இலக்கியத்தின் 'மன்னன்'களையும் 'மன்னி'களையும் சட்டத்துன் விதி—விதியின் சட்டம் இனிமேல் சும்மா விடாது!— விடவே விடாது!

○ நல்ல தீர்ப்பைப் புரிந்து கொண்டுவிட்டது தமிழ்ச் சாதி!

○ நல்ல தீர்வைப் புரிந்து கொள்ளத் தொடங்கி விட்டனர் தமிழ்ப் பொது மக்கள்!

○ நான் மேற்கொண்ட சமுதாய இலக்கியப்பணி பயனுள்ளதாகவும் பயனளிப்பதாகவும் ஆகி வருகிறது!

○ என் கடன் பணியைத் தொடர ஒரு 'துர்வாசர்' போதுமா, என்ன?

○ வாழ்த்துகிறேன்.

○ வாழ்த்துங்கள்.

○○○

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,



தலைமை நிலையம்:
154, டி.டி.கே.சாலை, ஆழ்வார்பேட்டை, சென்னை-18.
கிளை நிலையங்கள் :
79, பிரகாசம் சாலை, (பிராடுவே) - சென்னை - 108.
91, கீழைத்தேர்த் தெரு, திருநெல்வேலி - 6.
18, ராஜவீதி, கோயமுத்தூர் - 1.
28, நகர் உயர் பள்ளிச் சாலை, கும்பகோணம் - 1.
24, நந்திகோபால் தெரு, திருச்சி - 2.
36, செர்ரி ரோடு, சேலம் - 1.
70/71, தாணப்ப முதலி தெரு, மதுரை - 1.